அறநூல்கள், சிலப்பதிகாரம், ஐங்குறுங்காப்பியங்கள், இலக்கண நூலான யாப்பெருங்கலம் போன்ற நூல்கள் சமண ஆசிரியர்களால் எழுதப்பட்டது.

சமண மதம், மக்களுடைய சமூக, அரசியல், மத வாழ்க்கையில் ஒரு பெரும் தாக்கத்தை ஏற்படுத்தியது. இலக்கியம், கலாச்சார துறைகளும் சமண மதத்தால் ஏற்றம் பெற்றன. அங்கங்கள் உபஅங்கங்கள், கல்பசாஸ்திரம் போன்றவை தலைச்சிறந்த சமண சமய இலக்கியங்களாகும்.

சந்திரகுப்த மௌரியர் மற்றும் கலிங்கமன்னன் காரவேலர் சமணமதத்தை தழுவினர். தக்காணத்தில் ராஷ்டரகூடர்கள் காஞ்சி மகேந்திரவர்ம பல்லவ மன்னன் ஆகியோர் சமணத்தை ஆதரித்தனர்.

சமணர்கள், கிர்நார், அபுமலை, காஞ்சிபுரம், சித்தன்னவாசல் மற்றும் கழுகுமலை போன்ற பல இடங்களில் அழகிய கோவில்களை அமைத்துள்ளனர்.

### புத்தமதம்

புத்தமதத்தை தோற்றுவித்தவர் சித்தார்த்தர். இவரது தந்தை சுத்தோதனர், தலைமை சாக்கிய குலத்தலைவர், இவரது அன்னை மாயா இவர் கி.மு.567–ல் நேபாளத்தின் தெராய் என்ற பகுதியில் லும்பினி என்ற இடத்தில் பிறந்தார். இவருக்கு செல்வமும் மகிழ்ச்சியும் நிறைந்த வாழ்க்கைச் சூழல் இருந்தது. இவர் யசோதரை என்ற இளவரசியை மணந்து இராகுலன் என்ற ஆண்மகனைப் பெற்றார். இவருக்கு ஆடம்பர சுக போக வாழ்க்கையில் சலிப்பு ஏற்பட்டது. பசி, பிணி, மூப்பு, இறப்பு மக்களை வாட்டி வதைப்பதைக் கண்டு மனதுருகினார்.

துன்பம் மனித வாழ்க்கையில் சித்தார்த்தரை ஆழமாக பாதித்தது. இப்பிடியில் இருந்து மனித இனத்தை மீட்க, வழிகாண முற்பட்டார். இவர் தனது 29–ம் வயதில் மனைவி யசோதரையையும், மகன் இராகுலனையும் விட்டு வெளியேறி ஒவ்வொரு இடமாய் சுற்றித்திரிந்தார். இந்நிகழ்வு பெரும்துறவு எனப்படுகிறது.

கௌதமர் தொடர்ந்து ஆறாண்டுகள் அலைந்து, திரிந்து துறவியாய் இருந்து கடும்தவம் புரிந்து, பிராமணர்களோடும், துறவிகளோடும் கலந்துரையாடல் செய்தார். அவர்களது சமய போதனைகள் அவருக்கு திருப்தி அளிக்கவில்லை. எனவே உண்மையை கண்டுபிடிக்க அவர் பல்வேறு வகையில் கடும் தவம் புரிந்து, தன்னையே வருத்திக் கொண்டார். இறுதியில் எல்லாவற்றையும் விடுத்து நிரஞ்சனா ஆற்றின் கரையோரம் உள்ள உருவெலா என்ற கிராமத்தில் உள்ள அரசமரத்தடியில் (போதிமரம்) அமர்ந்து தியானம் செய்தார்.



புத்தர்

தொடர்ந்து தியானம் மேற்கொண்டு, 49வது நாளில் மெய்யறிவை பெற்றார். அதன்பிறகு புத்தர் (மெய்யறிவு பெற்றவர்) என்றழைக்கப்பட்டார். அவர் மெய்யறிவு பெற்ற இடம் புத்தகயா என்று பெயர் பெற்றது. அவர் மெய்யறிவைப் பெற்ற பின்னர் வாரணாசிக்கு அருகிலுள்ள சாரநாத் என்னுமிடத்திலுள்ள மான்வனத்தில் தனது முதல் சமய சொற்பொழிவை நிகழ்த்தினார். இவரது முதல் சொற்பொழிவு தர்மசக்கர பிரவர்த்தனா (தர்மச் சக்கரச் சுழற்சியின் தொடக்கம்) என்று சிறப்பிக்கப்படுகிறது.

கபிலவஸ்து, மகதம் மற்றும் கோசலத்தை சார்ந்த அரச குடும்பங்கள்

பௌத்த மதத்திற்கு ஈர்க்கப்பட்டனர். கி.மு.487–ல் தனது எண்பதாவது வயதில் குசிநகரம் என்ற இடத்தில் இயற்கை எய்தினார்.

### புத்தரின் போதனைகள்

கடவுளை படைப்பவர் அல்லது விதியை படைப்பவர் என்பதில் புத்தருக்கு உடன்பாடு இல்லை. இவர் அனாத்மவாதா (ஆத்மா இல்லை) மற்றும் அனித்யா வாதா (எதுவும் நிரந்தரம் இல்லை மற்றும் எல்லா மாற்றத்திற்கு உரியது) என்பதைப் போதித்தார். வேதம் மற்றும் யாகங்கள் என்பவை உன்னதமானவை, புனிதமானவை என்பதை மறுத்தார். சாதிமுறையை நிராகரித்தார். மனிதன் தான் தன் விதியை உருவாக்குகிறான் என்பதை வலியுறுத்தினார்.

சாரநாத்தில் புத்தர் நிகழ்த்திய முதல் சமய சொற்பொழிவு அவரது சித்தாந்தங்களை கொண்டிருந்தது. அவரது போதனைகள் மிகவும் எளிமையானதாகவும் சமஸ்கிருதத்தை பயன்படுத்தாமல் மக்கள் புரிந்து கொள்ளும் மொழியான அதாவது பிராகிருதம் மற்றும் பாலி மொழியில் இருந்தது. அவரது போதனைகளின் சாராம்சம் நான்கு சிறந்த உண்மைகள் மற்றும் 'அட்டசீலம்' என்ற 'எண்வழிப்பாதையில்' அடங்கியுள்ளது.

### நான்கு சிறந்த உண்மைகள்

1. உலகம் துன்பத்தால் நிறைந்தது.

2. எல்லா துன்பங்களுக்கும் காரணமுண்டு. ஆசை, அறியாமை, பற்று துன்பத்திற்கான காரணங்கள் ஆகும்.

3. இத்தகைய துன்பங்களை ஒழிக்க வேண்டுமென்றால் அதன் காரணத்தை அழிக்க வேண்டும். அதாவது ஆசை ஒழிக்கப்பட வேண்டும்.

4. ஆசையை நீக்க ஒருவர் நேரிய வழியை பின்பற்ற வேண்டும்.

அவை 'எண்வழிப்பாதை' (அட்டசீலம்). அது மோட்சத்திற்கு அழைத்துச் செல்லும் இந்த பாதை சடங்குகளையும், தன்னையே வருத்திக்கொள்ளும் தவம் என்ற இரண்டையும் தவிர்ப்பதால், அதற்கு நடுவழி (மத்தியமிகா மார்கா வழி) அல்லது பொன்வழி என்று பெயர். ஆசை ஒழிக்கப்பட வேண்டும் என்றால் அட்டசீலம் என்ற எட்டு நன்னெறிகளை கடைபிடிக்க வேண்டும் என்று புத்தர் வலியுறுத்தினார்.

### எட்டு நன்னெறிபாதை கீழ்வருவனவற்றை கொண்டது

நன்னம்பிக்கை, நற்சிந்தை, நற்பேச்சு, நற்செயல், நல்வாழ்க்கைமுறை, நன்முயற்சி, நல் சிந்தனைக் குவிப்பு (தியானம்) மற்றும் நல் நினைவு.

இந்த எட்டு நன்னெறி பாதை, மிகுந்த துறவு நிலைக்கும், சுய இன்பத்திற்கும் நடுவே உள்ள வழியாகும். 'நிர்வாணம்' மனித வாழ்க்கையின் முக்கியமான நோக்கம் என புத்தர் போதித்தார். ஆசையை அழிப்பதினால், ஒருவன் 'நிர்வாணம்' அடைய முடியும். வழிபாடுகள் மற்றும் தியாகங்கள் ஆசையை விட்டொழிக்க முடியாது. அவர் தனிமனிதனின் ஒழுக்க வாழ்விற்கு முக்கியத்துவம் கொடுத்தார்.

கர்மா கொள்கைபடி, நிகழ்காலம் கடந்த கால செய்கைகளால் உறுதி செய்யப்படுகிறது. மனிதனின் நிலை அவன் சொந்த செயல்களைச் சார்ந்திருக்கிறது. அவனுடைய செயல் அல்லது கர்மா அவன் துன்பங்களுக்கு பொறுப்பாகின்றது. அவன் செயல் அவனது செய்கைகள் ஒழுக்கத்தின் அடிப்படையில் இருந்தால் முக்தியை அடையமுடியும். வெளிப்புற சக்தியோ, கடவுளோ அல்லது சடங்குகளோ முக்தியை கொடுக்காது. அதனால் மனிதன் தன் சொந்த விதிகளை தானே உருவாக்குகிறான்.

புத்தர் கடவுள் இருப்பதை ஏற்றுக்கொள்ளவோ, மறுக்கவோ இல்லை. அவர் தனிமனிதனைப் பற்றியும் அவனது காரியங்கள் பற்றியுமே அதிக அக்கறையோடு இருந்தார். புத்த மதம் ஆத்மா இருப்பதையே நம்பவில்லை. அன்பை பற்றிய எண்ணத்திற்கு முக்கியத்துவம் கொடுத்தார். அன்பை அகிம்சை (துன்புறுத்தாமை) வழியில் எல்லா

உயிரினங்களும் வெளிப்படுத்த முடியும் என்று வலியுறுத்தினார்.

புத்தர் அனைவரும் சமம் என்பதை போதித்தார். சாதிமுறையில் நம்பிக்கை இல்லை. அவரது சமத்துவ கொள்கைகளில் ஒதுக்கப்பட்ட சமூகம் ஈர்க்கப்பட்டது. பிராமணர்களது ஆதிக்கத்தை அவர் எதிர்த்தார். அவர் மனித குல சகோதரத்துவத்தை ஆதரித்தார்.

சடங்குகள் மற்றும் பலிகள் குறிப்பாக விலங்குகள் பலியிடுதலை புத்தர் சாடினார். அவர் வேதங்களின் ஆதிக்கத்தை ஏற்றுக் கொள்ளாமல், எதையும் ஆய்ந்தறிந்து உணர்ந்திட வேண்டும் என்றார்.

புத்தர் நன்னெறிகளுக்கு முக்கியத்துவம் கொடுத்தார். அவர் தனது சீடர்கள் உண்மையும், ஒழுக்கமும் நிறைந்த வாழ்வை நடத்த வேண்டும் என்று அறிவுறுத்தினார். துன்புறுத்தாமை, (இன்னா செய்யாமை) மற்றும் தவறான பழக்கங்களில் ஈடுபடாமை போன்றவற்றை மக்கள் பின்பற்றவேண்டும் என்று அறிவுறுத்தினார். புத்தர் தனது குறிக்கோள்களை பரப்பவும், மக்களுக்கு சேவை செய்யவும் சங்கத்தை ஏற்படுத்தினார். கௌதம புத்தரின் காலத்தில் அவரது சங்கம் மிக வேகமாக முன்னேற்றம் அடைந்தது. கனிஷ்கர் ஆட்சியில் நடைபெற்ற நான்காம் புத்தசமய மாநாட்டில், சங்கம் மகாயானம், ஹீனயானம் என இரண்டாக பிளவுப்பட்டது.

புத்தர் மற்றும் கன்பூசியஸ் போதனைகளில் இரண்டு கருத்துக்களில் ஒத்திருந்தது. அவை சாந்தம் (அமைதி) மற்றும் பகுத்தறிவு. அவர்களது தத்துவங்களும் கோட்பாடுகளும் கடவுளை மையமாக கொண்டதன்று. அவர்கள் நம்பிக்கையை விட காரணத்திற்கு முக்கியத்துவம் கொடுத்தனர்.

புத்தரின் **திருமறை பீடகங்கள்** என்றழைக்கப்படுகிறது. இவை மூன்று பிரிவுகளாக பிரிக்கப்படுகிறது. சுத்த, வினய, மற்றும் அபிதம்ம பீடகம் ஆகும்.

இத்தகைய தத்துவ மற்றும் அறிவார்ந்த விழிப்புணர்ச்சியினால், அன்றைய சமூக மற்றும் அரசியல் நிலைமைகள் மாற வேண்டிய நிலை ஏற்பட்டது. இந்த தத்துவ மேதைகள் மக்களை அவர்களது குறுகிய கண்ணோட்டத்தில் இருந்து விடுவித்து அவர்களை உலகளாவிய விசாலப் பார்வை உடையவர்களாக மாற்றியது. ஒரு மேம்பட்ட சமூக அமைப்பு மற்றும் மனிதாபிமானமுள்ள நிர்வாகமே மக்கள் மற்றும் அரசர்களது (இளவரசர்கள்) குறிக்கோள்களாக அங்கீகரிக்கப்பட்டது. வேள்விகளுக்கு பதிலாக நன்னெறிகள் வலியுறுத்தப்பட்டன. பகுத்தறிவிற்கு இசைந்த இந்தத் தத்துவங்கள் தனிமனித மற்றும் சமூக செயல்பாடுகளுக்கு ஒரு மேம்பட்ட நோக்கத்தை தந்தன. இத்தகைய வளர்ச்சி, மனித குல வரலாற்றில் முற்போக்கான மற்றொரு திருப்பு முனையாகும்.

## பயிற்சி

**அ. சரியான விடையைத் தேர்வு செய்க.**

1. அறிவார்ந்த எழுச்சியைக் கண்ட நூற்றாண்டு.

   அ) 5 ஆம் நூற்றாண்டு　　ஆ) 6 ஆம் நூற்றாண்டு

   இ) 7 ஆம் நூற்றாண்டு　　ஈ) 8 ஆம் நூற்றாண்டு

2. கன்பூசியஸ்–தத்துவம் சீனர்களின் மனதில்__________ஆண்டுகளுக்கு முன் செல்வாக்கு பெற்றது.

   அ) 1000　　ஆ) 2000　　இ)3000　　ஈ) 4000

3. ஜொராஸ்டிரிய சமயத்தைத் தோற்றுவித்தவர்.

அ) ஜொராஸ்டர் ஆ) புத்தர் இ) மகாவீரர் ஈ) கன்பூசியஸ்

4. 23 ஆவது தீர்த்தங்கரர்________.

அ) ரிஷபர் ஆ)பார்சவநாதர் இ)மகாவீரர் ஈ)புத்தர்

5. புத்தர் ஞான ஒளி பெற்ற இடம்.

அ) சாரநாத் ஆ) புத்த கயா இ) சாஞ்சி ஈ) கபிலவஸ்து

## ஆ. பொருத்துக.

| | |
|---|---|
| 1. ஜொராஸ்டிரியம் | புத்தர் |
| 2. ஜீனர் | மகாவீரர் |
| 3. யசோதரை | பௌத்தம் |
| 4. திரிரத்தினங்கள் | போதிமரம் |
| 5. சங்கம் | ராஜகிரகம் |
| | மஸ்தா |
| | புலன்களை வென்றவர் |

## இ. தலைப்புகளின் கீழ் கேட்கப்பட்டுள்ள அனைத்து வினாக்களுக்கும் விடையளி.

1. ஜொராஸ்டிரிய சமயம்

அ) ஜொராஸ்டிரிய சமயத்தை தோற்றுவித்தவர் யார் ?

ஆ) ஜொராஸ்டிரிய சமயத்தின் மையக்கருத்து யாது ?

இ) ஜொராஸ்டிரிய சமயத்தின் சமய வழிபாடு எதைச் சார்ந்தது ?

ஈ) சமய நடவடிக்கைகள் எம்முறையில் பின்பற்றப்பட்டன ?

2. சமணம்

அ) சமணசமயத்தில் எத்தனை தீர்த்தங்கரர்கள் இருந்தனர் ?

ஆ) முதல் தீர்த்தங்கரர் யார் ?

இ) கடைசி தீர்த்தங்கரரின் பெயர் என்ன ?

ஈ) நான்கு ஒழுக்கநெறிகளை தனது சீடர்களுக்கு போதித்தவர் யார் ?

3. மகாவீரர்

அ) மகாவீரரின் இயற்பெயர் என்ன ?

ஆ) மகாவீரர் எங்கே பிறந்தார் ?

இ) மகாவீரரின் மனைவியின் பெயர் என்ன ?

ஈ) மகாவீரர் எத்தனை ஆண்டுகள் கடும் தவம் புரிந்தார் ?

4. புத்தர்

அ) புத்தசமயத்தை தோற்றுவித்தவர் யார் ?

ஆ) புத்தரின் இயற்பெயர் என்ன ?

இ) புத்தரின் மனைவியின் பெயர் என்ன ?

ஈ) புத்தர் தமது முதல் சொற்பொழிவை எங்கே நிகழ்த்தினார் ?

## ஈ. சுருக்கமான விடையளி.

1. கி.மு. 6–ம் நூற்றாண்டினை விழிப்புணர்வு நூற்றாண்டு என்று ஏன் அழைக்கப்பட்டது ?
2. மஸ்தா பற்றி சிறுகுறிப்பு வரைக.
3. மகாவீரர் தனது சீடர்களுக்கு போதித்த நான்கு போதனைகள் யாவை ?
4. பீடகங்கள் பற்றி எழுது.
5. எந்த மாநாட்டில் சங்கம் இரண்டு பிரிவாகப் பிரிந்தது ?

## உ. விரிவான விடையளி.

1. கன்பூசியஸ் பற்றி விவரி.
2. ஜொராஸ்டிய சமயத்தின் முக்கியத்துவம் யாது ?
3. மகாவீரரின் போதனைகள் யாவை ?
4. மகாவீரர் போதித்த நன்னடத்தை நெறிகள் யாவை ?
5. புத்தரின் எண்வழி மார்க்கம் பற்றி விளக்கு.

# 3. இடைக்காலம்

## இடைக்கால ஐரோப்பா

ஐரோப்பிய வரலாற்றில் கி.பி 600 முதல் கி.பி.1500 வரை இடைக்காலம் என்று கூறப்படுகிறது. உலக நாடுகளில் ஒரே நேரத்தில் இக்காலம் துவங்கவில்லை. இடைக்கால வரலாறு இரண்டு பிரிவுகளாக வரலாற்று வல்லுநர்கள் பிரிக்கிறார்கள். ரோமானிய பேரரசு வீழ்ச்சியிலிருந்து கி.பி.1000 வரை இடைக்காலத்தின் முற்பகுதி என்றும், கி.பி.1000 முதல் கி.பி.1500 வரை இடைக்காலத்தின் பிற்பகுதி என்றும் குறிப்பிடப்படுகின்றன. இடைக்காலம் ரோமானியப் பேரரசு வீழ்ச்சியிலிருந்து துவங்குகிறது. இடைக்கால ஐரோப்பா இருண்ட காலமாகக் கருதப்பட்டது. ஏனெனில் குழப்பங்களும் புதிய சமுதாய தோற்றமும் எங்கும் இருந்தது. மைய அரசின் அதிகாரங்கள் பலவீனமடைய மக்கள் மீது நிலமான்யப் பிரபுக்கள் அதிக ஆதிக்கம் செலுத்தினர். புதிதாகத் தோன்றிய இஸ்லாமிய சமயம் உலக நாடுகளிடையே பெரும் தாக்கத்தினை உருவாக்கியது.

இடைக்கால ஐரோப்பிய வரலாற்றில் அரசியல் ரீதியாக நோக்கும்போது கிழக்கு ரோமானியப் பேரரசு அல்லது பைசாண்டியப் பேரரசு, கான்ஸ்டாண்டிநோபிளை தலைநகரமாகக் கொண்டு உருவாகியது. இப்பேரரசு கி.பி.1400 வரை கிழக்கு ஐரோப்பா முழுமையையும் ஆட்சி செய்தது. ரோமானிய வீரர்கள், வீரத்திலும், வெற்றியிலும் தங்களின் திறமைகளை வெளிப்படுத்தினர். இவர்களின் திறமையாலும், அறிவினாலும் சிறந்த ஆட்சியாளர்கள் தோன்றினர். ரோமப் பேரரசு வீழ்ச்சிக்குப் பிறகு, கி.பி.800–ல் பேரரசர் சார்லமேன் தனது பேரரசை, பிரான்ஸ், ஜெர்மனி மற்றும் இத்தாலியின் ஒரு பகுதியில் ஏற்படுத்தினார். இவரது மறைவிற்குப் பின் கி.பி.1000–ல் புனித ரோமப் பேரரசு உருவாகியது. இவ்வாறு கி.பி.14 ஆம் நூற்றாண்டு இறுதியில் ஐரோப்பிய அரசியல் வரைபடத்தில், பல்வேறு ஆட்சியாளர்களால் ஐரோப்பாவில் வெவ்வேறு இடங்களில், வெவ்வேறு காலங்களில் மாற்றங்கள் நடந்தது.



கான்ஸ்டான்டைன் I

ரோம் நகரம் ஒரே நாளில் கட்டப்படவில்லை. அதுபோல ரோமப் பேரரசின் வீழ்ச்சியும் திடீரென்று ஏற்படவில்லை. நீண்டகாலமாகவே மூன்று நூற்றாண்டுகளாகவே வீழ்ச்சியுற ஆரம்பித்தது எனலாம். கிபி.180 ஆம் ஆண்டு நிகழ்ந்த பேரரசர் மார்க்கஸ் அரோல்யஸின் மறைவு ரோமப் பேரரசுக்கு ஒரு திருப்பு முனையாகும். நாட்டின் பாதுகாப்பிற்கும், ஒருமைப்பாட்டுக்கும் அச்சுறுத்தல் நாட்டின் உள்ளேயும், வெளியேயும் இருந்தது. பேரரசின் வீழ்ச்சி இரண்டாம் நூற்றாண்டிற்கு பிறகு துவங்கியது. கிபி.476–ல் ரோமப் பேரரசு முழுமையாக வீழ்ச்சியடையுமுன் டயோக்லிஷியன் (கிபி 284 முதல் 305 வரை) பேரரசர் முதலாம் கான்ஸ்டான்டைன்

(கி.பி.306–337) மற்றும் மாபெரும் முதலாம் தியோடோசிஸ் (கி.பி.378–395) போன்ற திறமையான பேரரசர்களும் ஆட்சி செய்தனர்.

## ரோமப் பேரரசின் வீழ்ச்சிக்கான காரணங்கள்

சீசரின் வலிமையான ரோமானியப் பேரரசின் வீழ்ச்சி இயற்கையாக காலத்தால் ஏற்பட்டது. சூறாவளி, பூகம்பம், தீ, வெள்ளம் போன்ற இயற்கை சீற்றங்கள் நாட்டை அழித்தது. செல்வச் செழிப்பால் நாட்டில் நன்னடைத்தையின்றி ஒழுக்கக் கேடுகள் விளைந்தன. ரோமானியர்கள் தங்கள் பழமை வாய்ந்த பண்புகளான ஒழுக்கம், அரசுக்கு கட்டுப்படும் கடமை போன்ற நல்லொழுக்கங்களை இழந்தனர். திருச்சபையின் வளர்ச்சி ரோமானியப் பேரரசில் ஒரு பேரரசாக உருவாக்கியது. கொள்கையிலும், நம்பிக்கையிலும், திருச்சபை, அரசுக்கு எதிராக இயங்கியது. ரோமப் பேரரசின் அரசியல் செயல்களும் அரசியலமைப்புடன் ஆட்சிக்கு ஏற்றவாறு இல்லை. ஊழலும், ஆடம்பர வாழ்வும் நிலைமைகளை மேலும் சீரழித்தது. மிகப்பெரிய பரந்த பேரரசை கட்டுப்படுத்த இயலவில்லை. ரோமர்கள் தங்கள் ஆட்சிக்குட்பட்ட காலனி நாடுகளை சரியாக நடத்தவில்லை. ஒரே சீரான ஆட்சி நிர்வாகத்தை ஏற்படுத்த இயலாத பலவீனமான நிலையினால் அடிக்கடி போர்கள் ஏற்பட்டு வீழ்ச்சியடைந்தது.

## ரோமப் பேரரசின் வீழ்ச்சி

ரோமப் பேரரசு வர்த்தகத்திலும், தொழிலிலும் வளர்ச்சி அடைந்திருந்தது. காலனி நாடுகளின் முதலீடுகள் தவறான முறையில் சுரண்டப்பட்டது. ரோமானியர்கள் கடினமாக உழைக்காமல், அடிமைகளைக் கொண்டு வேலை வாங்குவதையும், போரிடுவதையும் விரும்பினர். ரோமப் பேரரசு, கொள்கையில் குடியரசு ஆட்சியை பின்பற்றினர். ஆனால் நடைமுறையில் மன்னர் ஆட்சியாக இருந்தது. மக்கள் மதிப்புள்ள தங்களின் பேச்சுரிமை சுதந்திரத்தை இழந்தனர். செனட் மற்றும் பொது அவை பிரபுக்களைக் கொண்டிருந்தது. எதேச்சதிக்காரர்கள் ஆட்சிக்கு வரும்போது அவர்களின் உதவியாளர்களாக செனட் இயங்கியதால் சமுதாயத்தில் குழப்பங்கள் ஏற்பட்டது. மக்களுக்கும் ஆட்சி செய்வோர்களிடம் பல்வேறு அதிருப்தியான எண்ணங்கள் இருந்ததால் ரோமப் பேரரசு அழியக் காரணமாக இருந்தது.

ரோமப் பேரரசில் மன்னருக்குப் பிறகு அவரது வாரிசுகள் ஆட்சி செய்ய வேண்டும் என்ற சட்டங்கள் இல்லை. எனவே உள்நாட்டு குழப்பங்கள், பல குழுக்களின் அமைப்பு, அலிசன் நடவடிக்கை, பேரரசை பலவீன மடையச் செய்தது. இவ்வாறு பரந்தப் பேரரசு, அடிக்கடி ஏற்பட்ட உள்நாட்டு போர்களாலும், ரோமானியர்களின் ஆடம்பர வாழ்வு, ரோமப் பேரரசர்களின் ஆட்சிமுறை, குழப்பமான சமுதாய சூழ்நிலை, அதிக வரி, காட்டு மிராண்டிகளின் படையெடுப்பு ஆகியவை ரோமப் பேரரசு வீழ்ச்சிக்கு வழிவகுத்தது.

## முரட்டுக் கூட்டத்தினரின் படையெடுப்பு

ரோமப் பேரரசு வீழ்ச்சியடைகின்ற காலங்களில் காட்டுமிராண்டிகள் எனப்படும் முரட்டுக் கூட்டத்தினரின் படையெடுப்பு அதிர்ச்சியூட்டும் நிகழ்ச்சியாக இருந்ததால் பேரரசு சிதறியது. கோத்துகள், ஹீனர்கள் மற்றும் வாண்டல்கள் என்ற முரட்டுக் கூட்டத்தினர் பெருமளவில் நாட்டில் நுழைந்து அவ்வப்போது பேரரசைத் தாக்கினர். அவர்களின் குறிக்கோள் வெற்றி பெற்ற பிரதேசங்களில் வாழும் மக்களிடம் கொள்ளையடிப்பதாகும். தேசப்பற்று இல்லாத முரட்டு கூட்டத்தை சேர்ந்த படையினர் சந்தர்ப்பம் கிடைக்கும் போதெல்லாம் அரசருக்கு எதிராக புரட்சி செய்வார்கள். இவ்வாறு முரட்டுக் கூட்டத்தினரின் தாக்குதல், உள்நாட்டு அமைதியை சீர்குலைத்த நிலையில் அரசர் மக்களிடம் வரி வசூலிப்பதை தவறவிட்டார். மக்களும் தங்களுக்கு பாதுகாப்பு இல்லை என உணர்ந்தனர். இத்தகைய இக்கட்டான

சூழ்நிலையில் மன்னர், பிரபுக்கள்,மக்கள் புதிய முறையான நிலமானிய முறையை பாதுகாப்பு, உரிமை,சட்டம் என்ற அடிப்படையில் ஏற்றுக் கொண்டனர்.

## நிலமானிய முறை

இடைக்காலத்தில் நிலமானிய முறை மிக முக்கியமானது. 'நிலமானியம்' என்ற வார்த்தை லத்தின் மொழிச் சொல் 'நிலம்' என்பதிலிருந்து பெறப்பட்டது. நிலங்களை மானியங்களாக (கொடையாக) பிரித்து இராணுவ உதவி பெறுவதற்கு அளிக்கப்படுவதாகும். இம்முறை முக்கியமான வேளாண்மை முறையை சார்ந்ததாகும். மக்கள் அல்லது குடியானவர்கள் இவ்வாறு பெறப்படும் நிலங்களுக்கு பிரபுக்களிடம் ஊதியம் இன்றி நிலங்களில் உழைத்து வரும் பலனில் ஒரு சிறு பகுதியை வாடகையாகவோ அல்லது வரியாகவோ கொடுப்பார்கள்.




நிலமானிய முறை

## நிலமானிய முறையின் சிறப்புகள்

நிலமானிய முறை என்பது ஒரு சமுதாய அமைப்பாகவும், நிர்வாகமுறை நிலவுடைமையாளர்களை சார்ந்தும் இருந்தது. இதன்படி எல்லா நிலங்களும் அரசருக்கு சொந்தம். அரசர் தனது அரசை பல மான்யங்களாகப் பிரித்து ஒவ்வொன்றையும் ஒவ்வொரு பிரபுக்களுக்கு ராணுவப் பணிக்கும், மற்றப் பணிக்கும் வழங்குவார். இதேபோல பிஷப்புக்கும் மற்ற குருக்களுக்கும் நிலமானிய முறைப்படி நிலங்கள் வழங்கப்பட்டது. இதற்கு பதிலாக அரசர் தனக்கு நெருக்கடி (அல்லது) ஆபத்து ஏற்படும் காலங்களில் இவர்களின் உதவியைப் பெறுவார். எனவே நிலமானிய முறை அரசியல் முறையில் அமைந்தது. மானியதாரர்கள் நிலங்களை பலப்பகுதிகளாகப் பிரித்து பாரன்களுக்கும் (சிறு நில உடமையாளர்கள்) பாரன்கள் மனோர்களுக்கும் (விவசாயிகளுக்கும்) வழங்குவார்கள். இவ்வாறு நிலமானிய முறையில் நிலமானியதாரர்கள் மான்யதாரர், பாரன்கள் மற்றும் மனோர் என மூன்று வகையாகப் பிரிக்கப்பட்டனர்.

## நிலமானிய முறையின் நன்மைகள்

நிலமானியமுறை மக்களை குழப்பத்திலிருந்து காப்பாற்றும் நிறுவனஅமைப்பாக இருந்தது. இடைக்கால சமுதாயத்தில் அமைதி, பாதுகாப்பு, ஒழுங்கைக் கொண்டுவந்தது. ஒரே இடத்தில் குவிந்திருக்கும் அதிகாரமாகயில்லாமல் பொறுப்புகளை பகிர்ந்து கொள்வதின் மூலம் புதிய அரசியல் வளர்ச்சியான பாராளுமன்ற ஜனநாயகம் பின்வரும் நூற்றாண்டுகளில் தோன்ற வழி வகுத்தது. ஆட்சி செய்வோர் படைகளில் பணியாற்றுவோர், நிலமானிய உடமையாளர்கள் என ஒவ்வொருவருக்கும் தனிப்பட்ட இராணுவ மற்றும் வேளாண்மை கடமைகள் நிர்ணயிக்கப்பட்டன. ஒரு மித்த நிலமானிய பொருளாதார முறை ஐரோப்பாவை குழப்பமான நிலையிலிருந்து காப்பாற்றியது. நைட் என்ற போர் வீரர்களின் திறமை, வீரம், மக்களிடையே தியாக உணர்வையும், பக்தியையும் ஊக்குவித்தது.

## நிலமானிய முறையின் தீமைகள்

நிலமானிய முறை நன்மை, தீமை கலந்த வரமல்ல அது பாரன்களின் ஆதிக்கத்தைக் கொண்டுவந்தது. பிரபுக்களிடையே ஏற்பட்ட பொறாமை மன்னருக்கும் பிரபுக்களிடையேயும் ஏற்பட்ட சந்தேகம் உள்ளூர் நிலமானியதாரர்களை ஊக்குவித்தது. மன்னர் எதற்கும் நிலமானியதாரர்களின் படை உதவிக்காகச் சார்ந்திருக்கும் நிலை ஏற்பட்டது. காலப் போக்கில், நிலமானிய உடமையாளர்களாக மாறிய திருச்சபையின் ஆதிக்கம்

போப்பாண்டவர்களுக்கும், மன்னர்களுக்கும் இடையே பிரச்சனைகளை உருவாக்கியது.

நிலமானிய முறை நிலையான தேசிய அரசைக் கொண்டு வருவதற்கு எதிராக அமைந்தது. நிலமானிய பிரபுக்கள் மக்களின் மீது கடுமையாக ஆதிக்கம் செலுத்தினர். இவர்கள் மேலும் அரசரிடமோ அல்லது சக பிரபுக்களிடமோ போரிட்டுக் கொண்டிருந்தனர். பேரரசில் ஒரே மாதிரியான போர் பயிற்சி நாட்டின் படைகளுக்கு கொடுக்கப்படவில்லை. மானியத்திற்கு மானியம் பல வகையான முறையும், நீதியும் பின்பற்றப்பட்டது. ஏழை பணக்காரன் என இருவகையான சமுதாயம் தோன்றியது. இதனால் மக்கள் அதிகமாகப் பாதிக்கப்பட்டனர். திருச்சபை மிகப் பெரிய நிலமானிய அமைப்பாக மாறியது. இவ்வாறு நிலமானிய முறை மன்னருக்கும் திருச்சபைக்கும் இடையே மிகப்பெரிய பிரச்சனையை உருவாக்கியது.

நிலமானிய முறை சமுதாயத்தில் வசதியுள்ளோர், வசதியற்றோர் என்ற நிலையை உருவாக்கி சீரழித்தது. கல்வி வளர்ச்சியும், கல்வி கற்றல் வளர்ச்சியும் முழு அளவில் செயல்படவில்லை. நீதி கேலிக் கூத்தாகியது.

## நிலமானிய வீழ்ச்சி

12ஆம் நூற்றாண்டிற்கு முன்பே நிலமானியம் என்ற சமுதாய அமைப்பிலும், 13ஆம் நூற்றாண்டில் அரசியல் அமைப்பிலும் இவ்வீழ்ச்சி துவங்கியது. பூர்ஷீவாக்கள் எனப்பட்ட நடுத்தர வர்க்கமும், ஏகாதிபத்திய ஆட்சியும் அரசியலில் மதிப்பீடுகளை மாற்றியது. ஐரோப்பாவின் பலபகுதிகளில் தோன்றிய இந்த நிறுவனங்கள் நிலமானிய முறையை அழித்தது. சிலுவைப் போரும், துப்பாக்கி மருந்து அல்லது வெடி மருந்து கண்டுப்பிடிப்பும் நிலமானிய முறைக்கு முற்றுப்புள்ளி வைத்தது.

இக்காலக்கட்டத்தில் மத நம்பிக்கைக்கும், ஆட்சியாளருக்கும் இடையே ஏற்பட்ட போராட்டத்தில் மத நம்பிக்கையினர் வெற்றிப் பெற்றனர். இந்த நம்பிக்கைக் காலம் அறிந்து அல்லது புரிந்து விளக்கம் பெறும் காலமாகியது. நிலமானிய சட்டத்திற்கு எதிராக ரோமானிய புதுப்பிக்கப்பட்டச் சட்டங்களின் மேம்பட்டத் தன்மையை புரிந்துக் கொள்ளப் பட்டன.

## போப்பாண்டவர் எழுச்சி

கான்ஸ்டன்டைன் மன்னர் காலத்திலிருந்து ரோமானிய பேரரசர்கள் திருச்சபையையும் கிறித்தவர்களையும் ஆதரிக்கத்தொடங்கினர். 6ஆம் நூற்றாண்டில் போப்பாண்டவர் திருச்சபைக்கும், ஆட்சிச் செய்யும் பேரரசுகளுக்கும், பேரரசர்களுக்கும் தலைவராவார். சில நேரங்களில் அரசர்களை விட மிக்க அதிகாரம் உள்ளவராக போப் விளங்கினார். எனவே ஐரோப்பாவில் போப்பாண்டவர், அரசர்கள் என இரட்டை தலைமை முறை ஏற்பட்டது. பின் இதுவே அரசுக்கும், திருச்சபைக்கும் விரோதத்தை வளர்த்தது. போப் பாண்டவர் இயேசு கிறிஸ்துவின் பிரதிநிதியாகக் கருதப்பட்டார். திருச்சபைகளில் உயர்ந்த அதிகாரம் உடையவராய், அரசருக்கும் மேலானவராகவும் இருந்தார். அரசர்களுக்கு வழிக்காட்டுவதும் ஆணைகளை பின்பற்ற வேண்டும் என்றும் கட்டாயப்படுத்தினார். கிறித்தவர்களின் சேவை பணிகளின் மூலம் போப்பாண்டவரின் அதிகாரம் தலைமையாகியது. போப்பின் உன்னத தன்மைக்கு மடாலயங்கள் முக்கியமாக செயல்பட்டது. துறவிகளின் வாழ்க்கையும், மடாலயங்களின் கல்விப் பணியும் மக்களை கவர்ந்தது. குறிப்பிடத்தக்க மதிப்புள்ளப் பங்கையும் இது செயலாக்கியது.

## போப்பாட்சியின் விளைவு

மக்களிடையே இறை பயபக்தியும், ஏழைக்கும், எளியவர்க்கும் உதவும் கருணை மனப்பான்மையும் சமுதயத்தில் தோன்றியது. ஒழுக்கம் நன்னடத்தைகளுக்கு அழுத்தம் தரப்பட்டது. அழகிய ஆலயங்கள் தோன்றின. சமயப் பாடல்கள் (பாமாலை)

கொள்கைகள் இலக்கியத்தின் கருப்பொருளாகியது. போப்பாண்டவர் ஆட்சியில் இறைவன் முன் ஏழை, பணக்காரன் இருவரும் சமம் என்பதால் சமத்துவ உணர்வு வளர்ந்தது. போப் ஆட்சியில் கல்வி நிறுவனங்கள் மூலம் அறிவு வளர்ச்சிப் பெற்றது. தற்போதைய தலைமுறை வளர்ச்சியடைய வழி வகுத்தது.

### புனித ரோம பேரரசு

ரோம பேரரசு என்பது திருச்சபையுடன் அரசர் ஒருங்கிணைத்து ரோம பேரரசை உருவாக்கியது ஆகும். பண்டையக்கால ரோமப் பேரரசில் கிறித்தவ சமயத்திற்கு இடமில்லை. ஆனால் புதிய ரோமப் பேரரசில் கிறித்தவ சமயம் அரசு சமயமாக அங்கீகரிக்கப்பட்டது. ரோம் அதிகாரத்தின் மைய தலைமையிடமாக இருந்தது. எனவே புதிய ரோமப் பேரரசின் நோக்கம் கிறித்தவ அரசுகளை சகோதரத்துவத்துடன் ஒருங்கிணைப்பதாகும். பேரரசில் அரசர் போப் ஆண்டவரால் முடிசூடப்பட வேண்டும் என்று இருந்தது. பழைய ரோமப் பேரரசு வெளிப்பார்வையில் இத்தாலி முறையிலும், புதிய பேரரசு நடத்தையிலும், தன்மையிலும் கிறித்துவ முறையில் இருந்தது. அரசர் பரந்த அதிகாரம் பெற்றிருந்தார். போப்பாண்டவரும் அரசரின் கட்டுப்பாட்டில் இயங்க வேண்டும். பின் போப்பாண்டவர்க்கு பேரரசர்களும், மற்ற உலகமும் சொந்தம் என்ற அதிகாரம் பெற்றார். ஐரோப்பாவில் பிரிந்திருந்த பல பகுதிகளை ஒரே பேரரசாக போப்பாண்டவரும் பேரரசரும் கொண்டு வந்தனர். குடியரசு தன்மையை பலவீனப்படுத்தி பரம்பரை முறையை பலப்படுத்தியது. புதிய ரோமானிய பேரரசு நிலமானிய பிரபுக்களையும், நிலமானிய தன்மைகளையும் நசுக்கியது. முக்கியமாக ஜெர்மனியில் தேசிய ஒற்றுமையை கொண்டுவந்தது. மேலும் இங்கிலாந்து, பிரான்சு, மற்றும் ஸ்பெயின் போன்ற நாடுகள் தோன்றவும் ரோமானிய பேரரசு காரணமாக இருந்தது.

### நகரங்களும் பல்கலைக் கழகங்களும்

புதிய நகரங்கள் கைவினைத் தொழிலுக்கும், வாணிபத்திற்கும் மைய இடமாக இடைக்காலத்தில் தோன்றியது. ஆரம்பக் காலத்தில் நகரங்கள் சிறியவைகளாக இருந்தன. கலைத் தொழில் கலைஞர்கள் அதிகரிக்க வியாபாரம் பெரிய அளவில் வளர்ந்தது. நகரங்கள் வளர, மேற்கு ஐரோப்பியர் கிழக்கு நாடுகளுடன் வாணிபம் செய்யவும், இத்தாலியின் அமைவிடம் ஏற்றதாய் இருந்ததால் அதிகமான நன்மையையும் அடைந்தது. ஜெனிவா, பிளாரன்ஸ், வியன்னா போன்ற நாடுகள் வர்த்தக மையமாகியது. ஜெனிவா வெனிஸ் கடற்கரை நகரங்களாக அமைந்ததால் பிளாரன்ஸ், பிசா, மிலான் ஆகிய இடங்கள் வாணிப வழித்தடங்களாக அமைந்தது. ஆலந்து, ஜெர்மனி, பிரான்ஸ், இங்கிலாந்து போன்ற நாடுகளில் பல நகரங்கள் துறைமுகமாகவோ, வர்த்தக வாணிப மையமாகவோ வளர்ந்தது. இந்நகரங்கள் இடைக்கால ஐரோப்பிய நாகரீகத்திற்கும் பண்பாட்டிற்கும் மைய இடமாகிறது.

### கல்வி

முந்தைய இடைக்காலத்தில் திருச்சபை, மக்களுக்கு கல்வியை புகட்டியது. இலக்கியம், கணிதம், வேதாந்தம், தர்க்க சாஸ்திரம் போன்ற பாடங்களை கற்பித்தது. சில மடாலயங்கள் கல்வி கற்கும் மையங்களாயின. பல பல்கலைக்கழகங்களும் ஏற்படுத்தப்பட்டது.



போலக்னோ பல்கலைக்கழகம்

## ரோமப் பேரரசும் அதன் எல்லைகளும்

துறவிகள் பல்கலைக் கழகங்களை ஆளுகை செய்தனர். வேதாந்தத்திற்கும், தத்துவத்திற்கும் முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது. வரலாறும், அறிவியலும் நிராகரிக்கப்பட்டது. புத்தகங்கள் கைகளால் எழுதப்பட்டது. சட்டம் பயில போலக்னோ பல்கலைக்கழகம் புகழ்வாய்ந்ததாக இருந்தது. ஸ்பெயின் பல்கலைக்கழகத்தில் அராபிய மொழியும், எபிரேய மொழியும் போதிக்கப்பட்டது.

பிரான்ஸ் நாட்டின் பாரீஸ் பல்கலைக்கழகம் போன்று இங்கிலாந்து ஆக்ஸபோர்டு பல்கலைக்கழகம் வடிவமைக்கப்பட்டது பனிரெண்டாம் நூற்றாண்டில் கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகம் தொடங்கப்பட்டது.

### இஸ்லாமிய எழுச்சி

தென்மேற்கு ஆசியாவில் அமைந்துள்ள பாலைவன பகுதியான அரேபியா, இஸ்லாமிய சமயத்தின் பிறப்பிடமாக இடைக்காலத்தில் விளங்கியது. பல்வேறு போர் குணமுள்ள குடியினரை ஒன்றுபடுத்தி ஏற்படுத்திய முக்கியமான சமயம் இஸ்லாமிய சமயம். இஸ்லாமிய சமயத்தைத் தோற்றுவித்தவர் முகம்மது நபி. இஸ்லாமிய சமயம் ஒரே கடவுள் என்ற கொள்கையை பின்பற்றி உயர்ந்த ஒழுக்கக் கோட்பாட்டிற்கு முக்கியத்துவம் கொடுத்தது. அரேபியாவில் மெக்கா, மெதீனா என்ற இரு நகரங்கள் புனித யாத்திரை மையங்களாகும். இலக்கியம், அறிவியல், மருத்துவம் போன்றவற்றிற்கு அதிக முக்கியத்துவம் கொடுத்தனர்.



மெக்கா

இஸ்லாமியர்களின் நம்பிக்கையும், கடின உழைப்பும் அவர்களின் வெற்றிக்குக் காரணம். எனவே பல நாடுகளை வென்று ஆட்சியை விரிவுப்படுத்தினர். இவர்களின் பண்பாடு மேற்கிலிருந்த கிறித்தவர்களையும், கிழக்குப் பகுதி செல்வந்த கிறித்தவர்களுடன் இணைக்கும் பாலமாக இருந்தது. மேலும் கிறிஸ்தவ பண்பாட்டிற்கு பயமுறுத்தும் தாக்குதலாகவும் இருந்தது. அரபியர்கள் தாங்கள் வென்ற பகுதிகளில் இஸ்லாமிய சமயத்தை பரப்பவேண்டும் என்று விரும்பினர். இஸ்லாமிய சமயம் வேகமாக பரப்ப வேண்டும் என்ற ஆர்வம், அவர்களின் பேரரசு விரிவடைய காரணமாக அமைந்தது.

### சிலுவைப் போர்கள் (1095 – 1444)

சிலுவைப் போர்கள் என்ற புனித போர் மேற்கு ஐரோப்பிய கிறித்தவர்களுக்கும் துருக்கிய இஸ்லாமியருக்கும் இடையே மத்திய கிழக்குப் பகுதியிலுள்ள புனித பூமியை மீட்க ஏற்பட்டதாகும். ஒவ்வொரு கிறித்தவர்களும் கிறித்துவின் நினைவுச் சின்னம் இருக்கக் கூடிய இடமான புனித இடத்திற்கு புனித யாத்திரை செல்ல வேண்டும் என்பதை புனித கடமையயகக் கருதினர்.



சிலுவைப் போர்

ஜெருசலேம் என்ற முக்கியமான இடத்தை கி.பி.1071ல் துருக்கியர்கள் எகிப்திய பதிமித் காலிப்பிடமிருந்து கைப்பற்றினர். கி.பி1076 வரை காலிப்புகளின் சகிப்புத் தன்மையால்

# மத்தியாகல ஐரோப்பிய நகரங்களும் மற்றும் வியாபார வழிகளும்

கிறித்தவர்களுக்கு எந்தப் பிரச்சனையும் இல்லை. ஆனால் 1076 ல் சகிப்புத்தன்மையில்லாத செல்ஜீக் துருக்கியர் ஜெருசலேமை கைப்பற்றினர். இவர்களின் சித்திரவதையிலிருந்தும், துன்புறுத்தலிருந்தும் பாதுகாக்க சிலுவைப் போர்கள் நிகழ்ந்தது. போப் இரண்டாம் அர்பன் உலகின் பல்வேறு பகுதிகளில் வாழும் கிறித்தவர்களை ஒன்றுப்படுத்த அழைப்புக் கொடுத்தார். வேறு பல காரணங்களும் இப்போருக்கு காரணமாக இருந்தது. மத ஆர்வம் உள்ளவர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து தங்களின் சமயக் கடமையை வெளிப்படுத்தினர். சிலர் கொள்ளையடிக்கவும், வழிப்பறிச் செய்யவும் தங்களின் போர்த்திறமையை வெளிப்படுத்தினர். சிலுவைக்கும், பிறைக்கும் இடையே நடந்த இந்த எட்டு சிலுவைப் போர்களில், முதல் நான்கு போர்கள் மிக முக்கியமானவையாகும். கிளெர்மான்ட் மாநாடு முடிந்தப் பின் அனைவரும் தங்களின் ஆடைகளில் சிலுவையை சின்னமாக கிறித்தவர்கள் அணிந்தனர். இஸ்லாமியர் தங்களின் கொடிகளில் பிறையை வரைந்தனர். எனவே இந்தச் சிலுவைப் போர் "சிலுவைக்கும் பிறைக்கும் நடந்த போர்" எனலாம்.

### முதல் சிலுவைப் போர் கி.பி.1096– கி.பி.1099

கி.பி.1096 முதல் கி.பி.1099 வரை நடைபெற்ற முதல் சிலுவைப் போர் பிரான்சு ஆதிக்கத்தின் படையெடுப்பாக இருந்தது. ஜெர்மனி அரசர் நான்காம் ஹென்றி இங்கிலாந்து அரசர் இரண்டாம் வில்லியம், பிரான்சின் முதலாம் பிலிப் ஆகியோர் இப்போரில் பங்கேற்கவில்லை. முதல் சிலுவைப் போர் கி.பி.1096–ல் துவங்கியது. பல இன்னல்களுக்குப்பின் கிறித்தவர்கள் ஜெருசலேமை அடைந்தனர். முதல் சிலுவைப் போரில் பாலஸ்தீனம், ஆசியாமைனர் என்ற இடங்களில் இஸ்லாமியர்களை தோற்கடித்து 1099–ல் ஜெருசலேமைக் கைப்பற்றினர். காட்பிரே புல்லியன் தலைமையில் ஜெருசலேமில் புதிய தனி அரசு அமைக்கப்பட்டது. இப்பேரரசில் டிரிபோலி, இடெஸ்சா, ஆண்டியோக் என்ற நாடுகள் அடங்கும். கிறித்தவர்கள் எண்பது ஆண்டுகள் இங்கு வாழ்ந்தனர்.



ஜெருசலேம்

### இரண்டாம் சிலுவைப் போர் 1147 – 1148

இஸ்லாமியர்கள் நீண்டகாலம் அமைதியாகயில்லாமல் மோசூல் பகுதியின் படைத்தலைவர் ஜங்கி தலைமையின் கீழ் படையெடுத்து இடெஸ்சா பகுதியை மீண்டும் கைப்பற்றி முற்றுப்புள்ளி வைக்கப்பட்டது. இடெஸ்சா இழப்பு மீண்டும் கிறித்தவர்களைப் போர் தொடுக்கத் தூண்டியது. செயின்ட் பெர்னார்டு கிளயர் வக்ஸ் என்பவர் இரண்டாம் சிலுவைப் போரின் நாயகன். இரண்டாவது சிலுவைப் போர் பிரஞ்சு மன்னர் ஏழாம் லூயி ஜெர்மானிய மன்னர் மூன்றாம் கன்ராடு ஆகியோர்களுடன் இணைந்து நடத்தினார். ஆனால் இருவரையும் தனித்தனியாக ஆசியா மைனர் பகுதியில் துருக்கியர்கள் தோற்கடிக்க, இரண்டாம் சிலுவைப் போர் தோல்வியில் முடிந்தது.

### மூன்றாம் சிலுவைப் போர் கி.பி. 1189– 1192

மூன்றாம் சிலுவைப் போர் அனைத்துப் போர்களிலும் பிரமிக்கதக்கப்போர் ஆகும். ஐரோப்பிய மன்னர் என்று செல்லமாக அழைக்கப்படும் ஜெர்மனி மன்னர் பிரடரிக் பார்பரோசா, பிரஞ்சு மன்னர் பிலிப் இரண்டாம் அகஸ்டஸ், இங்கிலாந்து சிங்க இதயம் என்று அழைக்கப்பட்ட முதலாம் ரிச்சர்ட் ஆகியோர் கலந்துக் கொண்டனர். ஆனால் இவர்களின் படைகள் இரு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு, வெவ்வேறு

காலங்களில் தாக்கினர். பார்பரோசா கி.பி.1189லும், பிலிப் மற்றும் முதலாம் ரிச்சர்ட் கி.பி.1190லும் போரைத் துவக்கினர். பிலிப், ஏசர் பகுதிக்கு முன்னேறினார். கி.பி.1191–ல் சைப்ரஸ் கைப்பற்றியப்பின் ஏசர் பகுதியை அடைந்தார். எதிர்பார விதமாக பிலிப் தனது சுகவீனத்தை சாக்குப்போக்குகாட்டி பிரான்சு திரும்பினார்.



முதலாம் ரிச்சர்ட்

முதலாம் ரிச்சர்ட் சலாடின் என்பவரை அர்சுப் என்ற இடத்தில் தோற்கடித்தார். இந்தப் போரின் மூலம் வெற்றிப் பெற்றமைக்காக ரிச்சர்டுக்கு சிங்க இதயம் என்ற பட்டம் கொடுக்கப்பட்டது. இறுதியில் கிறித்தவர்களுக்கு புனித பூமியான ஜெருசலேமுக்கு புனித பயணம் மேற்கொள்ள சாரசென் சலாடின் அனுமதித்தன் மூலம் சிலுவை வீரர்களும் சலாடினின் பெருந்தன்மையையும் வீர செயலையும் காப்பாற்றினர். மூன்றாம் சிலுவைப்போர் ஒருபகுதிதான் வெற்றியடைந்தது. டியூடோனிக் நைட் (படைவீரர்கள்) என்ற புதிய படை இப்போரில் பங்கேற்றினர்.

## நான்காம் சிலுவைப் போர் 1202 – 1204

நான்காம் சிலுவைப் போர் முற்றிலும் தோல்வியில் முடிந்தது. கிறித்தவர்கள் தங்கள் மதத்தின் மீது கொண்ட பற்றை இழந்தனர். இப்போர் கி.பி.1202 ல் துவங்கி இரண்டு ஆண்டு காலம் நீடித்தது. கி.பி. 1204ல் கான்ஸ்டாண்டிநோபிள் வீழ்ச்சியடைந்தது. பால்டுவின் பிளாண்டர்ஸ் தலைமையில் லத்தின் பேரரசு அமைக்கப்பட்டது. கி.பி.1261 வரை ஆட்சியில் இருந்தார். இந்த நான்காம் சிலுவைப் போரில் படைகள் குறிக்கோள் அற்று தவறான முறையில் நடத்தப்பட்டது.

## குழந்தைகளின் சிலுவைப் போர் கி.பி.1212

கி.பி. 1212ல் சிறுவர்களின் சிலுவைப் போர் ஜெர்மனியின் நிக்கோலஸ் மற்றும் பிரான்சின் ஸ்டீபன் தலைமையில் நடைப்பெற்றது. அவர்கள் கடவுள் அவர்களை பாதுகாத்து வழி நடத்துவார். அவர்களின் வீரச் செயல்களில் பாதுகாப்பார் என்று இதயப்பூர்வமாக நம்பினர். போதிய ஆயத்தம் இன்றி குழந்தைகள் இப்போரை நடத்தியதால் யாருமே இத்தாலிக்கு பிறகு முன்னேறவில்லை, அதிகமானோர் பசியினாலும், பட்டினியாலும் உயிரிழந்தனர்.

## சிலுவைப் போர் தோல்விக்கான காரணங்கள்

சிலுவைப் போர்கள் வெகுத் தொலைவில் தனிமையான, மருத்துவ வசதி இல்லாத பகுதிகளில் நடைபெற்றது. மக்களின் ஆர்வத்தையும் பலத்தையும் இழக்கச் செய்தது. இவர்களின் முக்கிய நோக்கமான புனித பூமி ஜெருசலேமை மீட்க வேண்டும் என்ற முயற்சியும் ஒடுக்கப்பட்டது.

சிலுவைப் போர்கள் திட்டமிட்டப்படி செயல்படவில்லை. தலைவர்களிடையே ஒற்றுமையின்மையும், ஒழுக்கமின்மையும் இருந்தது. போப்பாண்டவருக்கும் பேரரசுக்கும் இடையே இருந்த தீராத போராட்டமும் ஒன்றாகும். பைசான்டியரின் திறமையின்மையான அரசும் சிலுவைப் போர் தோல்வியடைய முக்கியமான காரணம் ஆகும்.

## சிலுவைப் போரின் விளைவுகள்

பாலஸ்தீனத்திலுள்ள புனித இடங்களை மீட்பதில் சிலுவைப் போர் வீரர்கள் தவறிவிட்டனர். ஆனால் இப்போர் ஸ்பெயின், போர்ச்சுக்கல் நாடுகளில் புதிய கிறித்தவ அரசை அமைக்க வழி செய்தது.

பைசான்டியரின் அதிகாரமும் பெருமையும் குறைந்தது. பிறகு இவர்களால் தாங்கள் இழந்த பெருமையை மீண்டும் மீட்க இயலவில்லை. வேகமாக பரவும் தோற்று நோய் போல இப்போரின் நிகழ்ச்சி பால்டிக் கடற்கரையில் இருந்த மக்களையும், ஜெர்மானிய மக்களையும் கிறித்தவ மதத்திற்கு மாற்றும் சக்தியாக மிக வேகமாக வளர்ந்தது. நிலமானியத் திட்டம் வீழ்ச்சியுற சிலுவைப் போர்கள் காரணமாகும். இராணுவச் சட்டங்களையும் பாதித்தது. போப்பாண்டவரின் அதிகாரமும் செல்வாக்கும் உயர்ந்தது.

நீண்ட பிரயாணங்கள் கடந்து சிலுவைப் போர்கள் மேற்கொண்டதால், புதிய நிலவழி கண்டுப்பிடிக்கும் சந்தர்ப்பம் ஏற்பட்டது. போர்ச்சுக்கல், ஸ்பெயின் போன்ற நாடுகளுக்கு புதிய வியாபாரவழிகள் கண்டுப்பிடிக்கப்பட்டது. கடல் வழிகள் கண்டுபிடிக்க திசைக்காட்டும் கருவி பயன்பட்டதால் கப்பல் கட்டும் தொழிலும் வளர்ச்சி யடைந்தது.

சிலுவைப் போர்கள் வினா கேட்டறியும் அறிவு வளர காரணமாய் இருந்ததால் 16 ஆம் நூற்றாண்டில் மறுமலர்ச்சி தோன்றியது.

## பயிற்சி

### அ. சரியான விடையைத் தேர்வு செய்க.

1. பண்டைய இடைக்காலம்__________என அழைக்கப்பட்டது.

அ) பொற்காலம் ஆ) செம்புக் காலம்

இ) இருண்டக்காலம் ஈ) இரும்புக்காலம்

2. நிலமானிய முறை__________சமூகமுறையை சார்ந்தது.

அ) மதம் ஆ) படை இ) வணிகம் ஈ) நிலம்

3. முகம்மது நபி கண்டுப்பிடித்த சமயம்

அ) கிறித்துவம் ஆ) இந்து இ) இஸ்லாம் ஈ) சீக்கிய மதம்

4. “சிங்க இதயம்” என்ற பட்டப்பெயர் பெற்றவர்

அ) பிலிப் ஆ) முதலாம் ரிச்சர்ட் இ) பிரடரிக் ஈ) நிக்கோலஸ்

5. கிறித்தவர்களின் புனித பூமி

அ) மெக்கா ஆ) இத்தாலி இ) வாட்டிகன் ஈ) ஜெருசலேம்

### ஆ. பொருத்துக.

| | |
|---|---|
| 1. கான்ஸ்டன் டைன் | மலை ஜாதியினர் |
| 2. நிலமான்யம் | நிலம் |
| 3. கேம்பிரிட்ஜ் | கான்ஸ்டாண்டிநோபிள் |
| 4. ஜெனோவா | கடற்கரை நகரம் |
| 5. முரட்டுக் கூட்டத்தினர் | பல்கலைக்கழகம் |
| | நடத்தை |
| | பேரரசர் |

## இ. சிறு குறிப்பு வரைக.

1. நிலமானிய முறை என்றால் என்ன ?
2. மேனார் என்பது யாது ?
3. முக்கியமான கடற்கரை நகரங்கள் மற்றும் வர்த்தக இடங்கள் இடைக்கால ஐரோப்பாவில் யாவை ?
4. போர்க்காலத்தில் அரசர் எவ்வாறு படைஉதவியைப் பெறுகிறார் ?
5. குழந்தைச் சிலுவைப் போரின் தலைவர்கள் யாவர் ?
6. இடைக்கால ஐரோப்பாவின் முக்கிய பல்கலைக் கழகங்கள் யாவை ?
7. சிலுவைப் போருக்கான நோக்கங்கள் யாவை ?
8. திருச்சபையின் பொறுப்பாளர் யார் ?

## ஈ. கொடுக்கப்பட்ட தலைப்பின் கீழ் உள்ள அனைத்து வினாக்களுக்கும் விடையளி

1. நிலமானிய முறை

   அ) நிலமானியம் என்ற வார்த்தை எதிலிருந்து பெறப்பட்டது ?

   ஆ) நிலமானிய பிரபுக்கள் யார் ?

   இ) நிலமானிய கிராமம் எவ்வாறு அழைக்கப்பட்டது ?

   ஈ) ஐரோப்பாவில் எந்த முறை பின்பற்றப்பட்டது ?

2. போப் எழுச்சி

   அ) திருச்சபையின் தலைவர் யார் ?

   ஆ) போப்புக்கும் அரசருக்கும் உள்ள உறவு எவ்வாறு இருந்தது ?

   இ) போப்பாண்டவரின் பங்கு யாது ?

   ஈ) இரட்டைத் தலைமையின் விளைவு யாது ?

3. சிலுவைப் போர்கள்

   அ) கிறித்தவர்களின் புனித பூமி எது ?

   ஆ) உலக கிறிஸ்தவர்களுக்கு அழைப்புக் கொடுத்தவர் யார் ?

   இ) கவுன்சில் கூட்டம் எந்த இடத்தில் கூடியது ?

   ஈ) எத்தனை சிலுவைப் போர்கள் நடைப்பெற்றது ?

4. முகம்மது நபி

   அ) இஸ்லாமிய சமயம் எங்கே தோன்றியது ?

   ஆ) இஸ்லாமிய சமயத்தை தோற்றுவித்தவர் யார் ?

   இ) அரேபியாவின் முக்கிய நகரங்கள் யாவை ?

   ஈ) இஸ்லாமிய சமயத்தின் முக்கியத்துவம் யாது ?

## உ. பத்தியளவில் விடையளி.

1. முரட்டுக் கூட்டத்தினரின் படையெடுப்பை விவரி.
2. ரோமப் பேரரசின் வீழ்ச்சிக்கானக் காரணங்களை எழுது.
3. ஐரோப்பாவில் இஸ்லாமிய சமய எழுச்சியைப் பற்றி விவரி.
4. சிலுவைப் போரின் விளைவுகளை விவரி.

## எ. செய்முறை பயிற்சி.

ஐரோப்பா வரைப்படத்தில் கீழ்க்கண்ட இடங்களை குறிக்கவும்.

1. அ) ரோம் ஆ) கான்ஸ்டாண்டிநோபிள் இ) வெனிஸ்
ஈ) ஜெனிவா உ) பாரிஸ் ஊ) லண்டன் எ) பிசா ஏ) பிளாரன்ஸ்

2. அ) இத்தாலி ஆ) கிரீஸ் இ) ஸ்பெயின் ஈ) இங்கிலாந்து
உ) பிரான்சு ஊ) ஜெர்மனி எ) அரேபியா

# 4. நவீன காலத்துவக்கம்

## அறிமுகம்

இருண்ட காலம் என்னும் இடைக்காலத்திலிருந்து நவீன காலத்திற்கான ஐரோப்பிய மாற்றத்தைக் குறிக்கும் அடையாளங்களாகவும், மாற்றத்திற்கான காரணிகளாகவும் சில போக்குகளும், ஏற்றங்களும் இருந்தன. அவற்றை மறுமலர்ச்சி, மனிதத்துவம், எதனையும் கேள்விகளுக்கு உட்படுத்தும் (ஆராயும்) உணர்வு, புவியியல் கண்டுபிடிப்புகள், சமயசீர்திருத்தம் என வகைப்படுத்தலாம்.

கி.பி.476ஆம் ஆண்டில் நிகழ்ந்த மகத்தான ரோமானியப் பேரரசின் வீழ்ச்சியுடன் ஐரோப்பிய வரலாற்றின் தொன்மைக்காலம் (முற்காலம்) முடிவடைந்தது. இப்பேரரசை வீழ்த்திய படையெடுப்பாளர்களான காட்டுமிராண்டிக் கும்பல்களுக்கு இலக்கிய மொழிகளிலும், கலைகளிலும் ஆர்வமற்றவர்களாக இருந்தனர். இத்தகைய கல்வியும் கலைகளும் புறக்கணிக்கப்பட்டதால் ஐரோப்பா அறியாமை இருளில் மூழ்கியது. அழகு ஒரு சூழ்ச்சி வலை; இன்பம் பாவம்; உலகமே ஒரு மாயத் தோற்றம்; மனிதன் துயரத்தில் அழிந்து போகின்றவன்; இறப்பு மட்டுமே உறுதியானது; நம்பிக்கைக்கும் கீழ்படிதலுக்கும் ஆதாரமாக உள்ள அறியாமையும் கடவுளுக்கு ஏற்புடையதே; நுகர்வுத்தவிர்ப்பும், மட்டுப்படுத்துதலும் பாதுகாப்பான வாழ்க்கை நெறிகள்; இவைதான் இடைக்காலத் திருச்சபையால் வலியுறுத்தப்பட்ட உறுதியான கருத்துக்களாகும். ஆனால் பதினாறாம் நூற்றாண்டின் துவக்கத்தில், கிரேக்க, இலத்தீன் இலக்கியங்கள் மீண்டும் புதுப்பிக்கப்பட்டதின் விளைவாக 'பகுத்தறிவு காலம்' (Age of Reason) மலர்ந்தது. நிலவியிருந்த மரபுகளுக்கு எதிர்ப்பாக மறுமலர்ச்சி இயக்கம் அமைந்தது. எதையும் கேள்விகளுக்கு உட்படுத்தும் அறிவுணர்ச்சி எழுச்சி பெற்றது. திருச்சபையால் கூறப்படுபவற்றை கண்மூடித்தனமாக நம்பும் போக்கைக் கைவிட்டு, அவற்றைப் பற்றி சந்தேகப்படவும், கேள்வி கேட்கவும், மறுதலிக்கவும் மக்கள் முன் வந்தனர். இந்த பகுத்தறிவு உணர்ச்சி, அறிவியல்–கட்டிடக்கலை–சிற்பக்கலை–ஓவியம்–இலக்கியம் – புவியியல்–சமயம் உள்ளிட்ட அனைத்துத் துறைகளிலும் மேம்பட்ட மாறுதல்களைத் தோற்றுவிக்கும் ஊக்கியாக விளங்கியது.

## மறுமலர்ச்சி

மறுமலர்ச்சி என்றால் புதுப்பித்தல், மீட்டுருவாக்கம், மறுபிறப்பு என்று பொருள்படும். அறிவுக் காலம் (Age of Reason) என்பது தொன்மையான கிரேக்க, ரோமானிய செம்மொழி இலக்கிய காலத்தின் உணர்வைப் புதுப்பித்தல் என்பதைக் குறிக்கிறது.

மறுமலர்ச்சி "விடுதலை மற்றும் வெளிப்பாடு" ஆகியவற்றைக் குறிக்கின்றது. அறிவுத்தளத்தில் அது கலை, இலக்கியங்களின் புதுப்பித்தலைக் குறிக்கின்றது: அரசியல் தளத்தில் இது போப்பாண்டவரின் உலகளாவிய அதிகாரத்தின் அழிவைக் குறிக்கிறது; அத்துடன் நன்கு அமைக்கப்பட்ட தேசிய அரசுகளின் எழுச்சியையும் வலுப்பெறுதலையும் குறிக்கிறது. சமூகத் தளத்தில் சமூகத்தில் மனிதன் என்பவனுக்கு தனி மனிதன் என்னும் அடையாளம், மனிதனது தனித்தன்மை ஆகியவற்றை மறுமலர்ச்சி குறிக்கின்றது. சமய நிலைமையில், உலகளாவிய திருச்சபை என்னும் கருத்து சிதைந்து தேசிய திருச்சபைகள் எழுச்சி பெற்றதைக் காணலாம். இவ்வாறு மறுமலர்ச்சி என்பது மாந்தரது பன்முக நடவடிக்கைகளிலும் தொன்மைக் (செம்மொழிக்) கால உணர்வுகள் புத்துயிரூட்டப்பட்டதைச் சுட்டுகிறது.

## இத்தாலியில் மறுமலர்ச்சி

ஐரோப்பிய மறுமலர்ச்சியின் பிறப்பிடம் இத்தாலி. இதனை ஐரோப்பாவின் கல்விக்கூடம் என்பர். இடைக்காலத்தில் நிலமானிய முறை இத்தாலிய மண்ணில் வேரூறன்ற முடியவில்லை. மக்களின் செயல்பாடுகளை பிரபுக்களும் திருச்சபையும் கட்டுப்படுத்தினர். காலப் போக்கில் சிலுவைப் போர்கள் நிலமானிய முறையின் எச்சங்களுக்குச் சாவுமணி அடித்தன. வெடிமருந்துக் கண்டுபிடிப்பும், தேசிய அரசுகளின் எழுச்சியும் சுதந்திரமான வலிமையான நகர அரசுகளின் எழுச்சியும் இவற்றோடு இணைந்து வந்தன.



அச்சு இயந்திரம்

வட இத்தாலி, கலை மற்றும் இலக்கியத்தை போற்றும் இடமாக அமைந்தது. மேலும் ரோமானிய அற்புதத்தை மக்களுக்கு நினைவூட்டும் ஒரு நாகரீகத்தின் தாயகமாக இத்தாலி இருந்தது. மறுமலர்ச்சியின் காலத்தில் அறிஞர்கள் வட்டார மொழிக்கு முக்கியத்துவம் கொடுத்தனர். இத்தாலியில் வலிமையான நடுவண் மன்னராட்சி இல்லாததால் மாபெரும் அறிவார்ந்த அறிஞர்களுக்கு சுதந்திரம் கிடைத்தது. பதினான்காம் நூற்றாண்டில் மிகச்சிறந்த இத்தாலியக் கவிஞரான தாந்தே–யின் தெய்வீக இன்பியல் வெளியிடப்பட்டதுடன் மறுமலர்ச்சி இயக்கம் துவங்குகிறது. பின் வந்த நூற்றாண்டில் அது முழுமை பெற்றது.

மறுமலர்ச்சி இயக்கம் இரு பெரும் பிரிவுகளை கொண்டிருந்தது. மனிதத்துவ இயக்க கட்டம் அல்லது பண்டைய கால கலை மற்றும் இலக்கியத்தின் புத்துயிர் பெற்ற கட்டம் எனலாம். இரண்டாவது, செம்மைக் கலைகள் முறைப்படுத்தப்பட்ட காலம் ஆகும். இலக்கிய மறுமலர்ச்சியின் முன்னோடி பெட்ராக் ஆவர். இவர் பிளேட்டோ, சிசரோ மற்றும் பலரது கையெழுத்துப் பிரதிகளை ஒன்று சேர்த்து அதற்கு புத்துயிர் கொடுத்தார். பெட்ராக்கின் சீடரான பொக்காசியோ தம் குருவின் பாதையை பின்பற்றினார்.



இறுதி விருந்து

கி.பி.1453 ஆம் ஆண்டு கான்ஸ்டான்டிநோபிளைத் துருக்கியர்கள் கைப்பற்றியதால், மனிதத்துவ இயக்கம் விரைவுபடுத்துவதற்கு வழிவகுத்தது. அச்சு இயந்திரத்தின் கண்டுபிடிப்பால் பல பழைய, புதிய நூல்கள் அச்சிடப்பட்டு, குறைந்த விலையில் மக்களுக்கு கொடுக்கப்பட்டன. இதன்மூலம் பெரும் இலக்கியப்புரட்சி ஏற்பட்டது.

மறுமலர்ச்சி, கலைகளில் புதிய உத்திகளை புகுத்தியது. இடைக்காலத்தில் பண்டைய கிரேக்க–ரோமானிய கலைச்சின்னங்களின் பெரும்பகுதியை படையெடுப்பாளர்கள் அழித்தனர். மக்களின் அனைத்து கலாச்சார செயல்பாடுகளையும் திருச்சபை தன் கட்டுபாட்டுக்குள் வைத்திருந்தது. திருச்சபை கலைகளின் மீது ஆதிக்கம் செலுத்தியது. சமயத்தை நிலைப்படுத்தும் நோக்கிலேயே கலைப்படைப்புகள் உருவாக்கப்பட்டன. மறுமலர்ச்சியானது,

மக்கள் மனதில் கிரேக்கக் கலை மற்றும் இலக்கியங்களின் மீது பெருத்த ஈடுபாட்டினை ஏற்படுத்தியது. படிப்படியாக ரோமானிய உணர்வுகள் சமயம் சார்ந்த கலைகள் உள்ளிட்ட அனைத்துக் கலைகளிலும் வெளிப்பட ஆரம்பித்தன.



மோனலிசா

லியானார்டோ டா–வின்சி ஒரு பல்துறை மேதை, சிறந்த எழுத்தாளர், விஞ்ஞானி, படைப்பாளி, பொறியாளர், கட்டிடக் கலை நிபுணர், ஓவியர் எனப் பல துறைகளில் தேர்ச்சி பெற்றிருந்தார். இதன் விளைவாக கிறித்துவ செல்வாக்கின் கீழ் பெருமளவு இருந்த போதிலும் கட்டிடக்கலை, சிற்பக்கலை, ஓவியம், இசை மற்றும் நுண்ணறிவுகளில் அதீத முன்னேற்றம் காணப்பட்டது. மைக்கேல் ஏஞ்சலோ, லியானார்டோ டாவின்சி, ரபேல் மற்றும் திதியன் ஆகியோர் மிகச்சிறந்த ஓவியர்களாக இருந்தனர்.



மடோனா

மைக்கேல் ஏஞ்சலோவின் இறுதித் தீர்ப்பு, லியானார்டோ டாவின்சியின் சிறந்த ஓவியமான மோனலிசா மற்றும் இறுதி இரவு சாப்பாடு ரபேலின் மடோன்னாவும் சிறந்த ஓவியங்களின் எடுத்துக்காட்டுகளாகும். ஓவியங்களில் வண்ணக் கலவைகளைக் கையாளுவதில் புகழ்பெற்றவர் திதியன் ஆவார். மூத்த பீட்டர் புருகலின் மக்கள் ஓவியங்களில் விவசாயிகளின் வாழ்க்கை நிகழ்வுகள் இடம்பெற்றன.

### சிற்பக்கலை

சிற்பக்கலையில், சிறந்த அழகான சிற்பங்கள் உருவாக்கப்பட்டன. கட்டிடக்கலையில் பழங்கால சிலைகளை கட்டிடக்கலை நிபுணர்கள் வடித்தனர். கட்டிடக்கலைக்கு ரோமாபுரியில் உள்ள புனித பீட்டர் தலைமை கிறித்துவ கோயில் எடுத்துக்காட்டாக விளங்குகிறது. மைக்கேல் ஏஞ்சலோவின் 'மோஸஸ்' மறுமலர்ச்சி கால சிற்பக்கலைக்கு மிகச்சிறந்த எடுத்துக்காட்டாகும்.



புனித பீட்டர் தேவாலயம்



புனித பீட்டர் தேவாலயம் உள் தோற்றம்

## இசை

பதினான்காம் நூற்றாண்டில் இசையில் மிகப்பெரிய முன்னேற்றம் ஏற்பட்டது. வாய்வழி பாடல்களைவிட இசைக்கருவிகள் மீது மக்கள் நாட்டம் கொண்டனர். இசையில் பல மாற்றங்கள் கொண்டு வரப்பட்டன. பிற கலைகளைப் போல் இசைக்கும் இத்தாலியே வழிவகுத்தது. திருச்சபையில் மட்டுமே இருந்த இசையில் மாற்றம் ஏற்பட்டு புதிய வடிவில், புதிய இசைக்கருவிகளைக் கொண்டு இசை சமய சார்பற்றதாக்கப்பட்டது.



லியனார்டோ டா வின்சி

## மனிதத்துவத்தின் எழுச்சி

கடவுளையும், திருச்சபையையும் மையமாக கொண்ட இலக்கிய செயல்பாடுகளில் இருந்து மாறி மனிதனை மையமாகக் கொண்ட இலக்கிய முனைப்புகளுக்கு மனிதத்துவம் என்று பெயர். மனிதத்துவம் பண்டைய கிரேக்க ரோமானிய இலக்கியங்களில் காணலாம். இடைக்காலத்தில் திருச்சபையின் ஆதிக்கம் மேலோங்கி இருந்தது. மக்கள் வாழ்க்கை சமயத்தின் திருச்சபையின் கட்டுப்பாட்டில் இருந்தது. ஆகவே, இலக்கியமும், கலைகளும் சமயத்தை மையப்படுத்தியவையாக இருந்தன. மக்கள் இவ்வுலகையும், மானிட வாழ்க்கைப் பற்றியும் மனிதனின் அன்றாட வாழ்க்கை பிரச்சனைகளைப் பற்றியும் சிந்திக்கவில்லை. கடவுளைப் பற்றியும் மறுஉலகைப் பற்றியுமே அவர்கள் சிந்தனை இருந்தது. ஆனால் மறுமலர்ச்சியின் விளைவாக பண்டைய கிரேக்க ரோமானிய இலக்கியங்களில் மக்களுக்கு மீண்டும் நாட்டம் ஏற்பட்டது. மனிதனை மையப்படுத்திய கலையில் நாட்டம் ஏற்பட்டு, இடைக்கால பண்பாடு மற்றும் நாகரீகம் மீதான அவர்களது பற்று அழிய ஆரம்பித்தது.

## மனிதத்துவம்

மனிதத்துவத்தின் நவீன கால தோற்றுவிப்பாளர் பெட்ராக் ஆவார். தாந்தே மற்றும் பிற எழுத்தாளர்கள் இவருக்கு உறுதுணையாக இருந்தனர். பிளாரன்ஸ் நாட்டின் அக்கால அரசரான லோரங்கோ டி மெடிசி, அறிஞர்களை ஆதரித்தார். பல எழுத்தாளர்களுக்கு உறைவிடம் அளித்தார்.



ஆண்ட்ரூ வெசாலியஸ்

மனிதத்துவம் இத்தாலியில் இருந்து ஐரோப்பாவில் பல நாடுகளுக்கு பரவியது. மைக்கேல் ஏஞ்சலோ, மாக்கியவல்லி, லியானார்டோ டா வின்சி, டோன்டேலோ போட்டிசெலி, ரோபியா, ஃபிசினோ மற்றும் பலர் இத்துறையில் சிறந்து விளங்கினர். பேரரசர் சார்லஸிக்கு மருத்துவராக இருந்த ஆண்ட்ரூ வெசாலியஸ் என்பவர் "மனித உடலமைப்பு பற்றிய ஏழு நூல்கள்" என்ற

நூலை எழுதினார். லியானார்டோ டா வின்சி எதிர்கால ஆகாயக் கப்பல் என்பதற்கான வரைபடத்தை உருவாக்கினார்.

மனிதனின் மகிழ்ச்சியும் முன்னேற்றமுமே பண்டைய கிரேக்க ரோமானிய இலக்கியங்களின் நோக்கங்களாக இருந்தன. இடைக்கால ஐரோப்பிய சமூகம் திருச்சபையின் கட்டுப்பாட்டில் இருந்ததினால், திருச்சபை நலன்களுக்கு இசைவான இலக்கியங்களை மட்டுமே அனுமதித்து ஆதரித்தது. வாழ்க்கையே பொருளற்றது, மகிழ்ச்சியைத் தேடுவது பாவகரமானது என்றெல்லாம் போதனை செய்யப்பட்டது. இத்தகைய வாழ்க்கையில் நம்பிக்கையிழந்த ஆன்மீக வெளிப்பாடுகள் திருச்சபையால் ஆதரிக்கப்பட்ட இலக்கியங்களில் காணப்பட்டன. கிரேக்க ரோமானிய இலக்கிய உணர்வுகளின் புத்துயிர்ப்பால் ஐரோப்பாவெங்கும் புதிய மனிதனை மையப்படுத்தும் இலக்கியப் போக்கு ஊக்குவிக்கப்பட்டது.

### விஞ்ஞானத் துறை



திசை காட்டும் கருவி

மறுமலர்ச்சியின் சிந்தனை அறிவியல் துறையிலும் பாதிப்பை ஏற்படுத்தியது. ஃப்ரெயர் ரோஜர்பேக்கன் 'நவீன அறிவியலின் தந்தை' எனக் கருதப்படுகிறார். பார்த்தறிவது பரிசோதித்து உறுதி செய்வது என்பதை அறிவியல் வழிமுறையாகக் கொண்ட முன்னோடியான இடைக்கால அறிவியலார் ரோஜர் பேக்கன் ஆவார். வானவியல், கணிதம், வேதியியல், இயற்பியல் மற்றும் மருத்துவத்தில் சிறப்பான முன்னேற்றங்கள் ஏற்பட்டன. சூரியனை உலகம் சுற்றி வருகிறது என்பதை கோபர்நிகஸ் கண்டுபிடித்தார். தொலைநோக்கியை, கலிலியோ அமைத்தார். இவ்விரு விஞ்ஞானிகளும் சூரியன் தான் இவ்வண்டத்தின் 'மையம்' என்பதற்கு அதாவது சூரியக் குடும்பம் தங்கள் பங்கை அளித்தனர். "புவியீர்ப்பு விசையை" நியூட்டன் கண்டுபிடித்தார். கெப்ளர் என்பவர், வானவியல் கணிதத்திற்கு அடிக்கல் நாட்டினார். இக்காலகட்டத்தில் தான் அச்சுப் பொறி கண்டுபிடிக்கப்பட்டது. மானிட வாழ்க்கையில் ஒரு புரட்சிகரமான மாறுதலையும், எண்ணற்ற விளைவுகளையும் இப்புவியியல் கண்டுபிடிப்புகள் ஏற்படுத்தின. கொலம்பஸ், வாஸ்–கோடா–காமா மற்றும் மெகல்லன் போன்ற மிகச்சிறந்த மாலுமிகள் இத்துறையில் இருந்தனர். சீனாவில் இருந்து கண்டுபிடிக்கப்பட்ட திசைகாட்டும் கருவி, பூமத்திய ரேகையின் தெற்கு பகுதிக்கு பயணம் மேற்கொள்வதற்கு மிகச்சிறந்த உதவியாக இருந்தது.



கெப்ளர்

## மறுமலர்ச்சியின் விளைவுகள்

இலக்கியத்தின் முன்னேற்றத்தால் மக்களிடையே சிந்தனை ஆற்றல் வளர்ச்சியுற்றது. அதனால் எதையும் கண்மூடித்தனமாக ஏற்றுக்கொள்ளாமல் பகுத்தாராய்ந்து உண்மையை மட்டும் ஏற்றுக்கொள்ளும் மனப்பாங்கு ஏற்பட்டது. ஆய்வுக் கண்ணோட்டம் வளர்ச்சியுற்றது. அறிவியல், கலை, அரசியல், சமயம் மற்றும் இலக்கியம் ஆகிய துறைகளில் குறிப்பிடத்தக்க மாறுதல்கள் ஏற்பட்டன.

மறுமலர்ச்சியால் தேசிய மொழிகள் வளர்ச்சியுற்றன. மறுமலர்ச்சியின் தூண்டுதலினால் மக்களின் படைப்புத்திறன் அதிகரித்தது. இது புதிய கண்டுபிடிப்புகளுக்கு வழிகோலியது.

மறுமலர்ச்சிக்கு முன்பு, கிரேக்க ரோமானிய தொன்மைச் சின்னங்களில் மக்களுக்கு எந்த ஒரு ஈடுபாடும் இல்லாமல் இருந்தது. ஆனால் மறுமலர்ச்சிக்குப் பிறகு தொல்பொருள் நினைவுச் சின்னங்கள் மீது நாட்டம் கொண்டனர். இதனால் அகழ்வாராய்ச்சி அறிவியல் உருவாயிற்று.



எராஸ்மஸ்

பகுத்தறிந்து ஆராயும் சிந்தனையால் மக்களுக்கு சமய நம்பிக்கையில் உள்ள ஓட்டைகளை (குறைபாடுகள்) தெரிந்து கொள்ள முடிந்தன. அச்சுப்பொறி கண்டுபிடிப்பால் ஏராளமான புத்தகங்கள் அச்சடிக்கப்பட்டு வெளியிட முடிந்தது.

புதிய கண்டுபிடிப்புகள் மற்றும் புகழ் பெற்ற மனிதர்களின் எழுத்துக்கள் மக்களுடைய வாழ்க்கையை முழுமையாக மாற்றி அமைத்தது. இதன் மூலம் தேச பக்தியும், தனியுரிமை கோட்பாடும் வளர்ந்தது. இதன் விளைவாக இங்கிலாந்து, பிரான்ஸ், ஹாலந்து, போர்ச்சுகல் மற்றும் ஸ்பெயின் போன்ற தேசிய நாடுகள் உருவாயிற்று.

பண்டைய இலக்கியங்களின் மீட்சியால் கிறித்துவ கோட்பாடுகள் மிகவும் பலவீனப்பட்டு, மானிட உணர்வுகளுக்கு உயிர் கொடுக்கப்பட்டது. வரலாற்றியல், அறிவியல் அடிப்படையில் மாற்றியமைக்கப்பட்டது. மறுமலர்ச்சி மனிதத்துவத்தின் உணர்வுகளை மனித குலத்திற்கு வெளிப்படுத்தும் தன்மையில் முடிவடைந்தது. பண்டைய ரோம கிரேக்க மொழி மற்றும் இலக்கிய ஆராய்ச்சி இயற்கையிலேயே மனித இனத்தைச் சார்ந்ததாக இருந்தது. மனிதத்துவத்தின் பண்பாட்டில் முக்கியமான பங்கு வகித்தவர்கள் மனிதத்துவவாதிகள் என்று அழைக்கப்பட்டனர். பதினான்காம் நூற்றாண்டில் பெட்ராக் விதைத்த மனிதத்துவத்தின் விதையின் கனியை பதினாறாம் நூற்றாண்டில் எராஸ்மஸ் பறித்தார். ஐரோப்பா மற்றும் அமெரிக்கா போன்ற நாடுகளில் மேனாட்டுக் கல்வியில் இன்னும் வாழ்ந்து கொண்டிருக்கிறது.

## சமயச் சீர்திருத்த இயக்கம்

சீர்திருத்தம் என்ற சொல் கத்தோலிக்க திருச்சபையில் ஏற்பட்ட சமய சீர்திருத்த இயக்கத்தைக் குறிக்கிறது. கிறித்தவர்களில் பிராட்டஸ்டண்டுகள் (எதிர்பார்ப்பாளர்கள்) எனப்படும் ஒரு புதிய பிரிவை உருவாக்கியது. இந்த பிராட்டஸ்டண்டுகள் ரோம கத்தோலிக்க திருச்சபையில் இருந்து உடைந்து புதிய திருச்சபையை, தேசிய வரையறைகளின் மீது உருவாக்கினர். பதினாறாம் நூற்றாண்டில் நிலவிய சமூக, பொருளாதார மற்றும் அரசியல் நிலமைகளினால் சமயச் சீர்த்திருத்தம் என்ற சமய இயக்கம் உருவாகியது.

இடைக்காலத்தில், பாதிரியார், பிஷப், ஆர்ச்பிஷப் – கார்டினல் என்ற பல அடுக்கு அதிகாரிகளைக் கொண்ட அதிகார மையமான திருச்சபையின் தலைவராக ரோம் நகரில் போப்பாண்டவர் இருந்தார். ஒவ்வொரு கிறித்தவனும் தனது வாழ்க்கையில் திருச்சபையில் பாதிரியார்களின் துணை கொண்டு ஏழுவிதமான புனிதச் சடங்குகளைச் செய்ய வேண்டியிருந்ததால். இதன் மூலம் கிறித்தவர்களின் தனிப்பட்ட வாழ்க்கையின் மீது முழுமையான கட்டுப்பாடு கொண்டதாக திருச்சபை விளங்கியது. இந்த அதிகாரத்தை திருச்சபை அனைத்து விதங்களிலும் தவறாகப் பயன்படுத்தியது.

திருச்சபையின் கீழுள்ள நியமனங்கள் அதிக பணம் தருபவர்களுக்கு விற்கப்பட்டன. இவ்வாறு திருச்சபைப் பதவிகளை வாங்கியவர்கள், தங்களது பதவிகளின் மூலம் ஆற்ற வேண்டிய பணிகளுக்காக மிகமிக அதிகமான கட்டணங்களை கிறித்துவ விசுவாசிகளின் மீது திணித்தனர். மறுமலர்ச்சி மூலம் வளர்ந்த புதிய கற்றல் மற்றும் முதலாளித்துவத் தன்மை சில குருமார்களை செல்வாக்குள்ளவர்களாக்கியது. போப்பாண்டவரும் ஏனைய மதகுருமார்களும் இளவரசர்களைப் போன்று ஆடம்பரமாக வாழ்ந்தனர், ஊழல்கள் மூலம் ஏராளமான சொத்துக்களைக் குவித்தனர். ஆடம்பரம், ஒழுக்கக்கேடுகள், சூதாட்ட விடுதிகள் என்பனவற்றுள் குருமார்கள் வாழ்ந்தனர். திருமணம் போன்றவற்றில் திருச்சபையின் கடுமையான கட்டுப்பாட்டு விதிகளிலிருந்து விதிவிலக்குத் தருவதற்கு செல்வமும், செல்வாக்கும் மிக்க தனிப்பட்டவர்களிடமிருந்து பெரும் தொகையைப் பெற்றுக் கொண்டனர்.

இதைத் தவிர, திருச்சபையின் கோட்பாடுகளுக்கும், கருத்துக்களுக்கும் இசைவில்லாத எதுவும் மத விரோதம் என்று கூறப்பட்டது. இந்த மத விரோதச் செயலுக்காக, மாற்றுக் கருத்தை வெளியிட்டவர்கள் எரித்து கொலை செய்யப்பட்டனர். எடுத்துக்காட்டாக 1415ஆம் ஆண்டு ஜான் ஹஸ் என்ற மதகுரு இவ்வாறு நெருப்பிலே பொசுக்கப்பட்டார். தேசிய உணர்வுகளின் எழுச்சியும் திருச்சபைக்கு எதிராக அமைந்தது. ஸ்பெயின், பிரான்ஸ் மற்றும் ஐரோப்பாவின் பல இடங்களில் எழுச்சி பெற்ற வலிமையான அரச வம்சங்கள் போப்பாண்டவரின் ரோமானிய மேலாதிக்கத்தை எதிர்க்கலாயின. ஐரோப்பாவெங்கும் திருச்சபை பலவிதமான வரிகளை வசூலித்தது. அவ்வாறு வசூலித்த தொகையில் பெரும் பகுதி, கத்தோலிக்கத் தலைமையகமான ரோமிற்குக் கொண்டு செல்லப்பட்டது. ஜெர்மனி, நெதர்லாந்து, இங்கிலாந்து போன்ற வெவ்வேறு ஐரோப்பிய நாடுகளின் கிறித்தவர்கள் இந்த வழக்கத்தை வெறுத்தனர். மேலும் இந்நாடுகளின் மன்னர்கள், தங்களது அரச அதிகாரத்தின் மீது திருச்சபையின் மேலாதிக்கத்தை மட்டுமன்றி, தங்களது பகுதிகளிலுள்ள திருச்சபை நிலங்களுக்கு அரசரின் வரிகளிலிருந்து விலக்கு அளிக்கப்பட வேண்டியிருந்ததையும் மறுத்துக் குரல் எழுப்பினர்.



மார்ட்டின் லூதர்

லூதரின் கிளர்ச்சிக்கு உடனடிக் காரணம் 'பாவமன்னிப்புச் சீட்டுகள் விற்பனை' செய்ததாகும். மிகப்

பிரம்மாண்டமான புனித பீட்டர் திருச்சபையை போப்பாண்டவர் கட்டிக்கொண்டிருந்தார். இத்திருச்சபையை கட்டுவதற்கு அதிக பணம் தேவைப்பட்டது. போப்பாண்டவர் பிற துணை திருச்சபை நிறுவனங்களுக்கு பீட்டர் திருச்சபையைக் கட்டுவதற்காக பொருள் திரட்டுமாறு கட்டளை இட்டார். டொமினிக்கன் தலைமைப் பாதிரியார் ஜோஹன் டெட்சல் பொருள் திரட்டுவதற்காக பாவ மன்னிப்புச் சீட்டுகளை விற்கும். புதிய முறையை மேற்கொண்டார். புனித பீட்டர் ஆலயத்தை கட்டுவதற்கு தரும் பணம் அதன் தொகைக்கேற்ப ஒருவனது பாவச் சுமையைக் குறைக்கும் என்று கூறப்பட்டது. ஒருவன் பாவச்செயலை புரிந்து விட்டு, போப்பிற்கு ஒரு குறிப்பிட்ட தொகையை அளிப்பதன் மூலம் தண்டனையில் இருந்து தப்பிவிட முடியும் என்ற நிலை உருவாகியது.

பாதிரிமார்களின் இத்தகைய இழிவான வியாபார தந்திரம் அதிர்ச்சியை உருவாக்கியது. ரோமானிய திருச்சபையின் பாவமன்னிப்பு சீட்டு விற்பனையை எதிர்த்து தீவிர கிறித்தவ மத குருவான மார்ட்டின் லூதர் போர்க் கொடி உயர்த்தினார். கி.பி.1517–ல், மார்டின் லூதர், பாவ மன்னிப்பு சீட்டு விற்பனைக்கு எதிராக 95 வாதங்களைத் தொகுத்து அறிக்கையாக எழுதி சாக்சனி அரசில் உள்ள விட்டன்பர்க் மாதாக்கோயில் கதவில் பதித்தார். இவருடைய அறிக்கை மொழி பெயர்ப்பு செய்யப்பட்டு, பிரதிகள் எடுக்கப்பட்டு, 1520–ல் பிரசுரங்களாக சுற்றுக்கு விடப்பட்டது.

லூதர் மூன்று சிறு புத்தகங்களை வெளியிட்டார். அவை (1)ஜெர்மானிய நாட்டின் பிரபுக்களுக்கு வேண்டுகோள் (2)பாபிலோனியத் திருச்சபையின் சிறை வாசம் (3) கிறித்தவனின் சுதந்திரம். தன்னுடைய எழுத்துக்கள் மூலமாக மார்டின் லூதர், போப்பாண்டவரின் அதிகாரத்தையும் திருச்சபை ஆலோசனை சபையையும் கேள்விகளுக்குள்ளாக்கினார்.

போப்பாண்டவர் பத்தாம் லியோவின் போப் ஆணை (முத்திரையிடப்பட்ட உறையில் போப்பின் ஆணை) மூலம் லூதர் தனது அபிப்பிராயத்தை கைவிடாததால் சமயத்துரோகி என்று அறிவித்து அவரை சமயத்தில் இருந்து விலக்கினர். லூதர் போப்பாண்டவரின் அதிகாரத்தை எதிர்த்து பொது இடத்தில் போப்பின் ஆணை மற்றும் சில சட்ட நூல்களை எரித்தார். ஆனாலும் லூதருக்கு ஜெர்மன் நாட்டு மக்களும், சிற்றரசர்களும் ஆதரவு அளித்தனர்.



போப் லியோ X

ரோமின் போப்பாண்டவரிடமிருந்து ஜெர்மானிய நகரங்களுக்கு ஆணைகளையும் புத்தகங்களையும் எரித்ததன் மூலம் சுதந்திரம் கிடைத்து விட்டது என்று கருதப்பட்டது. லூதரை விசாரணை செய்வதற்காக புனித ரோமானிய பேரரசர் ஐந்தாம் சார்லஸ் தலைமையில் கிறித்தவ பேரரசர் பிரதிநிதிகள். (டயட்) சபை வோர்ம்ஸ் நகரில் கூட்டப்பட்டது. லூதரை, தன் சமயக் கருத்துகளை கைவிட்டு மன்னிப்பு கோருமாறு வேண்டப்பட்டார். சாக்சனியன் சிற்றரசர் பிரெடரிக் லூதரை ஆதரித்து, அடைக்கலம் கொடுத்தார். லூதர் டயட் சபையின் ஆணையைக் ஏற்க மறுத்தார். ரோமானியத் திருச்சபை ஏழுவகையான சமயச் சடங்குகளைக் கொண்டிருந்தது. அவற்றை லூதர் மூன்றாகக் (ஞானஸ்நானம், திருமணம் மற்றும் திருவிருந்து சடங்குகள்) குறைத்தார்.

மடாலய துறவு வாழ்க்கை முறையை கண்டித்தார். (குருமார்கள் திருமணம் செய்து கொள்ள வேண்டுமெனப்பட்டது) ஜெர்மானிய வட்டார மொழியை சமயத்திற்காகவும் சமய சார்பு இல்லாத செயல்பாடுகளுக்கும் பயன்படுத்தலாயினர். ஜெர்மானிய அரசர்களும் பிரபுக்களும் தங்கள் பகுதிகளிலிருந்த திருச்சபையின் நிலங்களைக் கைப்பற்றிக் கொண்டனர். 1529–ல் லூதரைப் பின்பற்றியவர்களை ஒடுக்க வேண்டும் என்று கூறியது. புனித ரோமானியப் பேரரசின் ஆணையை ஜெர்மானிய இளவரசர்கள் ஏற்க மறுத்து அரசனுக்கு உண்மையாய் இருப்பதை விட கடவுளுக்கு உண்மையாய் இருப்போம் என்று கூறினார். இவ்வாறு லூதரன்வாதிகள் பிராட்டஸ்டண்டுகள் என்றழைக்கப்படலாயினர்.



ஐந்தாம் சார்லஸ்

சுவிட்சர்லாந்து நகரமான ஜுரிச் நகரைச் சார்ந்த உல்ரிச் சுவிங்ளி என்பவரும் சுவிட்சர்லாந்து நாட்டில் புகலிடம் தேடிய பிரெஞ்சு நாட்டு குரு ஜான் கால்வினும் போப்பின் ஆணையை எதிர்த்தார்கள். ஏறக்குறைய மார்டின் லூதரின் காலடி பாதையை பின்பற்றினர். திருச்சபையில் முன்பிருந்த தூய்மையையும், எளிமையையும் மீண்டும் நிலைநாட்டப்பட வேண்டும் என்று அவர்கள் விரும்பினர். இங்கிலாந்தில் டியூடர் வம்சத்தின் மன்னர் எட்டாம் ஹென்றி, தன் மனைவி காத்தரின் என்பவரை விலக்கிவிட்டு 'ஆனி பொலின்' என்பவரை மறுமணம் செய்ய திருச்சபையின் அனுமதி கோரி போப் ஏழாம் கிளமெண்டுடன் மோதலில் ஈடுபட்டார். இதன் விளைவாக 1533 ம் ஆண்டு ஆங்கில திருச்பையை ரோமிடம் ரோமானிய திருச்சபையின் கட்டுப்பாட்டிலிருந்து பிரித்து தனித்திருச்சபையாக இயங்குமாறு மன்னர் கட்டாயப்படுத்தி, அதில் வெற்றியும் பெற்றார். அதன் பிறகு வந்த வருடங்களில் பாராளுமன்ற 'ஆதிக்க உரிமைச் சட்டத்தின்' மூலம் இங்கிலாந்து அரசர் ஆங்கில (ஆங்கிலிக்கன்) திருச்சபையின் தலைவராக நியமிக்கப்பட்டார். இவ்வாறு ரோம கத்தோலிக்க சபையை எதிர்த்ததின் விளைவாக லத்தீன் அல்லாத தனித்தனியான தேசிய நாடுகளும் மற்றும் கத்தோலிக்க கிறித்துவர்கள் அல்லாத மறுப்பாளர் பிரிவும் ஐரோப்பாவில் உருவாகின.



உல்ரிச் சுவிங்ளி

### எதிர்ச் சமயச் சீர்திருத்த இயக்கம் அல்லது கத்தோலிக்க மறுப்பு இயக்கம்

கத்தோலிக்க மறுப்பு இயக்கத்தின் வெற்றிகரமான முன்னேற்றம் ரோமானிய கத்தோலிக்கத் திருச்சபைக்கு ஆழ்ந்த கவலையையும் மிகுந்த அச்சத்தையும் தருவதாக இருந்தது. எதிர் மறுப்பு இயக்கத்தின் நோக்கம், அடிப்படையில்

திருச்சபைக்கு தூய்மையையும் புனிதத் தன்மையையும் மீட்டுத் தருவதாக இருந்தது. திருச்சபைக்கு உள்ளிருந்தும் வெளியிருந்தும் வருகின்ற அபாயங்களிலிருந்து பாதுகாப்பு என்பது உடனடியாகத் தேவைப்பட்டது. நிலைமை முற்றிலுமாக சீர்கெட்டுவிடும் முன்னர் கத்தோலிக்க மறுப்பு இயக்கத்தின் முன்னேற்றத்தைத் தடுக்கத் தீவிரமான நடவடிக்கைகளை எடுக்கத் தொடங்கியது. திருச்சபையைத் தூய்மைப்படுத்துவதற்கு தன்னை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டது. திருச்சபைக்குள்ளேயே சீர்திருத்தங்களைக் கொண்டு வருவதும், அதற்கு வெளியே மறுப்பு இயக்கத்தின் விரிவைத் தடுப்பதும் என்பதே 'சீர்திருத்த மறுப்பு இயக்கம்' எனப்பட்டது.

### இயேசு சபை
### இக்னேஷியஸ் லயோலாவும், இயேசு சபையும் (1491 – 1556)

இக்னேஷியஸ் லயோலா, ஸ்பானிய பிரபுக்குடியில் 1491 – ம் ஆண்டு பிறந்தார். இராணுவ வீரராக சேர்ந்து ஐந்தாம் சார்லஸ் கீழ் பிரான்சுக்காக போரிட்டார். இப்போரில் காயமுற்று, சிகிச்சை பெறும் போது, சமயத்தைப் பற்றிய அனுபவம் பெற்றார். இயேசு கிறிஸ்துவின் வாழ்க்கைப் பற்றியும், புனிதர்கள் பற்றியும் நிறைய நூல்களை பயின்று அதன் மூலம் மிகப்பெரிய மாற்றத்திற்கு உள்ளானார். போப்பாண்டவரின் அனுமதியோடு ஏசு சபை என்ற அமைப்பை நிறுவினார். அறுபது உறுப்பினர்களை சேர்த்து தீவிரமான சமய ஒழுக்கம் மற்றும் செய்முறை பயிற்சிக்கு உட்படுத்தப்பட்டனர். ஒவ்வொரு உறுப்பினரும் லயோலாவின் ஆன்மீகப் பயிற்சியைப் பெற வேண்டும். 1540–ம் ஆண்டில் ஏசு சபையில் ஜெஸ்யூட்டுகளின் எண்ணிக்கையை உயர்த்த போப்பாண்டவர் அனுமதித்தார். ஏசு சபையினரின் ஏழ்மை, துறவு, பணிவு, கிறித்துவத்திற்காகவும் கடவுளுக்காவும் ஊழியம் செய்தல் என்ற நோக்கில் ஐரோப்பா கண்டத்தில் உள்ள எல்லா இடங்களிலும் அயராது உழைத்து, ஆர்வத்தோடு செயல்பட்டு சமய பரப்பாளர்களாக கிறிஸ்துவை பற்றிய செய்தியை பரப்பினர். எல்லா இடங்களிலும் பள்ளிகளை திறந்தனர்.



இக்னேஷியஸ் லயோலா

கத்தோலிக்க மத சீர்திருத்த இயக்கத்தைப் பரப்பும் அமைப்பாக ஏசு சபையில் ஜெஸ்யூட்டுகள் செயல்பட்டனர். இந்த ஜெஸ்யூட்டுகள் சமயம் பரப்பும் செயலில் மிகப்பெரிய வெற்றியை அடைந்தனர். கத்தோலிக்க சமயத்திற்காக ஏசு சபையினர் பயனுள்ள சேவைகளைச் செய்தனர்.

### டிரெண்ட் கவுன்சில்

1545 முதல் 1563 வரை செயல்பட்ட டிரெண்ட் சபை கத்தோலிக்க திருச்சபையை சீர்த்திருத்துவதை நோக்கமாக கொண்டிருந்தது. ஆயினும் கிறித்துவ சமுதாயத்தை ஒன்றிணைப்பதில் தோல்வியை தழுவினாலும் இச்சபை கத்தோலிக்க கொள்கைக்கு தெளிவான வரையறை கொடுப்பதில் மிகுந்த வெற்றியைப் பெற்றது. டிரெண்ட் சபைக்கு பிறகு கத்தோலிக்க சமயத்தை பொறுத்தவரையில், சமய அமைப்பில் போப்பாண்டவர் உச்ச அதிகாரம் படைத்தவர்என்று ஏற்றுக்கொள்ளப்பட்டார். ஒழுங்கீனமான தகுதியற்ற குருமார்கள் நீக்கப்பட்டனர். சமய நெறி கோட்பாடு வலியுறுத்தப்பட்டது. திருச்சபையின்

செயல்புத்தகம் முழுவதுமாக புதுபிக்கப்பட்டு, விவிலியம் திருத்தப்பட்டது.

#### இன்குசிசன் (விசாரணை நீதி மன்றம்)

கத்தோலிக்க நம்பிக்கையை குறை கூறியவர்கள் மூர்க்கதனமாக திருச்சபை விசாரணை மன்றம் மூலம் தண்டிக்கப்பட்டனர். இந்த ஸ்பானிய விசாரணை நீதி மன்றம் மன்னர் பெர்டினான்டு மற்றும் இராணி இசபெல்லா காலத்தில் நிறுவப்பட்டது. குற்றம் சாட்டப்பட்டவர்கள் குற்றம் புரிந்ததாக ஒப்புக்கொண்டு மன்னிப்பு கேட்கும்படி சித்ரவதை செய்யப்பட்டனர்.

#### அட்டவணை (Index)

கத்தோலிக்க மதத்திற்கு எதிரான கருத்துக்கள் கொண்ட புத்தகங்களின் பட்டியல்களைத் தயாரித்து கத்தோலிக்கர்களை படிக்க அவற்றை தடைசெய்தனர். இப்பட்டியல் தான் இன்டெக்ஸ் என்றழைக்கப்பட்டது.

#### புவியியல் கண்டுபிடிப்புகள்

மறுமலர்ச்சி காலம் எல்லாவித இடைக்கால மூடநம்பிக்கைகளை மக்கள் மனதில் இருந்து நீக்கி ஐரோப்பியர்களிடையே இதுவரை அறியாத தொலைவிலுள்ள உலகின் பல்வேறு நிலப்பகுதிகளை கண்டுபிடிக்கும் துணிச்சல் உணர்வை வளர்த்தது.

#### பூமியை பற்றிய அறிவு

இக்காலகட்டத்தில், அறிவியல் அறிஞர்கள் பூமி உருண்டை வடிவம் கொண்டது என்று கண்டுபிடித்தனர். ஆகவே மாலுமிகள் தாங்கள் தொடங்கின இடத்திற்கே மீண்டும் திரும்புவோம் என்ற முடிவிற்கு வந்தனர். அது கடற்பயணம் மேற்கொள்வதை ஊக்கப்படுத்தியது.

நவீனகால தொடக்கத்தில் அறிவியல் கண்டுபிடிப்புகள் மிகப்பெரிய பலனை தந்தன. அவை அனைத்திலும் திசைகாட்டும் கருவி மிகச்சிறந்த ஒன்று. இக்கருவி திசைகளை அறிந்து கொள்ள உதவும். இதன் முள் வடக்கு திசையை நோக்கி இருக்கும். இக்கருவி கடலில் திசை தெரியாமல் தவிக்கும் போது திசையறிந்து கடற்பயணம் தொடர உதவும். மேலும் புவியியல் கண்டுபிடிப்புகளின் அறிவால் மக்கள் தொலைதூர இடங்களுக்கு பயணம் செய்யும் துணிவு ஏற்பட்டது.

15 ஆம் நூற்றாண்டில், கானேரி தீவுகளை ஆக்கிரமித்தப் பிறகு, போர்ச்சுகீசியர்கள், மேற்கு ஆப்பிரிக்காவை அடைய முயற்சித்தனர். போர்ச்சுகீசிய இளவரசர் ஹென்றி இதற்காக பல முயற்சிகளை மேற்கொண்டார். இவர் மாலுமிகளுக்காக ஒரு பள்ளியை ஏற்படுத்தி அதன் மூலம் அதிகப்படியான கண்டுபிடிப்புகளுக்கு ஊக்கம் தந்தார். மாலுமிகளுக்கு, திசை காட்டும் கருவி மற்றும் ஆஸ்ட்ரோலேப் உபயோகிக்கும் முறையை கற்றுக்கொடுத்தனர். எனவே, இவர் மாலுமி ஹென்றி (1394–1460) என்று அழைக்கப்பட்டார். இவருடைய மாலுமிகள் மேற்கு ஆப்பிரிக்காவின் கடற்கரை நெடுகிலும் பிரயாணங்களை மேற்கொண்டனர். இவர்கள் அஜோரிஸ் மற்றும் மாடீரா தீவுகளை கண்டுபிடித்தனர். சூடான் மற்றும் செனீகல் வரை சென்றனர்.

ஆட்டோமான் துருக்கியர்கள் கி.பி.1453இல் கான்ஸ்டான்டிநோபிளை கைப்பற்றிய பிறகு, ஐரோப்பாவில் இருந்து ஆசியாவிற்கு பயணம் செய்வது கடினமாயிற்று. ஐரோப்பியர்களின் வாசைனப் பொருட்கள் வாணிபம் கேள்விக்குறியானது. அதுவரை அரபு நாட்டினர் வாசனைப் பொருட்கள் வியாபாரத்தில் இடைத்தரகர்களாக இருந்தனர். ஐரோப்பியர் ஆசியாவை அடையவும், முடிந்த அளவுபொருள் சேர்க்கவும், புதிய கடல் வழிகளை கண்டுபிடிக்க வேண்டியதாயிற்று. அவர்கள் நீண்ட பயணம் மேற்கொள்ளவும், இந்தியாவிற்கும், சீனாவிற்கும் (கேத்தே) புதிய வழிகளை கண்டுபிடிக்கவும் அரசவைகளின் ஆதரவை நாடினர்.

மங்கோலிய படையெடுப்புகள் ஐரோப்பா பற்றிய புவியியல் சிந்தனைகளை விரிவுபடுத்தத் தூண்டியது. வெளிநாட்டு

பயணம் மற்றும் வாணிபம் பற்றிய ஆவலை சிலுவைப்போர்கள் அதிகமாக உருவாக்கின. பதிமூன்றாம் நூற்றாண்டில் வெனிஸ் நகரைச் சார்ந்த சிறுகுழுவினர் மார்கோ போலோ தலைமையில் கேத்தே விற்கு (சீனா) தரைவழியாக பிரயாணம் செய்தது ஒரு அரிய செயலாகும்.



வாஸ்கோடா காமா

பதினைந்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் குறிப்பிடத்தக்க கண்டுபிடிப்புகள் நிகழ்ந்தன. பார்தலோமியூ டயஸ் என்ற போர்ச்சுகீசியர் ஆப்பிரிக்காவின் தெற்கு முனையை அடைந்து அதற்கு "நன்னம்பிக்கை முனை" என்று பெயரிட்டார். 1497–ல் வாஸ்கோடகாமா என்ற போர்ச்சுகீசிய மாலுமி, போர்ச்சுகல்லிலிருந்து புறப்பட்டு அரபிக் கடலைக் கடந்து கேரள கடற்கரையில் உள்ள கள்ளிக்கோட்டையை 1498 யை அடைந்தார். இந்தியாவிற்கு புதிய கடல் வழியை கண்டுபிடித்த அவரது சாதனை சிறப்பானது. இத்தாலியரான கிறிஸ்டோபர் கொலம்பஸ் பயணம் செய்ய பொருளுதவி செய்தவர் ஸ்பெயின் நாட்டு அரசியார் இசபெல்லா ஆவார். இவர் 1472–ல் சான்டா மரியா, நினா மற்றும் பின்டா என்ற மூன்று கப்பல்களில் 88 மாலுமிகளுடன் முதன்முதலாக அட்லாண்டிக் மகாசமுத்திரத்தைக் கடந்தார். பல இன்னல்களுக்கு பிறகு அக்டோபர் 11, 1492–ல் அமெரிக்காவை அடைந்தார். கொலம்பஸின் மிகச்சிறந்த கண்டுபிடிப்பான புதிய நிலப்பகுதிக்கு 'புதிய உலகம்' என்று பெயரிடப்பட்டது.

பெர்னான்டோ கார்டெஸ் என்ற ஸ்பெயின் நாட்டு சாகசக்காரர் மத்திய அமெரிக்காவிற்கு ஒரு பயணத்தை மேற்கொண்டார். இவர் மெக்சிகோ கடற்கரையை அடைந்தார். பெரு பகுதி பிசாரோவிடம் 1530–ல் சரணடைந்தது. மெக்சிகோ மற்றும் பெரு ஆகிய விடங்களில் கிடைத்த தங்கம் மற்றும் வெள்ளி அட்லாண்டிக் கடல்கடந்து ஸ்பெயின் நாட்டிற்குச் சென்று அதனை வளப்படுத்தியது.

பெர்டினான்டு மெகெல்லன் என்ற ஸ்பெயின் நாட்டினர் கடற்பயணம் செய்ய அனுமதிக்கப்பட்டார். பிறப்பால் ஒரு போர்ச்சிகீசியர். இவர் அமெரிக்காவின் தென்முனையைச் சுற்றி புதிய பெருங்கடலைக் கண்டுபிடித்தார். அதற்கு 'பசிபிக் (அமைதிக்) கடல்' என்று பெயரிட்டார்.



கொலம்பஸ்

அமெரிக்கோ வெஸ்புகி என்ற இத்தாலியர் நான்கு கடற் பயணங்களை மேற்கொண்டு கொலம்பஸ் முதலில் கண்டுபிடித்த இடத்தை அடைந்து அதனை விரிவாக ஆராய்ந்தார். அவர் அந்த நாடு மற்றும் மக்கள் பற்றி ஒரு நீண்ட குறிப்பைத் தந்துள்ளார்.

ஜெர்மானிய நாட்டைச் சார்ந்த மார்டின் வால்டு முல்லர், வரைபடம் வரைபவர். இவர் உலகம் பற்றிய படத்தை வரையும் போது புதிய உலகத்திற்கு அமெரிக்கோ வெஸ்புகியின் நினைவாக அமெரிக்கா என்று பெயரிட்டார்.



15ஆம் நூற்றாண்டின் கப்பல்

வாணிப பெருக்கத்திற்கும் மற்றும் ஏகாதிபத்திய விரிவாக்கத்திற்குமாக போர்ச்சுகல் மற்றும் ஸ்பெயின் ஆகிய நாடுகள் இவ்வுலகை போப்பின் உதவியோடு இரண்டாக பங்கீட்டு கொண்டன. ஆப்பிரிக்கா, ஆசியா மற்றும் பிரேசில், போர்ச்சுகல் நாட்டிற்கும் ஸ்பெயின் தன்னாதிக்கத்தை வடக்கு மற்றும் தெற்கு அமெரிக்காவில் ஏற்படுத்தியது.

ஸ்பெயின் நாட்டவர் மிக அதிக எண்ணிக்கையில் தங்கம் மற்றும் வெள்ளியை தேடி அமெரிக்காவிற்கு வந்தனர். ஸ்பெயின் அதிக அளவில் செல்வத்தைக் குவித்தது. அது மற்ற ஐரோப்பிய நாடுகளை புதிய குடியேற்றங்களை உருவாக்குவதற்கு புதிய உலகில் மேற்கொள்ளத் தூண்டியது. அவற்றுள் பிரான்சு, இங்கிலாந்து மற்றும் ஹாலந்து ஆகியவை மிக முக்கியமானவை. எனவே அனைத்து ஐரோப்பிய நாடுகளும் தங்களது (காலனி) குடியேற்ற விரிவாக்கத்திற்காக அமெரிக்கக் கண்டத்தில் போரிட ஆரம்பித்தன.

## பயிற்சி

### அ. சரியான விடையை தேர்ந்தெடு.

1. மறுமலர்ச்சியின் பிறப்பிடம் எது ?

   அ) இத்தாலி ஆ) ஜெர்மனி இ)இங்கிலாந்து ஈ)ஆஸ்திரியா

2. சமய சீர்திருத்தத்திற்கு மூலக் காரணமானவர் யார் ?

   அ) ஜான் ஹஸ் ஆ) மார்ட்டின் லூதர் கிங் இ) சுவிங்லி ஈ)கால்வின்

3. துருக்கியர்களால் எந்த ஆண்டு கான்ஸ்டான்டி நோபிள் கைப்பற்றப்பட்டது ?

   அ) கி.பி.1452 ஆ)கி.பி.1453 இ)கி.பி.1458 ஈ)கி.பி.1353

4. மோனலிசா என்ற புகழ்பெற்ற ஓவியத்தை தீட்டியவர் யார் ?

   அ) மைக்கேல் ஆஞ்சிலோ ஆ) ராபேல்

   இ) டிடியன் ஈ)லியர்னா டோ டாவின்சி

5. இயேசு சங்கம் என்ற சமய அமைப்பை தோற்றுவித்தவர் யார் ?

   அ) மார்ட்டின் லூதர் ஆ) 5–ம் சார்லஸ்

   இ) சுவிங்லி ஈ)இக்னேஷியஸ் லயோலா

6. வாஸ்கோடகாமா எந்த ஆண்டு கள்ளிக்கோட்டையை வந்தடைந்தார் ?

   அ) 1498 ஆ) 1497 இ) 1496 ஈ)1499

## ஆ. பொருத்துக.

| | |
|---|---|
| 1. தாந்தே | நவீன அறிவியலின் தந்தை |
| 2. மைக்கேல் ஆஞ்சிலோ | புதிய அறிவியல் கண்டுபிடிப்பு |
| 3. ரோஜர் பேகன் | அமெரிக்கா |
| 4. மாலுமி திசைகாட்டும் கருவி | இறுதி தீர்ப்பு |
| 5. அமெரிக்கோ வெஸ்புகி | தெய்வீக இன்பியல் |
| | இறுதி உணவு |
| | புதிய கடல்வழி |

## இ. குறுகிய விடையளி.

1. மறுமலர்ச்சி இயக்கத்தில் இரண்டு பெரும் பிரிவுகள் யாவை ?
2. மறுமலர்ச்சி கால ஓவியங்கள் பற்றி சிறுகுறிப்பு வரைக.
3. மறுமலர்ச்சி காலத்தில் மேற்கொள்ளப்பட்ட முக்கியமான அறிவியல் கண்டுபிடிப்பு யாது ?
4. மறுமலர்ச்சி வரையறு.
5. பாவ மன்னிப்பு சீட்டு பற்றி குறிப்பு வரைக
6. ட்ரெண்ட் கவுன்சில் –வரையறு.
7. மாலுமி ஹென்றி பற்றி குறிப்பு தருக.
8. புதிய கடல் வழி கண்டுபிடிப்புகளின் விளைவுகள் யாவை ?

## ஈ. தலைப்பின் கீழ் உள்ளவற்றிற்கு விடையளிக்கு.

1. இத்தாலியில் மறுமலர்ச்சி

அ)ஐரோப்பாவின் பள்ளி என்று அழைக்கப்படுவது எது ?

ஆ)மறுமலர்ச்சி கால கலையின் முன்னோடி யார் ?

இ)5–ம் சார்லஸின் மருத்துவர், ஏழு புத்தகங்களை எழுதியவர் யார்

ஈ)வண்ணத்தின் புகழ் பெற்றவர் யார் ?

2. சமய சீர்திருத்தம்

அ) மார்ட்டின் லூதர் போராட்டத்தில் ஈடுபட உடனடிக்காரணம் என்ன ?

ஆ) புராட்டஸ்டன்டுகள் என அழைக்கப்படுபவர் யார்

இ) புனித சடங்குகளில் ஏழிலிருந்து மூன்றாக குறைக்கப்பட்டவை யாவை ?

ஈ) ஜான் டெட்சல் என்பவர் யார் ?

3. இயேசு சங்கம்

அ)இயேசு சங்கத்தை நிறுவியவர் யார் ?

ஆ) எந்த ஆண்டு இயேசு சங்கம் நிறுவப்பட்டது ?

இ) எத்தனை உறுப்பினர்கள் இயேசு சங்கத்தில் இருந்தனர் ?

ஈ) சமய சீர்திருத்த மறுப்பு இயக்கத்தின் நிறுவனங்கள் யாவை ?

4. புதிய கண்டுபிடிப்புகள்

அ) நன்னம்பிக்கை முனை என பெயரிட்டவர் யார் ?

ஆ) கிறிஸ்ட்டோபர் கொலம்பஸ் எதனைக் கண்டுபிடித்தார் ?

இ)கிறிஸ்ட்டோபர் கொலம்பஸ் பயணம் மேற்கொண்ட 3 கப்பல்களின் பெயர்கள் யாவை ?

ஈ) பசுபிக் பெருங்கடல் என பெயரிட்ட போர்ச்சுகீசிய கண்டுபிடிப்பாளர் யார் ?

## உ. பத்தியளவில் விடையளி.

1. மறுமலர்ச்சி காலம் மனிதாபிமானம் பற்றி ஒரு பத்தி எழுதுக.
2. மறுமலர்ச்சியின் விளைவுகள் யாவை
3. கத்தோலிக்க திருச்சபையில் காணப்பட்ட ஊழல்களுக்கு எதிராக மார்ட்டின் லூதரின் பணிகள் யாவை ?
4. இன்குசிஷன் மற்றும் புத்தக பட்டியல் பற்றி குறிப்பெழுதுக.
5. புவியியல் கண்டுபிடிப்புகளுக்கான காரணங்கள் யாவை ?

# 5. தொழிற் புரட்சி

இங்கிலாந்தில் தோன்றிய தொழிற்புரட்சி மேற்கத்திய நாடுகளின் அரசியல், பொருளாதார வாழ்வில் மற்றும் தொழிற்சாலை, வர்த்தகத்தில் அடிப்படை மாற்றத்தை ஏற்படுத்தியது. தொழிற்புரட்சி என்ற சொல் விவசாயம் சார்ந்த கைவினைத் தொழில் சார்ந்த உழைப்பாளிகளை மையப்படுத்திய பொருளாதார அமைப்பிலிருந்து இயந்திர உற்பத்தி, தொழிற்சாலைகள், மூலதனம், பரிவர்த்தனை போன்றவற்றை மையப்படுத்திய பொருளாதார முறைக்கு மாறுவதைக் குறிப்பதாகும். முதலீட்டாளர்கள் கச்சாப் பொருள்களை சேகரித்து அதனை செய்பொருட்களாக்க கலைஞர்கள் மற்றும் கைவினைஞர்களுக்கு விநியோகம் செய்தனர். வேறுபட்ட பல்வேறு இடங்களில் புதிய கண்டுப்பிடிப்புகள் தோன்றியதால் இயந்திரங்கள் உருவாயின, தொழிற்புரட்சி என்ற வார்த்தை புதிய அறிவியல், தொழில்நுட்ப மாற்றங்களை ஏற்றுக் கொண்டு செயல்பட்டு ஆலைகளில் பொருட்கள் பேரளவில் உற்பத்தி செய்ததை விளக்குவதற்கு பயன்பட்டது. இயந்திரங்கள் உற்பத்தி முறையை முழுமையாக மாற்றியமைத்தன. இப்புரட்சி முழுவதுமாக பொருள் உற்பத்தியை அடிப்படையாகக் கொண்டிருந்தது. வன்முறையின்றி இரத்தமின்றி அமைதியான முறையில் தொழில் உற்பத்தியில் மாற்றத்தை ஏற்படுத்தியது. தொழிற்புரட்சி என்ற சொல்லை முதன் முதலில் பிளான் கூ (Blangui) என்ற பிரெஞ்சு எழுத்தாளர் உருவாக்கினார்.

## தொழிற்புரட்சிக்கான காரணிகள்

18ஆம் நூற்றாண்டில் பல புதிய கண்டுபிடிப்புகள் விவசாய முறைகளிலும் அமைப்புகளிலும் பெரும் மாற்றத்தை ஏற்படுத்தின. பழமையான விவசாய, முறைகள் வீழ்ச்சியடையலாயின. விவசாயம் முதலாளித்துவ அமைப்பாகியது மேலும், நிலமானிய முதலீட்டாளர் அடிமைத்தளத்திலிருந்து விடுவிக்கப்பட்டு பண்ணையாட்களாகவும், குத்தகைக்காரர்களாகவும் உயர்த்தப்பட்டனர். புதிய காலனி நாடுகளில் இங்கிலாந்தில் செய்யப்பட்ட பொருட்களுக்கான தேவை அதிகரித்துக் கொண்டே போனது. வர்த்தக விரிவாக்கத்தின் விளைவாக புதிய நாடுகள் மற்றும் புதிய கடல்வழி கண்டுபிடிப்புகள் ஏற்பட்டன. பல்வேறு காரணங்களில் ஐரோப்பிய நாடுகளில் மக்கள் தொகை பரவல் வேகமாகியது திறமையான விவசாயமுறை சரியான உணவுப்பொருள் விநியோகத்தால் ஊட்டச்சத்து பற்றாக்குறை நீங்கி பிறப்பு விகிதம் அதிகரித்தது. விஞ்ஞான வளர்ச்சி உற்பத்தி முறையில் புரட்சியை ஏற்படுத்தியது இத்துடன் பல இயற்கை சூழ்நிலைகளும் தொழிற்புரட்சிக்கு சாதகமாயின.

கிராம கைத்தொழில் உற்பத்தி பரவல் மிக வேகமான வியாபார வளர்ச்சிக்கு அடித்தளமாயிற்று. வியாபார விரிவாக்கத்தின் விளைவாக புதிய சந்தைகளைத் தேடினர்.

முதலாளிகளின் ஊக்கத்தினால் அறிவியல் அறிஞர்கள் இயந்திரங்களை கண்டுபிடித்தனர். பின் ஐரோப்பிய நாடுகள் குடியேற்றங்களை சுரண்டின. இது முதாலாளித்துவம் ஏற்பட வழிவகுத்தது, முதலாளிகள் அதிக பொருட்கள் உற்பத்தி செய்து அதிக லாபம் ஈட்ட விழைந்தனர், ஆகவே ஆலைகளை அமைத்தனர். புதிய இயந்திரங்களின் உதவியால் மக்கள் பொருட்களை பெருமளவில் உற்பத்தி செய்தனர். ஐரோப்பாவில் வேகமான தொழில் துறை மாற்றங்கள் ஏற்பட மேற்கண்ட காரணிகள் உதவின, மறுமலர்ச்சிக்கு முன்பு அறிவியல் அறிவு, செயல் முறைக்கு பயன்படுத்திடாமல் இருந்தது ஆனால் தற்போது விழிப்புணர்வு எல்லாத் துறைகளிலும் ஏற்படலாயிற்று.

இங்கிலாந்தில் 18–ஆம் நூற்றாண்டில் தொழிற்புரட்சிக்கு சாதகமான சூழ்நிலை நிலவியது, இங்கிலாந்து கடல் போக்குவரத்திலும், காலனியாதிக்கத்திலும் முதன்மையான உலக நாடாக விளங்கியது. அதனுடைய கடல் வலிமையும், குடியேற்ற ஆதிக்கமும் அந்நாட்டின் தொழில் தொழிற்சாலைகளின் தீவிர வளர்ச்சிக்கு தேவையான கச்சாப் பொருள்களையும், புதிய சந்தைகளையும் பெற்றுத்தந்தன, பிரிட்டன் மேலும் கனிம வளம் போன்ற பல இயற்கை வளங்களை கொண்டிருந்தது. அதனுடைய கடற்கரை அமைப்பு மற்றும் பருவநிலை தொழிற்சாலைகளுக்கு சாதகமாக இருந்தன. இங்கிலாந்தின் பொருளாதார முன்னேற்றத்திற்கு தனியார்களது பெரும் பங்கும் தனிச்சிறப்பு அளித்தது. தொழில் புரட்சியின் போது இங்கிலாந்தில் செய்யப்பட்ட இயந்திரங்கள் தரமானதாகவும், வலிமை வாய்ந்ததாகவும் இருந்தன. சமயக் கொடுமையின் காரணமாக ஸ்பெயின் மற்றும் பிரான்சிலிருந்து வெளியேறிய புராட்டஸ்டண்ட் கைவினைஞர்கள் இங்கிலாந்திற்குக் குடியேறினர். இங்கிலாந்து அரசாங்கம் அவர்களுக்கு அடைக்கலமும் பண உதவியும் கொடுத்து அதற்குப் பதிலாக அவர்களின் திறமையை முழுமையாக பயன்படுத்திக் கொண்டது. இதனால் இங்கிலாந்தில் தொழிற் சாலைகளுக்கு புத்துணர்ச்சி ஏற்பட்டது.

### அறிவியல் கண்டுபிடிப்புகள் மற்றும் தொழில்நுட்ப வளர்ச்சிகள்

கைத்தொழிலிலிருந்து இயந்திரங்கள் மூலமான உற்பத்திக்கும், மனித அல்லது விலங்கு இயக்க சக்திக்கு பதிலாக, நீராவி போன்ற வேறு உற்பத்தி சக்திகளுக்குமான மாற்றத்தினை தொழிற்புரட்சி கொண்டுவந்தது. புதிய இயந்திரக் கண்டுபிடிப்புகள் மூலம் வேகம் பெற்ற முதலாவது துறையாக ஜவுளி தொழில் விளங்கியது.

1733–ல் ஜான்கே பறக்கும் நாடாவைக் கண்டுபிடித்தார். இது துணி நெய்யும் வேகத்தை அதிகரித்தது. இதனால் நூல் தேவை அதிகமாயிற்று. ஜேம்ஸ் ஹார்கீரிவ்ஸ்ஸின் "நூற்கும் ஜென்னி" (1764) மற்றும் சாமுவேல் கிராம்ட்டனின் "நூற்கும் மியூல்" 1779, நூலுக்கான அதிகத் தேவையை உற்பத்தி செய்தது.



ஜார்ஜ் ஸ்டீபன்சன்



ஜேம்ஸ் வாட்
நீராவி எந்திரத்தை மாற்றிஅமைத்தவர்

1785–ல் கார்ட்ரைட் கண்டுபிடித்த விசைத் தறியினால் அதிக அளவில் துணி நெய்யும் முறை நடைமுறைக்கு வந்தது. விட்னி 1793–ல் காட்டன் ஜின் என்ற கருவியை பருத்தியிலிருந்து விதைகளை பிரித்தெடுப்பதற்காகக் கண்டுபிடித்தார் இதன் மூலம் அதிக அளவு கச்சா பருத்தி

துணி உற்பத்திக்குக் கிடைத்தது 1846ல் எலியாஸ் ஹோவ் தையல் இயந்திரத்தைக் கண்டுபிடித்தார்.

### உற்பத்திக்கான இயக்க சக்திகளின் கண்டுபிடிப்பு

தொழிற்புரட்சியின் கண்டுபிடிப்புகளில் முதன்மையானது நீராவி இயந்திரம் எனலாம் நியுகாமன் என்பவரின் நீராவி இயந்திரக் கண்டு பிடிப்பைப் படித்த ஜேம்ஸ் வாட் புதிய நீராவி இயந்திரத்தை 1769–ல் உருவாக்கினார் இதனால் ஐவுளித் தொழிற்சாலையில் குதிரை மற்றும் நீர் சக்திக்கு பதிலாக நீராவி சக்தி பயன்படுத்தபட்டது.

ஜார்ஜ் ஸ்டீபன்சன் நீராவி இரயில் இயந்திரத்தை 1825இல் கண்டுபிடித்தார் 1830இல் முதல் பயணியர் தொடர்வண்டி மான்செஸ்டருக்கும் லிவர்பூலுக்கும் இடையே இயக்கப்பட்டது.



நீராவி இயந்திரம்

1814இல் கண்டுபிடிக்கப்பட்ட நீராவி அச்சு இயந்திரத்தால் அச்சுப் பொருட்களின் விலை குறைந்தது. இதற்கு பின்னர் பாரடே டைனமோவைக் கண்டுபிடித்தார். ஆபிரகாம் டெர்பி இரும்புத்தாது உருக்குவதற்கு கரிக்கு பதிலாக நிலக்கரியைப் பயன்படுத்தும் ஆய்வுகளை மேற்கொண்டார். 1760 இல் ஜான் ஸ்மீட்டன் டெர்பி ஆய்வுடன் நீர் சக்தியை இணைத்து அதனை மேம்படுத்தினார்.

ஹம்ப்ரி டேவி கண்டுபிடித்த பாதுகாப்பு விளக்கினால் சுரங்க வேலை செய்வோர் பாதுகாப்புடன் பணிபுரிந்தனர். 1784இல் ஹென்றி கார்ட் இரும்பைத் துண்டாக்க உருளையை பயன்படுத்தும் புதிய முறையை அறிமுகப்படுத்தினார். 1856–ல் பெர்ஸ்மர் இரும்பு எஃகு உற்பத்திச் செய்யும் புதிய முறையை கண்டுபிடித்தார். இக்காலந்தொட்டு நிலக்கரியும், இரும்பும் நீராவியுடன் கைகோர்த்து செயல்பட்டதால் தொழில்மயமாதலுக்கு அடித்தமாகியது.

### போக்குவரத்து துறையில் புரட்சி

சுரங்கத் தொழில் ஏற்பட்ட மாற்றத்தால், பிற தொழிற்சாலைகளில் மாற்றம் விரைவு படுத்தப்பட்டன. குறிப்பாக போக்குவரத்து, தகவல் தொடர்பு துறையில் வேகமான முன்னேற்றம் ஏற்பட்டது.

மேம்பட்ட சாலைகள் அமைப்பதில் ஜான் மெட்காஃப் மற்றும் ஜான் மெக் ஆதம் ஆகியோரின் பங்களிப்பு போற்றத்தக்கது. மெக் ஆதம் தரமான பாதை அமைக்கும் முறையை கண்டுபிடித்தார். அச்சாலைகள் "மெக் ஆதம் சாலைகள்" எனப்பட்டது. ஜான் பிரின்லே கால்வாய்களை இணைக்கும் முறையை கண்டுபிடித்தார். இதன் மூலம் முக்கிய நகரங்களான பெர்மிங்ஹாம் லண்டன், லிவர்பூல், மான் செஸ்டர் போன்ற பல நகரங்கள் கால்வாய் மூலம் இணைக்கப்பட்டது.

### தகவல் தொடர்பில் ஏற்பட்ட புரட்சி

சர் ரௌலண்ட் ஹில், பென்னி அஞ்சல் முறையை கண்டுபிடிப்பின் விளைவாக வியாபாரிகள் அருகிலும், தொலைவிலும் இருந்த தங்கள் வாடிக்கையாளர்கள் மற்றும் நுகர்வோர்களை எளிதில் தொடர்பு கொள்ள முடிந்தது. கம்பியில்லா மின்விசை கம்பி



மின்சார தந்தி

மூலம் செய்திகளை அனுப்பும் தந்தி முறையை மோர்ஸ் கண்டுபிடித்தார். 1835இல் முதல் மின்சார தந்தி முறை நடைமுறைக்கு வந்தது.

### விவாசாயத்துறையில் புரட்சி

தொழிற் புரட்சி தோன்றுவதற்கு முன்பே, விவசாயப் புரட்சி தோன்றியது, நிலங்களை பண்படுத்த புதிய விவசாய கருவிகளான, எஃகு கலப்பைகள் மற்றும் கடப்பாரைகள் பயன்படுத்தப்பட்டன. "டிரில்" என்ற விதை விதைக்கும் கருவியும், குதிரை மூலம் நிலங்களில் மரக்கலப்பைகளுக்கு பதிலாக எஃகு கலப்பைகள் உழவதற்கு பயன்படுத்தப்பட்டன. கதிர் அறுக்கவும், கதிர் அடிக்கவும் இயந்திரங்கள் கண்டுபிடிக்கப்பட்டன. மண்ணை வளப்படுத்த "பயிர் சுழற்சி முறை" நடைமுறை படுத்தப்பட்டது. மண்ணின் வளத்தை மீட்டெடுத்த "குளோவர்" (Clover) என்ற ஒரு வகைச் செடியைப் பயிரிட்டனர், இங்கிலாந்தின் நிலவுடமையாளர்கள் தங்கள் பண்ணைகளை விரிவு படுத்தத்து வங்கினர், கிராமங்களில் சிதறி கிடந்த நிலங்களை ஒன்றினைத்து கூட்டுப் பண்ணையாக்கி உற்பத்தியைப் பெருக்கினர்.

### தொழிற் புரட்சியின் தாக்கங்கள்
### சமூகத்தில் ஏற்பட்ட தாக்கம்

தொழிற் புரட்சி ஐரோப்பியர் வாழ்க்கையில் எல்லா வகையிலும் ஆழமான தாக்கத்தை ஏற்படுத்தியது. விவாசாய உற்பத்தியில் வியாபார அமைப்புகளில், தொழில் நுட்பத்தில் ஏற்பட்ட மாற்றம் சமூகத்திலும், அரசியலிலும் புரட்சிகரமான விளைவுகளை ஏற்படுத்தியது. கிராமப் பகுதியிலிருந்து மக்கள் தொழிற்சாலைகள் இருந்த நகரங்களுக்கு ஈர்க்கப்பட்டனர். அதனால் பல தொழில் நகரங்கள் உருவாயின. மக்கள் தொகை பெருக்கத்தால் சுகாதார சீர்கேடு ஏற்பட்டது. காற்று, நீர், ஒளி போன்றவை மாசடைந்ததால் மக்களின் சுகாதாரம் பாதிக்கப்பட்டது. சிறுவர்களும், பெண்களும் பெருமளவில் குறைந்த கூலிக்கு ஆலைகளில் பணிபுரிந்ததால் தொழில் அதிபர்கள் பெருத்த லாபம் ஈட்டினர், பெருமளவில் ஏற்பட்ட வேலையில்லாத் திண்டாட்டமும் குறைந்த கூலியும் சமுதாயத்தில் ஒரு மிகப்பெரிய பிரச்சனைகளாக மாறியன.



ராபர்ட் ஓவன்

மேலும் பழைய சமுதாயப்பிரிவுகள் அழிந்து "முதலாளிகள், தொழிலாளிகள்" என்ற இரண்டு புதிய பிரிவுகள் தோன்றின. மக்களில் இருப்பவன் (பணக்காரன்), இல்லாதவன் (ஏழை) என்ற வர்க்கங்கள் பேசப்பட்டது. பல ஐரோப்பிய நாடுகளில் தொழிற்சாலைகள் வளர்ச்சியடைந்ததால், அவர்கள் வேறு வழியின்றி தங்களுக்கென புதிய குடியேற்ற நாடுகளை அமைக்கவும் மற்ற கண்டங்களில் கச்சாப் பொருட்களை பெறவும், உற்பத்தி செய்யப்பட்ட பொருட்களை விற்கவும் உட்படுத்தப்பட்டனர். இவ்வாறாக காலனி தேடல் தீவிர காலனி ஏகாதிபத்தியத்திற்கு அடிகோலியது.

## அரசியல் தாக்கம்

பெரிய நகரங்கள் தோன்றியதால் பாராளுமன்ற சீர்திருத்தங்கள் தேவைப்பட்டது. பல பாராளுமன்ற சீர்திருத்தங்கள் அறிமுகப்படுத்தப்பட்டன. முதலாளிகளின் சுரண்டல்களிலிருந்து தொழிலாளர்களைக் காக்கவும், தொழிலாளர்களின் நலன்களை மேம்படுத்தவும் தொழிலாளர்களின் சட்டங்கள் 1819, 1833 மற்றும் 1837–ல் இயற்றப்பட்டன. 1825ஆம் ஆண்டு தங்கள் உரிமைகளைப் போராடி பெற "தொழிளார் சங்கங்கள்" ஏற்படுத்தப்பட்டன. மேலும் போக்குவரத்து தகவல் தொடர்பு வாயிலாக தேசியம், பன்னாட்டு தேசியம் போன்ற கருத்துக்கள் தோன்றலாயின அதனால் பொருளாதார அடிப்படையில் மக்களாட்சி அரசு தேவை அதாவது சமதர்மம் (சோஷலிசம்) என்ற கருத்தை தோற்றுவித்தது.

## பொருளாதார தாக்கம்

தொழிற்புரட்சி இங்கிலாந்தின் பொருளாதரத்தை மாற்றியமைத்தது. உலகத்திலேயே அதிக முன்னேற்ற மடைந்த நாடாக இங்கிலாந்து உருவானது. இங்கிலாந்து நாட்டு வருமானம் அதன் வளர்ச்சியடைந்த வியாபாரத் தொடர்புகளால் அதிகரித்தது. குடிசைத் தொழில்கள், ஆலைகளுடன் போட்டியிட இயலாமல் நாளடைவில் இயல்பாகவே அழிந்தன. ஆலைகளின் வளர்ச்சியால் மான்செஸ்டர், லங்காஷியர், பர்மிங்ஹாம், ஷெப்பில்ட் போன்ற பல புதிய தொழில் நகரங்கள் தோன்றின. முதலாளி, தொழிலாளி என்ற புதிய வர்க்கங்கள் தோன்றியதால் ஏழை மேலும் ஏழையானான். நாட்டின் ஒட்டு மொத்த முதலீடும் முதலாளிகளின் வசப்பட்டது. ஆகவே "தொழிற்புரட்சி பணக்காரனை மேலும் பணக்காரனாக்கியது, ஏழையை மேலும் ஏழையாக்கியது" என்றனர்.

## புதிய கொள்கை

தொழில் புரட்சியினால் அடிக்கடி பயன்படுத்துகின்ற பல அரசியல் வார்த்தைகள் பிறந்தது. பொருட்களின் உற்பத்தி பெருகியதால், பெரிய தொழிற்சாலைகளின் உடமையாளர்கள் செல்வந்தர்களாயினர். அதன் விளைவாக "முதலாளித்துவம்" தோன்றியது பெரும் தொழில் ஆலைகள் வணிக முதலீடுகளை பெருக்கியதே முதலாளித்துவத்தின் தாக்கமாகும்.

## சமத்துவம்

தொழிலாளர் வர்க்கத்தினர் முதளாளித்துவத்தை எதிர்த்து முாக்கத்தை எழுப்பினர். தொழிலாளர்களின் அடிப்படை தேவைகளையும், மனித உரிமைகளையும் உள்ளடக்கிய சமத்துவ 'சோஷிலிச' தத்துவங்கள் செய்வாக்குப்பெற்றன. சமத்துவத்தின் நோக்கம், செல்வம் ஒரு சிலரிடம் சென்றடையாமல் அனைவருக்கும் பகிர்ந்தளிக்கப்பட்டு ஏழை, பணக்காரன் என்ற வேறுபாடு மறைய வேண்டும் என்பதாகும். எவரும் பட்டினியால் வாடக்கூடாது. அனைவரின் தேவைகளும் பூர்த்தியடைய வேண்டும். நடுத்தர வர்க்கத்தினருக்கும், தொழிலாளர் வர்க்கதினருக்கும் இடையே உள்ள வேறுபாட்டை தொழில் மயமாதல் கூர்மைபடுத்தியது. இந்த பாகுபாட்டை போக்க ராபர்ட் ஓவன் என்பவர் முதன் முதலில் "சமத்துவம்" என்ற சொல்லை உருவாக்கினார்.

## மார்க்ஸிஸம்

மார்க்ஸிம் என்பது, உழைப்பினால் ஏற்படும் லாபத்தில் உழைப்பாளருக்கும் உரிய பங்கு வேண்டும் என்பதாகும். ஜெர்மனி நாட்டு சமத்துவவாதி காரல்மார்க்ஸ், மார்க்ஸிசம் என்ற கோட்பாட்டை வெளியிட்டார். இவரது கோட்பாடு, உற்பத்திக்கும், உழைக்கும் உடல் சக்திக்கும் நெருங்கிய தொடர்பு உடையது என்று வலியுறுத்துகிறது. இத்தகைய சோஷியலிச, பொதுவுடமைத் தத்துவங்கள் தோன்றுவதற்கு அடித்தலமாக அமைய தொழிற்புரட்சியும் காரல் மாக்ஸ் தத்துவங்களும் காரணமாய் இருந்தது.

## தொழில் புரட்சியின் போது கண்டுபிடிக்கப்பட்ட சாதனங்கள்

| தொழில்கள் | பெயர் | கண்டுபிடிப்புகள் | வருடம் |
|---|---|---|---|
| 1. நெசவுத் தொழில் | ஜான் கே | பறக்கும் நாடா | 1733 |
| | ஜேம்ஸ் ஹார்கிரீவ்ஸ் | நூற்கும் ஜென்னி | 1767 |
| | ரிச்சர்ட் ஆர்க்ரைட் | நீர்ச்சட்டம் என்னும் கருவி | 1769 |
| | சாமுவேல் கிராம்டன் | நூற்கும் மியூல் | 1779 |
| | எட்மண்ட் கார்ட்ரைட் | விசைத்தறி | 1785 |
| | எலிவிட்னி | காட்டன் ஜின் | 1792 |
| | எலியாஸ்ஹோவே | தையல் எந்திரம் | 1846 |
| 2. இயக்க சக்தி | தாமஸ் நியூகாமன் | முதல் நீராவி இயந்திரம் | 1769 |
| | ஜேம்ஸ் வாட் | நீராவி எந்திரம், நியூகான் இயந்திரம் | 1825 |
| | ஜார்ஜ் ஸ்டீபன்சன் | போக்குவரத்து நீராவி இயந்திரம் | 1790 |
| | ராபர்ட் புல்டன் | முதல் இரும்பு கப்பல், கிளாரண்ட் என்ற நீராவிப் படகு | 1807 |
| | ராபர்ட் ஸ்டீபன்சன் | பறக்கும் ராக்கெட், அச்சு நீரரிவி இயந்திரம் | 1829 |
| | பாரடே | டைனமோ | 1814 |
| 3. நிலக்கரி மற்றும் இருப்பு எஃகு தொழில் | ஆபிரகாம் டெர்பி | டெர்பி ஆய்வு மேம்படுத்தியது | 1760 |
| | ஜான் ஸ்மிட்டன் | பாதுகாப்பு விளக்கு | 1816 |
| | ஹம்ரி டேவிஸ் | இரும்பைத் துண்டாக்கும் முறை | |
| | ஹென்றி கார்ட் | இரும்பு எஃகு உருக்கும் முறை | 1784 |
| | பெரிஸ்மர் | இரும்பு உருக்கும் முறை | 1856 |
| 4. போக்குவரத்து | ஜான் மெட்காஃப் | சாலை | |
| | ஜான் மெக்காடம் | ஆதம் சாலைகள் | |
| | ஜான் பிரின்லி | கால்வாய்கள் இணைப்பு | |
| 5. தகவல் தொடர்பு | சர் ரௌலண்ட் ஹில் | அஞ்சல் முறை | 1835 |
| | மோர்ஸ் | தந்தி அனுப்பும் முறை | 1838 |
| | சைரஸ் டபிள்யூ பீல்டு | கடலுக்கு அடியில் கேபிள் இணைப்பு மின்சாரத் தந்தி முறை | |



கார்ல் மார்க்ஸ்

### தடையில்லா வாணிபக் கொள்கை

தொழிற்புரட்சியின் விளைவாகவும் முதலாளிகளின் சந்தை நோக்கங்களுக்காகவும் தடையில்லா வாணிபக் கொள்கையின்படி தோன்றியது. இக்கொள்கை வியாபாரம் மற்றும் ஆலைகள் நடவடிக்கைகளில் தலையிட அரசுக்கு உரிமையில்லை என வியாபாரிகள் மற்றும் முதலாளிகள் வேண்டினர்.

### தொழிற்புரட்சியின் தீமைகள்

தொழிற்புரட்சியினால் மனிதன் இயந்திரங்களுக்கு அடிமையானான். ஆலைத் தொழிலாளிகள் இரக்கமின்றி முதலாளிகளால் சுரண்டப்பட்டனர். ஆலைகளில் வேலை நேரம் பதினான்கு முதல் பதினாறு மணி நேரம் வரை வேறுபட்டிருந்தது. பெண்களும், சிறுவர்களும் குறைவான ஊதியத்தில் மற்றும் பாதுகாப்பில்லாத, அபாயகரமான இயந்திரங்களுக்கு அருகேயும் பணிபுரிய வேண்டியிருந்தது. வேலையில்லாத் திண்டாட்டம் ஒரு தீவிர பிரச்சனையாயிற்று மக்கள் செயற்கை வாழ்க்கை வாழத்துவங்கினர், தொழிற் புரட்சியானது நன்மை, தீமை இரண்டையுமே உள்ளடக்கியது. ஆனால் அதன் விளைவுகள் நிறைவேற நீண்ட காலமானது என்பதில் சந்தேகமின்றி தெளிவானது.

டேவியின் கூற்றுப்படி தொழிற்புரட்சி ஒரு வரமல்ல, தொழிற்சாலையின் அமைப்பு, செயல்பாடு பல தொழிலாளர்களின் மகிழ்ச்சியையும், மரியாதையையும் முடிவுக்குக் கொண்டு வந்தது மனித குலத்துக்கு நல்ல வசதி வாய்ப்புகளை வழங்கி பழைய குடிசை தொழில்களை முடிவுக்குக் கொண்டு வந்தது. சுருக்கமாக கூறின், இன்றைய நவீன உலகத்தை தொழிற் புரட்சி உருவாக்கியது எனலாம்.

## பயிற்சி

**அ. சரியான விடையைத் தேர்வு செய்க.**

1. தொழிற்புரட்சியினால் உற்பத்தி __________.

   அ) விரைவானது ஆ) மிதமானது இ) மந்தமானது ஈ) மாற்றம் ஏற்படவில்லை

2. தொழிற்புரட்சியின் தாயகம் __________.

   அ) அமெரிக்க ஐக்கிய நாடுகள் ஆ) பிரான்சு இ) இங்கிலாந்து ஈ) ஜெர்மனி

3. கிரேட் பிரிட்டன் ஒரு __________.

   அ) தீபகற்பம் ஆ) தீவு இ) பாலைவனம் ஈ) மலை

4. காட்டன் ஜின்னி என்ற விதை நீக்கும் கருவியை கண்டுப்பிடித்தவர் __________.

   அ) ஜேம்ஸ் ஹார்கிரிவ்ஸ் ஆ) எலி விட்னி

   இ) சாமுவேல் கிராம்டன் ஈ) எலியாஸ் ஹோவ்வே

5. __________ இல் முதல் பயணியர் தொடர் வண்டி இயக்கப்பட்டது.

அ) 1830 ஆ) 1850 இ) 1779 ஈ) 1900

## ஆ. பொருத்துக.

| | |
|---|---|
| 1. ஜான்கே | சாலை |
| 2. ஜேம்ஸ் வாட் | டைனமோ |
| 3. பாரடே | பறக்கும் நாடா |
| 4. மெக் ஆதம் | ஸ்பின்னிங் ஜென்னி |
| 5. ஹம்பரி டேவி | புதிய நீராவி இயந்திரம் |
| | பாதுகாப்பு விளக்கு |
| | காட்டன் ஜின்னி |

## இ. கீழே கொடுக்கப்பட்ட தலைப்புகளில் அனைத்து கேள்விகளுக்கும் விடையளி

1. ஜவுளித்துறை.

அ) எத்துறையில் முதன் முதலில் கண்டுப்பிடிப்புகள் ஏற்பட்டது ?

ஆ) பறக்கும் நாடாவை கண்டுபிடித்தவர் யார் ?

இ) தையல் இயந்திரத்தை கண்டுபிடித்தவர் யார் ?

ஈ) காட்டன் ஜின்னி எந்த ஆண்டில் கண்டு பிடிக்கப்பட்டது ?

2. சக்திகளின் கண்டுபிடிப்பு

அ) 1769 இல் புதிய நீராவி இயந்திரத்தை கண்டுபிடித்தவர் யார் ?

ஆ) பாதுகாப்பு விளக்கு யாரால் கண்டுபிடிக்கப்பட்டது ?

இ) 1856 இல் பெஸ்மர் எதனை கண்டு பிடித்தார் ?

ஈ) தூய இரும்பு எஃகு உருவாக்கும் முறையை கண்டறிந்தவர் யார் ?

## ஈ. சுருக்கமாக விடையளி.

1. தொழிற் புரட்சி என்பதன் பொருள் யாது ?
2. வாணிபம் விரிவடைந்ததால் ஏற்பட்ட விளைவுகள் யாவை ?
3. விவசாயத்தின் புரட்சி பற்றி ஓர் சிறு குறிப்பு வரைக.
4. சமத்துவத்தின் நோக்கம் யாது ?
5. கார்ல் மார்க்ஸ் என்பவர் யார் ? அவரின் கொள்கை யாது ?

## உ. விரிவான விடையளி.

1. தொழிற் புரட்சியின் காரணங்கள் யாவை ?
2. தொழிற் புரட்சியினால் ஏற்பட்ட விளைவுகள் யாவை ?
3. தொழிற் புரட்சியின் போது நிகழ்ந்த முக்கிய சில அறிவியல் கண்டுப்பிடிப்புகளை குறிப்பிடுக.

# 6. பிரஞ்சுப் புரட்சி (1789)

"பிரான்சுக்கு ஜலதோஷம் பிடித்ததால் அனைத்து ஐரோப்பாவும் தும்முகிறது"
என்பது ஐரோப்பிய வழக்கு

கி.பி.1789ஆம் ஆண்டு பிரஞ்சுப் புரட்சியினால் ஏதேச்சதிகார மன்னராட்சி மரண அடியினை எதிர்கொள்ள நேரிட்டது. எதேச்சதிகார மன்னராட்சிக்கு எதிராக மட்டுமல்ல, வர்க்கத்தனியுரிமைகளுக்கு எதிராகவும் எழுந்ததுதான் இப்புரட்சி எனலாம். பிரெஞ்சுப் புரட்சியில் இருந்து பெறப்பட்ட கருத்துக்கள் அல்லது கொள்கைகள், 19ஆம் நூற்றாண்டின் ஐரோப்பிய சமூக, அரசியல் வரலாற்றில் முன்னிலை வகித்த சக்திகளாக இருந்தது என்ற கூற்று மிக சரியானதேயாகும். இது சமத்துவம், சுதந்திரம், சகோதரத்துவம் என்ற அடிப்படையில் அமைந்த கோட்பாடுகளாகும். இப்புரட்சி இறுதியில் நெப்போலியன் போனபார்ட்டேயின் சர்வாதிகாரத்திற்குச் கொண்டு சென்றது என்பது விபரீதமான உண்மையாகும்.

## பிரஞ்சுப் புரட்சியின் காரணங்கள்

### 1. பண்டைய ஆட்சி முறை

பிரான்சின் வல்லாட்சி அரசு, பதினைந்தாம் லூயி, பதினாறாம் லூயி ஆகிய மன்னர்கள் காலத்தில் பலவீனமடைந்து செல்வாக்கிழந்தது. அம்மன்னர்கள் உறுதியற்றவர்களாகவும், திறமையற்றவர்களாகவும் ஆடம்பரங்களில் மூழ்கியவர்களாகவம் இருந்தனர். மேரி அன்டோனட் அரசி நிர்வாக விஷயங்களில் முறைகேடாக தலையிட்டு வந்ததால்



பதினாறாம் லூயி

குழப்பங்களும், சீர்குலைவுகளும் ஏற்பட்டன. அரசின் வருவாயில் பெரும் பகுதி அரண்மனை ஆடம்பரங்களுக்காகவே செலவிடப்பட்டது. அமைச்சர்களும் அதிகாரிகளும் ஊழல் மிகுந்தவர்களாகவும் நேர்மையற்றவர்களாகவும் இருந்தனர். நிர்வாகச் சீர்கேடுகளால் நாடு பெரும் பாதிப்பிற்குள்ளாயிற்று.



மேரி அண்டோனட் அரசி

### வல்லாட்சி முறை

பிரான்சின் ஏதேச்சதிகார மன்னராட்சி முறை மன்னரின் தெய்வீக உரிமைக் கோட்பாட்டின் அடிப்படையிலானது. இந்தக் கோட்பாட்டிற்கு திருச்சபை ஆதரவளித்தது. மன்னராட்சியில் தங்களுக்குள்ள குறைகளைக் கூறவும், நிவாரணங்களைக் கோரவும் மக்களுக்கு இதனால் வாய்ப்பில்லாமல் போய்விட்டது. ஸ்டேட்ஸ் ஜெனரல் என்ற மூன்றவைகளைக் கொண்ட அமைப்பு ஓரளவுக்கு பிரதிநித்துவம் கொண்ட மரபு வழியான அமைப்பாக இருந்து வந்தது. திருச்சபையின் பிரதிநிதிகளுக்கு என்று ஓர் அவையும், பிரபுக்களுக்கு என மற்றொரு அவையும், பொதுமக்களுக்கு என மூன்றாவது அவையும் இதில் உள்ளடங்கி இருந்தன. இது ஒரு ஆலோசனை அவையாகவே இருந்தது. ஆனால் இது 1614 – ஆம் ஆண்டிலிருந்து

கூட்டப்படவில்லை. பார்லிமென்ட் என்ற மற்றொரு அமைப்பு மன்னரின் ஆணைகளைப் பதிவு செய்யும் அமைப்பாக இருந்தது. இந்தப் பார்லிமென்டைக் கூட அரசவைப் புறக்கணித்து வந்தது. மக்கள் பிரச்சனைப் பற்றி அரசன் அறிந்து கொள்வதற்கான எந்த ஒரு அமைப்பும் பிரான்சில் இல்லாமல் போனது.

### பொருளாதாரக் காரணங்கள்

நிலமானிய முறை சீரழிந்து கொண்டிருந்தது. அரசனுடன் நெருக்கமாகவும் ஆடம்பரமாகவும் வாழும் பல நிலப்பிரபுக்கள், தமது நிலங்களை அதிகாரிகளது கண்காணிப்பில் விட்டுவிட்டு தலைநகரங்களில் வாழ்ந்து வந்தனர். இந்த அதிகாரிகள் நிலங்களைத் தவறாக நிர்வகித்து, விவசாயிகளையும் சுரண்டினர். பெரும்பாலான வரிகளிலிருந்தும், கட்டாயமான உடல் உழைப்பிலிருந்தும் பிரபுக்களுக்கு விலக்கு அளிக்கப்பட்டது. ஆனால் அதே சமயம், அப்பிரபுக்கள் விவசாயிகளிடமிருந்து அளவிற்கு அதிகமான வசூல்களை மேற்கொள்ளவும், அவர்களது உற்பத்திப் பொருட்களை தங்களது கட்டுப்பாட்டில் வைக்கவும் செய்தனர். அவர்களுக்கு இணங்க மறுத்த விவசாயிகளை கடுமையாகத் தண்டிக்கவும் அவர்களுக்கு உரிமை இருந்தது. இதுபோன்று பிரான்சின் நிலங்களில் மூன்றில் ஒரு பங்கு திருச்சபை குருமார்களின் கட்டுப்பாட்டில் இருந்தது. அவர்களுக்கும் பெரும்பாலான வரிகளிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டிருந்தது. அத்துடன் மக்களிடமிருந்து 'டைத்ஸ்' மற்றும் பிற வரிகளை வசூலிக்கவும் செய்தனர்.

இவ்வாறு அப்பாவிகளான விவசாயிகள், அரசு, பிரபுக்கள், திருச்சபை ஆகிய அனைவராலும் சுரண்டப்பட்டனர். பெரும்பாலான வரிகளின் பளு அவர்கள் மீதே திணிக்கப்பட்டது. அரசிற்காகவும், பிரபுக்களுக்காவும், திருச்சபைக்காகவும் ஊதியமின்றி உடல் உழைப்பு தருமாறு அவர்கள் கட்டாயப்படுத்தப்பட்டனர். சிறிதளவு மறுப்புத் தெரிவித்தாலும் கொடிய அடக்கு முறைகள் ஏவப்பட்டன. பிரெஞ்சு அரசிற்கு உதவும், அளவிற்கு பிரெஞ்சுக் குடியேற்றங்கள் செழிப்பாக இருக்கவில்லை. பாரம்பரியத் தொழில்கள் தேக்கமடைந்திருந்தன. எங்கும் ஏழ்மையும், பட்டினிச் சாவுகளும் காணப்பட்டன.

கத்தோலிக்க திருச்சபை பிரஞ்சு சமூகத்தின் மீது முழுமையான ஆதிக்கம் செலுத்தியது. அவர்களது பிறப்பு, இறப்புக்களை, பதிவு செய்வதுடன் திருமணங்களை முறைப்படுத்துவதும் கல்விக் கூடங்களை நடத்துவதும், நல்ஒழுக்கங்களை வரையறுப்பதும் திருச்சபையின் கட்டுப்பாட்டில் இருந்தன. திருச்சபை, பரந்த நிலங்களுக்கு உடமையாளனாகவும், வரிகளிலிருந்தும் ராணுவச் சேவை, கட்டாய உடலுழைப்பு போன்றவற்றிலிருந்து விளக்கு பெற்றதாகவும் இருந்தது. சமூகத்தின் ஏழைப் பிரிவினரின் நலன்களுக்கு எதிராக, அரசனுடனும், பிரபுக்களுடனும் இணைந்து செயல்பட்டது. ஊழலும், ஒழுக்க சீரழிவுகளும் மக்களிடையே திருச்சபையை செல்வாக்கிழக்கச் செய்தன.

### போர்களின் பளு

பதினான்காம் லூயி மன்னன் காலத்திலிருந்து பிரான்சு பிற ஐரோப்பிய நாடுகளுடன் தொடர்ந்து போரிட்டு வந்தது. ஏழாண்டுப் போர், ஆஸ்திரிய வாரிசுரிமைப் போர்களால் பிரான்சின் கருவூலம் காலியானது. அதே சமயம், இப்போர்களினால் பிரான்சுக்கு எத்தகைய ஆதாயமும் ஏற்படவில்லை. இத்தகைய செலவுமிக்க போர்களின் விளைவாக பிரான்சில் ஒரு பெரும் நிதி நெருக்கடி ஏற்பட்டது.

### சிந்தனையாளர்களின் பங்கு

அக்காலத்திய புகழ்பெற்ற தத்துவ அறிஞர்களின் சிந்தனைகளாலும், எழுத்துக்களாலும் பிரெஞ்சுப் புரட்சியாளர்கள் ஈர்க்கப்பட்டனர். அவர்களில் வால்டேர் பல நாடுகளிடையே புகழ் பெற்ற எழுத்தாளர். மூடநம்பிக்கைகளுக்கும், திருச்சபைக்கும்

எதிராகச் குரல் எழுப்பினார். அவரது சிந்தனைகளால் ஈர்க்கப்பட்ட பிரஷ்ய மன்னர் மகா பிரடரிக் அவரை கௌரவித்தார்.



ரூசோ

ரூசோ என்ற சிந்தனையாளர் மன்னராட்சியின் தெய்வீக உரிமைக் கோட்பாட்டை ஏற்றுக்கொள்ளவில்லை. அவரது சமுதாய ஒப்பந்தம் என்ற நூல் பிரெஞ்சு புரட்சியின் மறைநூலாக அமைந்தது. அவரது கருத்துப்படி மக்களது விருப்பம் தான் ஆட்சியின் ஆணிவேர் ஆகிறது. அதனால் சுதந்திரமாகப் பிறக்கும் மனிதனுக்கு சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் ஆகியவற்றிற்கான உரிமை உண்டு. மாண்டெஸ்கியூவின் கருத்துப்படி அனைத்து அதிகாரங்களும் அரசனிடம்



மாண்டெஸ்கியூ

குவிந்திருக்கும் வல்லாட்சிதான் மக்களின் துன்பங்களுக்கு காரணமாக அமைகிறது.

இங்கிலாந்து மாதிரியிலான அதிகாரப்பிரிவினை சட்டம், நிர்வாகம், நீதி என்ற அரசியலமைப்பு ரீதியிலான மாற்றுதான் மக்கள் நல அரசை தரும் என அவரது "சட்டங்களின் உணர்வு" (Sprit of Laws) (சட்டத்தின் சாரம்) என்ற நூல் கூறுகிறது. இவர்களைத் தவிர பொருளாதாரச் சீர்திருத்தங்களை உடற்கூறு வல்லுனர்கள் ஆதரித்தனர். பிரஞ்சு புரட்சியின் தலைவர்கள் இத்தகைய புரட்சிக் கருத்துக்களால் உணர்வும் ஊக்கமும் பெற்றனர்.

### புரட்சிக்கு உடனடிக் காரணங்கள்

1789 ஆம் ஆண்டிற்கு முன் தலைவிரித்தாடிய வறட்சியும், பஞ்சமும், நிலைமையை மேலும் மோசமாக்கி உணவுக் கிளர்ச்சிகளுக்கு (Bread Riots) இட்டுச் சென்றன. அரசவை, குறிப்பாக அரசி மேரி அன்டோனைட் மக்களது இன்னல்களில் உணர்வற்றவராகவும், தனது முன்யோசனையற்ற வார்த்தைகளால் மக்களது ஆத்திரத்தைத் தூண்டுபவராகவும் இருந்தார். அதே நேரத்தில், அமெரிக்க சுதந்திரப் போரில் பங்கு பெற்றுத் திரும்பிய தொண்டர்கள் புரட்சிகரமான உணர்வுகளுடன் இருந்தனர். அவர்கள் அமெரிக்க விடுதலைப் போரின் வெற்றிகளாலும், அங்கு நடைமுறைப்படுத்தப்பட்ட குடியரசு முறைகளாலும் உணர்வூட்டப் பெற்றிருந்தனர். அவர்கள் கிளர்ச்சி செய்து வந்த மக்களுடன் சேர்ந்து கொண்டு புரட்சியாளர்களது கரங்களை வலுப்படுத்தினர்.

### ஸ்டேட்ஸ் ஜெனரல் கூட்டப்படுதல்

அரசவையினரின் எதிர்ப்பினால் நிதித்துறை சீர்திருத்தங்கள் எதனையும் அரசரால் கொண்டுவர முடியவில்லை. புதிய வரிகளை விதிப்பதற்கு மக்களது ஆதரவு தேவைப்பட்டதால், 175 ஆண்டுகளாகக் கூட்டப்படாமல் இருந்த ஸ்டேட்ஸ் ஜெனரல் என்னும் அவையைக் கூட்டுவித்தார். இந்த

அவை பிரபுக்கள் அவை, மதகுருமார்கள் அவை, மக்கள் அவை என்ற மூன்று பிரிவுகளைக் கொண்டது.

### புரட்சியின் போக்கு 1789 – 1799

16–ம் லூயி மன்னர் ஏற்க மறுத்ததால், மக்கள் அரசியலமைப்பு சீர்திருத்தங்களைப் பற்றி விவாதிக்கலாயினர். இதனை பிரஞ்சுப்புரட்சியின் துவக்கமாகக் கொள்ளலாம்.

பதினாறாம்லூயி மன்னரால் 'ஸ்டேட்ஸ் ஜெனரல்' அவை கூட்டப்பட்டதும், அதன் மூன்றாவது அவையான மக்கள் அவை, மூன்று பிரிவுகளின் பிரதிநிதிகள் ஒரே இடத்தில் இணைந்து கூட்டப்பட வேண்டும் என்று அரசரை அவசரப்படுத்தியது. மேலும் இந்த ஸ்டேட்ஸ் ஜெனரல் தேசிய மன்றமாக பெயரிடப்பட வேண்டும் என்று கோரினர். மூன்றாவது பிரிவு உறுப்பினர்களின் எண்ணிக்கை அதிகமாக இருந்தாலும், வாக்களிக்கும் முறை இவர்களுக்கு சாதகமாக இல்லை. ஒவ்வொரு பிரிவுக்கு ஒரு ஓட்டு முறையே பின்பற்றப்பட்டது.

**வாக்களிக்கும் முறை**

| முதல் பிரிவு | இரண்டாம் பிரிவு | மூன்றாம் பிரிவு |
|---|---|---|
| ஒரு வாக்கு | ஒரு வாக்கு | ஒரு வாக்கு |

எப்போதும் முதல் இரண்டு பிரிவும் இணைந்துவிடுவதால், மூன்றாவது பிரிவைவிட பெரும்பான்மை பெறுகிறது.

(1 + 1) = 2 x 1 (மூன்றாவது பிரிவு)

ஸ்டேட்ஸ் ஜெனரலின் பிரபுக்களுக்கும், மதகுருமார்களுக்கும் அளிக்கப்பட்டு வந்த உரிமைகளையும், சலுகைகளையும் ரத்து செய்ய வேண்டுமெனவும் கோரிக்கை எழுப்பினர்.

### டென்னிஸ் மைதான உறுதிமொழி

அரசர் இவர்கள் கோரிக்கைகளை ஏற்க மறுத்ததுடன் மீண்டும் மக்கள் இருக்க அந்த அரங்கில் கூடாமல் தடுக்க நடவடிக்கைகள் எடுத்தார். ஆனாலும் மக்கள் பிரதிநிதிகள் அருகிலிருந்த டென்னிஸ் வளாகத்தில் கூடினர். அவர்களுடன் ஒரு சில பிரபுக்களும், மத குருமார்களும் இணைந்து கொண்டனர்.



டென்னிஸ் மைதான உறுதிமொழி

அங்கே அவர்கள் தங்களையே ஒரு தேசிய மன்றமாக அறிவித்து, ஓர் அரசியலமைப்பை உருவாக்கும் வரை கலையப் போவதில்லை. என உறுதிமொழி எடுத்துக் கொண்டனர். இது 'டென்னிஸ் கோர்ட்' உறுதிமொழி என்று அறியப்படுகிறது.

தனது புதியவரி கோரிக்கைகளுக்கு மக்கள் பிரதிநிதிகளின் ஆதரவு கிடைக்கப் போவதில்லை, என்பது அரசனுக்குத் தெளிவாயிற்று. எப்படியேனும் மக்கள் மன்றத்தை கலைக்க வேண்டும் என்று திட்டமிடலானார். இரகசியமாக மன்னரின் திட்டத்தை அறிந்து கோபம் கொண்ட மக்கள் மன்னருக்கும் அவரது ஆட்சிக்கும் எதிராக புரட்சியைத் துவங்கினர்.

## பாஸ்டைல் சிறை தகர்ப்பு

அரசவைகள் போக்கினால் ஆத்திரமுற்ற பாரீஸ் நகர மக்கள் கிளர்ந்தெழுந்து 1789, ஜூலை 14ஆம் நாளன்று கிளர்ச்சிகாரர்கள் சிறை வைக்கப்பட்டிருந்த பாஸ்டைல் சிறைச் சாலையைத் தாக்கினர்.

இந்த பாஸ்டைல் சிறைச்சாலை "அரசருக்குரிய எதேச்சதிகார சின்னம்" என்று மக்களால் வெறுக்கப்பட்ட ஒன்றாகும். கிளர்ச்சிக்காரர்கள் சுவிஸ் சிறைக் காவலர்களைத் தாக்கி, சிறைச் சாலைக் கதவுகளை உடைத்து கைதிகளை விடுவித்தனர். பாஸ்டைல் வீழ்ச்சியை விடுதலை நாளாக நாடெங்கும் கொண்டாடினர்.

பாஸ்டைல் வீழ்ச்சி மன்னராட்சியை மேலும் பலவீனப்படுத்தியது பாரிஸ் நகர மக்கள், நகர நிர்வாகத்திற்காக "பாரீஸ் கம்யூன்" என்ற அமைப்பை உருவாக்கினர். வறுமையினாலும் பசிக்கொடுமையினாலும் இன்னலுற்ற பாரீஸ் நகரப் பெண்கள் (ரொட்டி) உணவுக் கோரி வெர்செய்ல் மாளிகைக்குச் சென்றனர். ஆனால் எவ்வித பதிலும் கிடைக்காததால், ஊர்வலமாகச் சென்று, அரண்மனைக்குள் நுழைந்து சூறையாடினர். அரசன், அரசி, அவர்கள் குழந்தைகளை ஆடம்பரமான வெர்செய்ல் மாளிகையிலிருந்து பாரீஸ் நகருக்கு ஊர்வலமாக கொண்டு சென்று விட்டனர். அதன் பின் அரச குடும்பத்தினர் பாரீஸ் நகரிலேயே வாழ நேரிட்டது.



பாஸ்டைல் சிறை தகர்ப்பு

## தேசிய மன்றம்

1789–ஆகஸ்ட் 12–ஆம் நாளன்று தேசிய மன்றமானது "மனிதன் மற்றும் குடிமகனது உரிமைகள் பிரகடனம்" வெளியிடப்பட்ட "மாக்னா கார்ட்டா" (பேரறிக்கை) கி.பி.1215–ல் வெளியிட்டது போலவும், மற்றும் 1689–இல் பிரிட்டிஷ் பாராளுமன்றம் வெளியிடப்பட்ட "உரிமைகள் மசோதாவை" போல மிகச் சிறப்பான மனித உரிமை அறிக்கையாக மதிப்பிடப்படுகின்றது.

## மதகுருமார்களின் சிவில் அரசியல் அமைப்பு

தேசிய மன்றம் தன்னையே ஒரு அரசியலமைப்பு அவையாக (Constituent Assembly) அறிவித்துக் கொண்டு புதிய அரசியலமைப்பை 1791–ல் உருவாக்க முற்பட்டது. இது அரசனது அதிகாரங்களைக் கட்டுப்படுத்தியது. சட்டம் இயற்றும் உரிமை இனி சட்ட மன்றத்திற்கே உரியது என்று அறிவிக்கப்பட்டது. அனைவருக்கும் மத சகிப்புத்தன்மை உறுதி செய்யப்பட்டன. திருச்சபையின் சொத்துக்கள் தேசியவுடமையாக்கப்பட்டன. இனிமேல் திருச்சபையின் அதிகாரிகள் அரசின் மூலம் நியமிக்கப்பட்டனர். திருச்சபையின்உயர் பதவியிலுள்ளவர்களது ஊதியங்கள் குறைக்கப்பட்டன. கீழ் பதவியிலிருந்தவர்களுக்கு ஓரளவு ஊதிய உயர்வு அளிக்கப்பட்டது. இவ்வாறு திருச்சபையை சட்ட மன்ற விதிகள் மூலமாக கட்டுப்படுத்தும் சட்ட அமைப்பை "மதகுருமார்களின் சிவில் சட்ட அமைப்பு" (Civil Constrution of Clergy) எனப்பட்டது. இச்சட்டம் திருச்சபை மீதான கட்டுப்பாடு உரிமையை போப்பாண்டவரிடமிருந்து அரசாங்கத்திற்கு மாற்றியது. போப்பாண்டவர் இச்சட்டத்தை கண்டித்தார். பிரெஞ்சு அவை, மதகுருமார்கள் அனைவரும் அரசிற்கு விசுவாசமாக இருக்க உறுதிமொழி எடுத்துக் கொள்ள வேண்டுமென வலியுறுத்தியது. இதன் விளைவாக பிரெஞ்சு திருச்சபையில் பிளவு ஏற்பட்டது.

விசுவாச உறுதி மொழி எடுப்பவர்கள், எடுக்க மறுப்பவர்கள் என இரு பிரிவுகள் தோன்றின. இதனால் திருச்சபைக்கும் அரசிற்கும் இடையே மோதல்கள் உருவாயின. இந்த சட்டத்தின் மீது மன்னனுக்கு அதிருப்தி இருந்தாலும் இதற்கு ஒப்புதல் அளித்து கையெழுத்திட்டார்

## அரசன் வெர்செய்ல்ஸ்க்கு தப்புதல்

1791–ஜூன் மாதம், பதினாறாம் லூயி தன் குடும்பத்துடன் நாட்டைவிட்டு தப்பிச்செல்ல முயன்றார். ஆனால் வார்னஸ் என்னும் எல்லையோர நகரில் அவர் பிடிக்கப்பட்டு சிறைவைக்கப்பட்டார். பின் விசாரணை நடத்தப்பட்டு குற்றச்சாட்டு சுமத்தப்பட்டது. விசாரணைக்குப்பின் 1793



அரசி மேரி அன்டோனைட் கில்லட்டின் மூலம் கொல்லப்படுதல்



பதினாறாம் லூயி கில்லட்டின் மூலம் கொல்லப்படுதல்

ஜனவரி 21இல் பொது மக்கள் முன்னிலையில் கில்லட்டின் கருவியின் மூலம் லூயியின் தலை வெட்டப்பட்டது. மேரி அன்டோனட்டும் பிறகு இவ்வாறு கில்லட்டின் மூலம் கொல்லப்பட்டார். அரசனுக்கு ஆதரவானவர்கள் என்றன சந்தேகத்தின் பேரில் நூற்றுக்கணக்கானவர்களும் கொல்லப்பட்டனர். பிரான்சில் அராஜகம் தலைவிரித்தாடியது.

## அச்சத்தின் ஆட்சி

1792ஆம் ஆண்டு செப்டம்பரிலிருந்து தேசிய அவை அரசியலமைப்பை உருவாக்க முனைந்தது. மன்னராட்சி ஒழிக்கப்பட்டு 1792– செப்டம்பர் 21–இல் குடியரசு அறிவிக்கப்பட்டது. பயங்கரவாதிகளின் தலைவர் டான்டன், ரோபஸ்பியர் தலைமையில் பொது பாதுகாப்பு குழு நியமிக்கப்பட்டது. இதன் தலைவர்களுக்கு அளவில்லா அதிகாரங்கள் வழங்கப்பட்டன. 1792 செப்டம்பர் முதல் 1794–ஜூலை வரை இந்த அச்சத்தின் ஆட்சி தொடர்ந்தது. கொல்லப்பட்டவர்களில் ஆயிரக்கணக்கான பிரபுக்களும் பல அப்பாவிகளும் இருந்தனர். இந்நிகழ்ச்சியே புரட்சியின் வீழ்ச்சிக்கு இட்டுச்சென்றது. 1794இல் ரோபஸ்பியர் கில்லடினில் கொல்லப்பட்டதுடன் அச்சத்தின் ஆட்சி முடிவிற்கு வந்தது.



கில்லட்டின்



ரோபஸ்பியர்

## டைரக்டர் அரசு

1795–ல் தேசிய அவையில் இருந்த மிதவாதிகள் ஒரு புதிய அரசியல் அமைப்பை வெளியிட்டனர். அதன்படி ஐந்து பேர் கொண்ட இயக்குநர் அவை ஐந்தாண்டுகளுக்கு 1795இல் இருந்து 1799 வரை ஆலோசனை வழங்க இரு அவைகளை கொண்ட இம்மன்றம் அமைக்கப்பட்டது. இம்மன்றம் நல்ல நிர்வாகத்தைக் கொடுக்க தவறிவிட்டது. 1799இல் புதிய அரசியல் அமைப்பிற்கு எதிர்ப்பு தெரிவித்து அரசு ஆதரவாளர்கள் பாரிசில் கிளர்ச்சி செய்தவர்களை அடக்க ஒரு படையை அனுப்பியது. இவ்வாறு பிரெஞ்சுப் புரட்சி முடிவுக்கு கொண்டுவரப்பட்டது.

## நெப்போலியன் போனபார்ட்

கார்சிகன் இளைஞன் நெப்போலியன் போனபர்ட் பிரெஞ்சுப் புரட்சிக்கு பொறுப்பேற்றார். பிரெஞ்சுப் புரட்சியின் குழந்தை என்று அழைக்கப்பட்ட இவர், 1799 முதல் 1815 வரை பிரான்சை திறமையாக ஆட்சி செய்தார். நிர்வாக முறையை அறிந்த இவர், குழப்பமான நிலையில் இருந்த பிரான்சை வாட்டர் லூ போரில் இவர் தோல்வி அடைந்த வரையில் நிலையான ஆட்சியை கொடுத்தார்.



நெப்போலியன் போனபார்ட்

## பிரெஞ்சுப் புரட்சியின் விளைவுகள்

1789–ஆம் ஆண்டு பிரஞ்சுப் புரட்சி தீவிரமான மாற்றங்களைக் கொண்டு வந்தது. அது மனித குல வரலாற்றில் ஒரு புதிய யுகத்தினைத் தோற்றுவித்தது. அப்புரட்சியின் குறிப்பிடத்தக்க விளைவுகள் பின்வருமாறு:

இப்புரட்சியின் விளைவாக மன்னரின் வரம்பற்ற வல்லாட்சி ஒழிக்கப்பட்டது. அரசியலமைப்பிற்கு உட்பட்ட ஆட்சி உருவாக்கப்பட்டது.

நிலமானிய முறை அடியோடு ஒழிக்கப்பட்டது, பண்ணை அடிமைகள் விடுதலையடைந்தனர்.

பிரபுக்கள் மற்றும் திருச்சபையின் சொத்துக்கள் பறிமுதல் செய்யப்பட்டு அவை ஏழை விவசாயிகளுக்கு பகிர்ந்தளிக்கப்பட்டன.

1794 முதல் திருச்சபையின் கட்டுப்பாட்டிலிருந்து அரசு விடுவிக்கபட்டது. சமய சார்பற்ற அரசும், சட்ட முறையும் கொண்ட கொள்கை உருவாக்கப்பட்டது.

பிரான்சிலும் அதன் குடியேற்ற நாடுகளிலும் அடிமை முறை ஒழிக்கப்பட்டது.

மதசார்பற்ற முறையில் கல்வி மாற்றியமைக்கப்பட்டது.

பிரெஞ்சு மக்களிடையே தேசிய உணர்வையும், ஒற்றுமையையும் தோற்றுவித்தது. இதனால் பல நாடுகளிலும் விடுதலை உணர்வுகள் ஊக்கம் பெற்றன. (லத்தீன் அமெரிக்க நாடுகள், இந்தியா).

19–ம் நூற்றாண்டில் தேசப்பற்றை உருவாக்கி இத்தாலி, ஜெர்மனி போன்ற நாடுகளில் சர்வதிகாரத்தை உருவாக்குவதற்கு பிரெஞ்சுப் புரட்சி பெரும் தாக்கத்தை ஏற்படுத்தியது.

பிரஞ்சுபுரட்சிக் கருத்துகளான "சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம்" ஆகியவை ஐரோப்பாவில் மட்டுமல்ல, உலகின் பிற நாடுகளிலும் பரவின.

ஐரோப்பாவிலும் பிற இடங்களிலும் புதிய ஜனநாயக முறை, சமுதாய அமைப்பு தோன்றுவதற்கு முன்னோடியாக பிரஞ்சுப் புரட்சி இருந்தது.

புரட்சியின் விளைவாக மிகச்சிறந்த நிர்வாகியான நெப்போலியன் போனபார்ட் முன்னணிக்கு வந்தார்.

பிரெஞ்சுப் புரட்சி சொர்க்கத்திலிருந்து வந்த மன்னா என்ற உணவாகக் கருதப்பட்டது.

**தெரிந்துகொள்**

1889–ல் பாரிசில் நடந்த கண்காட்சிக்காக பிரெஞ்சுப் புரட்சியின் நூற்றாண்டை சிறப்பிப்பதற்கு ஈபிள் கோபுரம் கட்டப்பட்டது.



ஈபிள் கோபுரம்

**தெரிந்துகொள்**

பிரான்ஸ் நாட்டு மக்கள் பிரெஞ்சுப் புரட்சி வரை குடிமக்களாய் இருந்ததைவிட கிறித்துவர்களாக இருந்தார்கள். பிரெஞ்சுப் புரட்சியின் கருத்துக்களால் அமெரிக்க நாட்டின் ஆபிரகாம் லிங்கன் மற்றும் இந்திய தேசபிதா மகாத்மா இருவரும் கவரப்பட்டனர்.

## பயிற்சி

### அ. சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுது.

1. பிரெஞ்சுப் புரட்சி நடைப் பெற்ற ஆண்டு ___________.
   அ) 1749 ஆ) 1759 இ) 1779 ஈ) 1789
2. ஸ்டேட்ஸ் ஜெனரல்___________நாட்டின் பாராளுமன்றம்
   அ) இங்கிலாந்து ஆ) பிரான்சு இ) ரஷ்யா ஈ) இத்தாலி
3. 'சமூக ஒப்பந்தம்' என்ற நூலை எழுதியவர்___________.
   அ) வால்டேர் ஆ) ரூசோ இ) மான்டெஸ்கியூ ஈ) டான்டன்
4. பிரெஞ்சுப் புரட்சி இவரது காலத்தில் நடைப்பெற்றது___________.
   அ) பதிமூன்றாம் லூயி ஆ) பதினான்காம் லூயி
   இ) பதினைந்தாம்லூயி ஈ) பதினாராம் லூயி
5. பிரான்சின் சின்னமாக இருந்தது___________.
   அ) வெர்செயில்ஸ் சிறை ஆ) பாஸ்டில் சிறை
   இ) பெர்லின் சிறை ஈ) வார்னஸ் சிறை
6. ரோபஸ்பியர் தூக்கிலிட பட்டப்பின் பயங்கர ஆட்சி முடிவுற்ற ஆண்டு___________.
   அ) 1790 ஆ) 1791 இ) 1792 ஈ) 1794
7. "பிரெஞ்சுப் புரட்சியின் குழந்தை" என்று அழைக்கப்பட்டவர் ___________.
   அ) பதினாறாம் லூயி ஆ) ரோபஸ்பியிர்
   இ) வால்டேர் ஈ) நெப்போலியன் போனபார்ட்

### ஆ. பொருத்துக.

| | | |
|---|---|---|
| 1. | சட்டத்தின் சாரம் | செப்டம்பர் 1792–ஜுலை 1794 |
| 2. | இரண்டாம் பிரிவு | வால்டேர் |
| 3. | மூன்றாவது பிரிவு | வாட்டர் லூ |
| 4. | பயங்கர ஆட்சி | ரூசோ |
| 5. | டைரக்டரி | மாண்டெஸ்கியூ |
| 5. | நெப்போலியன் போனபார்ட் | பொதுமக்கள் |
| | | பிரபுக்கள் |
| | | 1795–1799 |

## இ. குறுகிய அளவில் விடையளி.

1. மூன்று பிரிவுகள் பற்றி சிறு குறிப்பு வரைக.
2. டென்னிஸ் கோர்ட் மைதான உறுதி என்பது யாது ?
3. மனித உரிமைகள் அறிவிப்பு எப்போது வரையப்பட்டது. குறிப்பு வரைக.
4. பிரெஞ்சுப் புரட்சியின் விளைவு ஏதாவது இரண்டை எழுது ?
5. நெப்போலியன் போனபார்ட் சிறு குறிப்பு வரைக.

## ஈ. கொடுக்கப்பட்ட தலைப்பின் கீழ் உள்ள அனைத்து வினாக்களுக்கும் விடையளிக்கவும்.

1. எதேச்சதிகார ஆட்சி

   அ) பிரெஞ்சு அரசு எந்தக் கொள்கையின் மீது சார்ந்துள்ளது ?

   ஆ) இக் கொள்கையை ஆதரித்தவர்கள் யார் ?

   இ) ‘ஸ்டேட்ஸ் ஜெனரல்’ என்பது யாது ?

   ஈ) பிரெஞ்சு புரட்சிக்கு முன் கடைசியாக எப்போது இந்த அவை கூட்டப்பட்டது.

2. பாஸ்டில் சிறைத்தகர்ப்பு

   அ) பாஸ்டில் சிறைத் தகர்ப்பு எப்போது நிகழ்ந்தது ?

   ஆ) எதேச்சதிகார ஆட்சியின் சின்னம் எது ?

   இ) எந்த நாள் விடுதலை நாளாகக் கொண்டாடப்பட்டது ?

   ஈ) பிரெஞ்சுப் புரட்சி போக்கின் முக்கிய நிகழ்ச்சி யாது ?

3. பயங்கர ஆட்சி

   அ) தேசிய பேரவை எப்போது கூடியது ?

   ஆ) தேசிய பேரவை அறிவித்தது என்ன ?

   இ) பொது பாதுகாப்புக்குழுவை யார் தலைமைத்தாங்கியது ?

   ஈ) பயங்கர ஆட்சியின் காலம் என்பது யாது ?

## உ. பத்தியளவில் விடையளி.

1. பிரெஞ்சுப் புரட்சியின் பொருளாதார காரணங்கள் யாவை ?
2. பிரெஞ்சு சிந்தனையாளர்களின் பங்கை விவரி.
3. பிரெஞ்சு புரட்சியின் விளைவுகள் யாவை ?

# 7. தமிழ் நாட்டின் பண்பாட்டு மரபுகள்

இந்தியாவில் வேத காலத்திற்கு முன்பு, சிந்து சமவெளியை மையமாக கொண்ட திராவிட நாகரிகம் தழைத்திருந்தது. பின், ஆரியர்களின் வருகைக்குப்பின் தென்னிந்தியா, குறிப்பாகத் தமிழகம் திராவிட நாகரிகத்தின் மையமாக மாறியது. தமிழ் மொழியும், பண்பாடும், திராவிட குடும்பத்தின் மீது பழமையானவையும், இன்றளவும் வாழ்ந்து கொண்டிருப்பவையாகவும், தமிழ்மொழியும், தமிழ்ப் பண்பாடும் இருக்கின்றன.

தொன்மையான பாலி மற்றும் சமஸ்கிருத இலக்கியங்கள் தமிழ் மற்றும் தென்னிந்தியப் பகுதிகளை "திராமிளா" (Dramila) மற்றும் "திராவிட" என்ற சொற்களால் குறிப்பிட்டன. வட நாட்டை ஆரியவர்த்தம் எனவும், தென்னாட்டை திராமிளா மற்றும் திராவிட என்றும் வேறுபடுத்திக் காட்டுகின்றன.

தமிழ் மொழியும், இலக்கியங்களும் தொல் பழமையானவை. மாமூலனார் போன்ற சங்ககால புலவர்கள் கி.மு. நான்காம் நூற்றாண்டில் வாழ்ந்த நந்தர்கள் மற்றும் மௌரியர்களின் சமகாலத்தவர்கள். ஆகவே தமிழ் மொழி 2500 ஆண்டுகளுக்கு மேல் தொடர்ந்து கொண்டிருக்கும் வரலாற்றை உடையதாகும். தமிழ் மொழி பன்முக இலக்கிய வளத்தாலும், பழமையாலும் தரத்தில் உயர்ந்து செம்மொழித் தகுதியை பெற்றுள்ளது. சமஸ்கிருதம் போலல்லாமல், ஆனால் சீன மொழியைப் போன்று இந்திய துணை கண்டத்தின் மிகப் பழமையான, மக்களிடையே செல்வாக்குப் பெற்று புகழ்பெற்று வாழ்ந்து கொண்டு இருக்கும் மொழி தமிழ் மொழியாகும். தென்னிந்தியாவில் திராவிட மொழிகளில் மூத்த மொழி தமிழ் மொழியாகும்.

கி.மு.500 முதல் கி.மு.1300 வரை தமிழ் நாட்டின் அரசியல் வரலாறு மூன்று பகுதிகளாக பிரிக்கப்பட்டுள்ளது. (1) சங்க காலம் (2) களப்பிரர் காலம், (3) தமிழ்ப் பேரரசுகளின் காலம்.

சங்க காலத்தில் தமிழ்நாடு, அரசர்கள் மற்றும் குறுநில மன்னர்கள் கட்டுப்பாட்டில் இருந்தது. மலைசார்ந்தநாடுகளை ஆட்சி செய்த குறுநில மன்னர்கள் 'வேளிர்' எனப்பட்டனர். எடுத்துக்காட்டாக பொதிய மலையை ஆய், குதிரைமலையை அதியமான், பரம்பு மலையை பாரி என்ற வேளிர்கள் ஆட்சி செய்தனர். வளமான ஆற்று சமவெளிகளை சேர, சோழ, பாண்டியர் போன்ற முடியுடை வேந்தர்கள் ஆட்சி செய்தனர். அரசர்களும், குறுநில மன்னர்களும் அறிஞர்களையும் கவிஞர்களையும் ஆதரித்தனர், சில மன்னர்களே கூட கவிதை இயற்றும் அளவு திறமை பெற்றிருந்தனர். (எடுத்துக்காட்டு: ஆரியப் படை கடந்த நெடுஞ்செழியன்) மன்னர்கள் தங்களுக்குள்ளும் சிங்களர்கள், கடம்பர்கள், யவனர்கள், ஆரியர்கள் போன்ற அயலவர்களுடனும் போரிட்டு வந்தனர். சங்க காலத்தின் புகழ் பெற்ற மன்னர்களாக சேரன் செங்குட்டுவன், ஆரியப் படை கடந்த நெடுஞ்செழியன், கரிகால் சோழன் ஆகியோர் விளங்கினர்.

தமிழ் நாட்டை இரண்டாவது கட்டமாக, கி.பி.3–ஆவது நூற்றாண்டு முதல் 6–ஆவது நூற்றாண்டு வரை களப்பிரர்கள் ஆண்டனர். இக்காலத்திலும் தமிழ் இலக்கியம் தொடர்ந்து வளர்ந்தது. வஜ்ஜிர நந்தி என்ற சமணத்துறவி மதுரையில் திராவிட சங்கத்தை ஏற்படுத்தினார். அச்சுத விக்ரந்தா உறையூரை ஆண்ட புகழ் பெற்ற களப்பிர மன்னராவார்.

களப்பிரர் ஆட்சி வட தமிழகத்தில் பல்லவர்களாலும், தென் தமிழகத்தில் பாண்டியர்களாலும் முடிவுக்கு கொண்டு வரப்பட்டது. சிம்ம விஷ்ணு, முதலாம் மகேந்திரவர்மன், நரசிம்மவர்மன் போன்ற பல்லவ மன்னர்கள், சாளுக்கியர்கள்,

ராட்டிரகூடர்கள், கங்கர்கள் ஆகியோரை வெற்றிகொண்டு ஒரு பெரும் பேரரசை உருவாக்கினர். அவர்கள் சைவ, வைணவ சமயங்களை ஆதரித்தனர். ஆகவே சைவ வைணவ ஆலயங்களை அமைத்தனர். தென் பகுதியில் பாண்டியர்கள் அரசியல் ஒற்றுமையை உருவாக்கியதுடன், பக்தி இயக்கத்திற்கும் ஆதரவு அளித்தனர். ஒன்பதாம் நூற்றாண்டு இறுதியில் விஜயலாய சோழன், ஆதித்திய சோழன் ஆகியவர்களால், தஞ்சையில் மீண்டும் சோழர்களின் ஆட்சி ஏற்பட்டது. முதலாம் பராந்தகன், முதலாம் இராஜராஜன், முதலாம் இராஜேந்திரன் போன்ற வலிமை வாய்ந்த மன்னர்களால் சோழ அரசு சோழப் பேரரசாக விரிவடைந்தது. அவர்கள் வெங்கி சாளுக்கியர்களையும், சேரர், பாண்டியர் மற்றும் சிங்களர்களையும் வென்றனர். இராஜேந்திரன் கடாரம் மற்றும் வங்கத்தின் மீது படையெடுத்தான். சோழர்கள் சைவ சமயத்தை பின்பற்றினர். அழகான, சிற்ப வேலைப்பாடுகளுடன் கூடிய பிரம்மாண்டமான சைவ கோவில்களைக் கட்டினர். அவற்றில் பிரகதீஸ்வரர் ஆலயம், (தஞ்சை பெரியகோவில்) கங்கை கொண்ட சோழபுரம், தாராசுரம் போன்றவை குறிப்பிட தக்கவை.

சோழர்கள் ஸ்ரீவிஜயப்பேரரசு, சீனா போன்ற தொலை தூர நாடுகளுடன் வாணிபத் தொடர்பு கொண்டிருந்தனர். 13 ஆம் நூற்றாண்டின் இறுதியில் மதுரையில் மீண்டும் பாண்டியர் ஆட்சி மீட்டுருவாக்கம் பெற்றதாலும் துவார சமுத்திரத்தில் போசளர்கள் (ஹோய்சாளர்கள்) எழுச்சியடைந்ததாலும், சோழர்கள் வீழ்ச்சிடைந்தனர்.

### ஆட்சி முறை

சங்க கால அரசு 'மன்னராட்சி' முறையில் அமைந்திருந்தது. மன்னர்கள் கட்டுப்பாடற்ற முழு அதிகாரம் பெற்று விளங்கினர். மன்னரின் அதிகாரத்தில் தலையிட எவருக்கும் உரிமையில்லை. இருப்பினும் மன்னர் 'அமைச்சரவை'யின் ஆலோசனைகளுக்கு மதிப்பளித்தார். 'அவை' 'நாளவை' 'மன்றம்' எனவும் அரசவை அழைக்கப்பட்டது. அரசவையில் அமைச்சர்கள், படைதலைவர்கள், உயர் அதிகாரிகள் பட்டத்து அரசி, பட்டத்து இளவரசர், மற்ற இளவரசர்கள், இடம் பெற்றனர். மன்னனுக்கு நிலையான படை அமைப்பு இருக்கவில்லை. போர் காலங்களில் கட்டாய இராணுவ சேவை வலியுறுத்தப்பட்டது. (அ) காலாட்படை (ஆ)குதிரைப்படை (இ)போர் யானைகள் (ஈ)தேர்படை என படைகள் நான்கு வகையாகப் பிரிக்கப்பட்டன. சங்க காலத்தில் கடற்படையெடுப்புகளும் நிகழ்ந்துள்ளன. (எ.கா) கடம்பர் என்னும் கடற்கொள்ளையாளர்களுக்கு எதிராக சேரன் செங்குட்டுவனது படையெடுப்பு, கரிகாலனது, சிங்கள படையெடுப்பு என்பனவற்றைக் கூறலாம். மண்டலம், கோட்டம், ஊர் என்ற உள்ளாட்சி நிர்வாக பிரிவுகள் இருந்தன. முதியோர் அவையால் கிராமங்கள் நிர்வகிக்கப்பட்டன. முறையான நிதி நிர்வாகம் நடைமுறையில் இருந்தது. போரின் போது கொள்ளையடிக்கப்பட்டவை, வணிக வரி, சுங்க வரி, உப்பு வரி, அன்பளிப்புகள், கப்பங்கள், போன்றவை அரசு வருவாய்களாகும். அரசர்கள், குறிப்பாக பாண்டியர்கள், மற்றும் சோழர்கள் விவசாயத்தை ஊக்குவித்தனர். காடுகளை அழித்து விளைநிலங்களை பெருக்கினர். தடுப்பணைகள் மூலம் ஆற்று நீரை சேகரித்தனர். புதிதாக கைப்பற்றிய இடங்களில் விவசாயிகளது குடியேற்றங்களை ஊக்குவித்தனர்.

பேரரசு காலத்தில் மன்னரது அதிகாரங்களும், பொறுப்புகளும் அதிகரித்தன. அமைச்சர்கள் மற்றும் அதிகாரிகளின் எண்ணிக்கை அதிகமானது. கடற்படையுடன் கூடிய வலிமையான, நிலையான படை உருவாக்கப்பட்டது. பல முறைகளை இணைத்த மாநில நிருவாக அமைப்பு ஏற்பட்டது. பேரரசு மண்டலங்களாக பிரிக்கப்பட்டது. மண்டலங்கள் நாடுகளாகவும், நாடுகள் கோட்டங்களாகவும் பிரிக்கப்பட்டன.

ஒவ்வொரு கோட்டமும் பல பேரூர்களையும் (பெரிய நகரங்கள்), ஊர்களையும் (கிராமங்கள்), நகரங்களையும் (வியாபார நகரம்), பட்டினங்களையும் (கடற்கறை நகரங்கள்) கொண்டிருந்தது.

கிராமங்களில் ஊரார், நாடுகளில், நாட்டார் எனப்படும் தன்னாட்சி அதிகாரம் கொண்ட உள்ளாட்சி அமைப்புகளால் நிருவகிக்கப்பட்டன. பிராமணர்கள் குடியிருப்புகளான கிராமங்கள் (பிரம்மதேயம்) உள்ளூர் பிராமணர்களது அவைகளால் நிருவாகம் செய்யப்பட்டன. அவை மகாசபைகள் எனப்பட்டது. மகாசபைகள் எவ்விதத்திலும் வெளியார் தலையீடுயின்றி சுதந்திரமாக செயல்பட்டதுடன் பொதுவான வரிகளிலிருந்து விலக்குகளும் பெற்றவையாக இருந்தன. சோழர்களின் காலம் மகாசபையின் பொற்காலம் என்பர். கோயில்கள் கட்டவும், பொதுப் பணிகள் செய்யவும் மக்களின் உடலுழைப்பு கட்டாயமாக்கப்பட்டது. உணவு உற்பத்தியைப் பெருக்க அணைகளும், கால்வாய்களும் அமைக்கப்பட்டன. ஏரிகளும் குளங்களும் கிணறுகளும் தோண்டப்பட்டன.

### சமுதாயம்

தொல்காப்பியத்திலுள்ள 'பொருளதிகாரத்தில்' சங்க கால தமிழரின் சமூக நிலை விவரிக்கப்பட்டுள்ளது. தமிழர்களிடம் பிறப்பை அடிப்படையாகக் கொண்ட சாதிமுறை காணப்படவில்லை. நிலத்தின் அடிப்படையில் திணைப்பிரிவுகள் கூறபட்டுள்ளன. புவியியல் அமைப்பில் தமிழ் நாட்டிலுள்ள நிலப்பகுதிகள் மலையும், மலை சார்ந்த பகுதியை குறிஞ்சி எனவும் காடும் காடு சார்ந்த பகுதியை முல்லை எனவும் (3) வயலும் வயல் சார்ந்த பகுதியை மருதம் எனவும் (4) கடலும் கடல் சார்ந்த பகுதியை நெய்தல் எனவும் (5) மழையின்றி வளம் குன்றி வறண்டுபோன பகுதியை பாலை எனவும் ஐவகை திணைகள் பிரிக்கப்பட்டிருந்தன. திணைகளின் அடிப்படையில் மக்களும் பின்வருமாறு பிரித்தறியப்பட்டனர்.

மக்கள் பொதுவாக கீழ் கண்டவாறு பிரிக்கப்பட்டனர்.

1. குறிஞ்சி நில மக்கள் – குறவர் (அ) வேடர்
2. முல்லை நில மக்கள் –இடையர் (அ) ஆயர்
3. மருத நில மக்கள் –உழவர்
4. நெய்தல் நில மக்கள் –பரதவர் (அ) மீனவர்
5. பாலைப் பகுதி மக்கள்–கள்ளர்

மருத நகரங்களில் அரசர், அந்தணர், வணிகர் வெள்ளாளர் என்ற நால்வகைப்பிரிவுகள் காணப்பட்டன. பாணர் (பாடகர்), விரலியர் (நடன மாடுபவர்), குயவர் (மட்பாண்டம் செய்வோர்), உமணர் (உப்பு வணிகர்), வண்ணார் (துணி துவைப்பவர்), நெசவாளர் (துணி நெசவு செய்பவர்), கைவினைஞர்கள், கவிஞர்கள், ஆசிரியர்கள் என்ற பல தொழில்களை செய்பவர்கள் வாழ்ந்ததாக சங்க கால இலக்கியங்களிலிருந்து அறிய முடிகிறது. பெண்கள் கல்வியறிவு பெற்றவர்களாயிருந்தனர். பல பெண் கவிஞர்களின் (புலவர்கள்) பெயர்கள் சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன.

காதல் திருமணங்கள் ஏற்றுக் கொள்ளப்பட்டன. 'கற்பை' பெண்கள் தங்கள் உயிருக்கு மேலாக மதித்தனர். சில அரச குடும்பங்களில் மட்டும் சதி என்னும் உடன்கட்டை ஏறிய ஒரு சில நிகழ்வுகள் குறிப்பிடப்பட்டுள்ளன.

பல்லவர்கள் காலத்தில் சாதி முறை கடுமையாக்கப்பட்டது. பிராமணர்களுக்கு சமுதாயத்தில் உயர்ந்த இடம் அளிக்கப்பட்டது. பிராமணர்கள் மதத்தலைவர்களாகவும், அரசியல் மற்றும் சமூக ஆலோசகர்களாகவும், நீதிபதிகளாகவும் இருந்தனர். அவர்களுக்கு நிலங்கள் தானமாகவும், வரிவிலக்குடனும் அளிக்கப்பட்டன. மற்ற அனைத்து பிரிவினரும் (அந்தணர் நீங்கலாக) சூத்திரர்கள் என்ற பிரிவில் கொண்டு வரப்பட்டனர். தீண்டாமை கடுமையாக்கப்பட்டது. நிலமற்ற உழவர்கள் கல்வி கற்பதிலும், கோவில் மற்றும் பொது நிகழ்வுகளிலும் ஒதுக்கப்பட்டனர்.

சோழர்களின் ஆட்சியின் இறுதியில் சாதி முறையில் வலங்கை, இடங்கை பிரிவுகள் தோன்றியதால், சமூகத்தில் சண்டை சச்சரவுகள், அமைதியின்மை போன்றவை அதிகரித்தன.

நாலடியார், திருக்குறள் போன்ற சங்க இலக்கியங்கள் சாதியை குறிப்பிடப்பட்டப் போதிலும், அதனை ஏற்கவில்லை. சங்க தமிழர்கள் சமய சடங்குகளின் மீது வைத்த நம்பிக்கையை விட ஒழுக்க நெறியை (நன்னெறி) மதித்தனர்.

பக்தி இயக்கத்தின் போதும் சாதிபாகுபாடு இல்லாமல் வேடர், புலையர், பறையர், போன்றவர்களையும் பக்தர்களாக ஆழ்வார்களும், நாயன்மார்களும் ஏற்றுக் கொண்ட போதிலும், அவர்களுக்கு கல்வி, கோயில், அரசுப் பணிகளில் உரிய பங்கினைத் தருவதற்கான கோரிக்கைகள் எழவில்லை.

### சங்க இலக்கியங்கள்

சங்க கால இலக்கியங்கள் வெவ்வேறு சமூகப் பிரிவுகளைச் சார்ந்த ஆண், பெண் புலவர்களால் எழுதப்பட்டன. சங்க இலக்கியங்கள் பொதுவாக மதசார்பற்றவை தங்களுக்கு எந்த ஒரு தெய்வீகத் தன்மையையும் கூறிக்கொள்ளாதவை. சங்க இலக்கியங்களில் தொல்காப்பியம், (இலக்கணநூல்) எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண்கீழ்கணக்கு மற்றும் இரட்டை காப்பியங்களான சிலப்பதிகாரமும், மணிமேகலையும் அடங்கும். எட்டுத் தொகை, பத்து பாட்டு போன்றவற்றில் காதலும், வீரமும் போற்றப்படுகின்றன. பெரும்பாலான பதினெண்கீழ்கணக்கு நூல்கள் ஒழுக்கத்தை (நீதியை) வலியுறுத்துகிறது. ஐம்பெரும் காப்பியங்களும் (சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி, சீவக சிந்தாமணி) ஐங்குறுநூறு காப்பியங்களும், (நீலகேசி, சூளாமணி, உதயனகுமார காவியம், யசோதரா காவியம் நாககுமார காவியம்) சில இலக்கண நூல்களும் (பிங்கல நிகண்டு, யாப் பெருங்கலம்) களப்பிரர் காலத்தில் இயற்றப்பட்டன. இப்பேரரசு காலத்தில் அதிகளவில் பக்தி இலக்கியங்கள் எழுதப்பட்டன. தேவாரம், திருவாசகம், நாலாயிரதிவ்யபிரபந்தம். பெரியபுராணம், கம்பராமாயணம் போன்ற இலக்கியங்கள் சைவ, வைஷ்ணவ சமயத்தைப் போற்றினர். நந்திகலம்பகம், மூவருலா, கலிங்கத்துப் பரணி, நன்னூல், வீரசோழியம் போன்றவை மதச் சார்பற்ற இலக்கியங்கள் குறிப்பிடதக்கவை. தமிழ் கல்விக்கு சோழர்கள் (புலவர் முற்றூட்டு) போன்றவை மூலமாக ஆதரவளித்தனர்.



இராமானுஜர்

பல்லவர்கள் காலத்தில் ஆட்சி மொழியாக சமஸ்கிருதம் ஏற்றுக் கொண்டாலும், அரசின் ஆதரவு சமஸ்கிருத கல்விக்கு இருந்த போதிலும், மத்தவிலாச பிரகசனம் கிரதார்ஜீனீயம், அவந்தி சுந்தரி, கதா, காவியதர்சம் போன்ற ஒரு சில சமஸ்கிருத இலக்கியங்களே புகழ்பெற்று விளங்கின. கோவில்களிலும் சமய சடங்குகளிலும் சமஸ்கிருத மொழியே பின்பற்றப்பட்டது. சமஸ்கிருதம் கற்பிக்கும் பிராமணர்களுக்கு வரி விலக்கு அளிக்கப்பட்ட (பட்ட விருத்தி வேத விருத்தி) நிலங்கள் தானமாக அளிக்கப்பட்டன.

### சமயம்

சங்க காலத்தில் வழிபாட்டு முறைகள் திணை அடிப்படையில் அமைந்திருந்தன. மதக்கண்ணோட்டத்தைப் பொறுத்தவரையில் மக்கள் எந்தவிதமான வெறித்தன்மையும் இல்லாத தாரளமான கண்ணோட்டம் கொண்டிருந்தனர். அவர்களது சமூக – அரசியல் நடவடிக்கைகளில், சமயம் ஒரு முக்கியமான

கூறாக இருக்கவில்லை. வீரக்கற்கள் வழிப்பாடு இருந்தது சேயோன், மாயோன், வேந்தன், வருணன். வலியோன், கொற்றவை போன்றவை திணை வழியிலான செல்வாக்குப் பெற்ற தெய்வங்களாக விளங்கின. கணேசர் வழிபாடு (விநாயகர்/பிள்ளையார்) காணப்படவில்லை. குரவைகூத்து, வெறியாட்டு போன்ற ஆடலும், பாடலும் வழிபாட்டில் இடம் பிடித்தன. இத்தெய்வங்களுக்கு மலர்களும், தானியங்களும் விலங்குகளும் படைக்கப்பட்டன. பிராமணர்களின் வேள்விகள், சில அரசர்களை கவர்ந்தபோதிலும், மக்களிடையே அவை புகழ் பெறவில்லை. சங்ககாலத்தில் சமணம், பௌத்தம், அஜீவிகைசம் போன்ற சமயத்தத்துவங்கள் தமிழ் சமுதாயத்தில் இடம்பிடித்தன. அவை களப்பிரர் காலத்தில் மிகவும் செல்வாக்குப் பெற்றன.

பல்லவர் காலத்தில் பக்தி இயக்கம் சிறப்பான இடத்தைப் பிடித்தது. ஆழ்வார்களும், நாயன்மார்களும் புத்த சமண சமயங்களை எதிர்த்து பிரச்சாரம் செய்தனர். சிவன், திருமால் போன்ற தெய்வங்களும் அவர்களது தேவியர்களும் முதன்மையான தெய்வங்களாயின. சோழர் ஆட்சியின் இறுதியில் 'முருகவழிபாடு' (முருக பக்தி) புகழ் பெற்றது. கோயில்களில், உள்ளூர் பூசகர்கள் படிப்படியாக அகற்றப்பட்டு பிராமணர்கள் பூசகர்களாக மாறினர். சமஸ்கிருதம் சமய மொழியாயிற்று. சமண, பௌத்த கோவில்கள் பல இடிக்கப்பட்டன. அல்லது சைவ, வைணவ கோயில்களாக மாற்றப்பட்டன. சோழர்கள் காலத்தில் ஏற்பட்ட சைவ, வைணவ சமய மோதல்களுக்கு சான்றாக, சிதம்பரம் கோவிலில் இருந்த தில்லை கோவிந்தராசர் சிலை அகற்றப்பட்டதும், வைணவரான ராமானுஜர் நாட்டை விட்டு வெளியேற நேர்ந்ததையும் கூறலாம். தமிழ்ச் சித்தர்கள் சாதி, கோயில், மூடச்சடங்குகள், மூடநம்பிக்கைகள் போன்றவற்றை அறிவு பூர்வமாக எதிர்த்தனர்.

சங்ககாலத் தமிழர்கள், தமக்கென தனியொரு இசை, நடனம், நாடகம் (பண், ஆடல், கூத்து) போன்ற கலைகளை உருவாக்கியிருந்தனர். பாணரும், விரலியரும் மரபு சார்ந்த இசை மற்றும் நடன கலைஞர்கள் ஆவர்.

யாழ் என்ற நரம்புக் கருவியும், குழல் என்ற காற்றுக் கருவியும், முழவு என்ற தோல் கருவியையும் இசை நிகழ்ச்சிகளில் பயன்படுத்தினர். திருவிழாக்களும் கடவுள் வழிப்பாடும் இசை, நடனத்துடன் ஒன்று கலந்திருந்தது. பல்லவர்களது குடுமியான் மலைக் கல்வெட்டில் உருத்திராச்சாரியார் என்ற புகழ் பெற்ற இசை கலைஞரைப் பற்றிய செய்தியுள்ளது. தேவாரம், திவ்வியபிரபந்தம் ஆகியவை இசையுடன் பாடக்கூடியவை. புராணங்கள் கூத்துகளாகவும், கதைகளாகவும் நடிக்கப்பட்டன. தேவதாசிகள் (ஆலயச் சேவகிகள்) மிகச் சிறந்த நடனமாதர்களாவார்கள்.

**கட்டிடக்கலை**

சங்க கால கட்டிடங்கள் அழியதக்க செங்கல், மரம் முதலியவற்றால் அமைக்கக்பட்டவை எனலாம். பல்லவர்கள் காலத்தில் அழகிய சிற்ப வேலைப்பாடுகளுடன் கூடிய குடவரைக் கோயில்களின் மூலம், ஒரு புதிய வகை சிற்பம் மற்றும் கட்டிடக் கலை அறிமுகப்படுத்தப்பட்டது. இந்த முறையில் மலைப் பாறைகளைக் குடைந்து புடைப்புச் சிற்பங்களுடன் கூடிய மண்டபங்கள் அமைக்கப்பட்டன. (எடுத்துக்காட்டு மாமல்லபுரத்திலுள்ள மகிஷாசுர மண்டபம், வராக மண்டபம்.) பின் ரதம் போன்று செதுக்கப்பட்ட ஒற்றைக்கற்கோவில்களை அமைத்தனர். (மாமல்லபுரம் பஞ்சபாண்டவ ரதங்கள்) அதன் பின் செதுக்கப்பட்ட கற்பாறைகளை இணைத்து கற்கோயில்களை கட்டினர். எடுத்துக்காட்டாக மாமல்லபுர கடற்கரை கோயில், காஞ்சி சைலாச நாதர் ஆலயம் வைகுந்த பெருமாள் ஆலயம். இக் கோயில்களிலுள்ள விமானங்கள் தனி சிறப்பு வாய்ந்தவை. பல்லவ கால கட்டிட

கலை பிற்கால சோழர் காலத்தில் மேலும் விரிவு படுத்தப்பட்டது. சோழர்கள் காலத்தில் பிரமாண்டமான வானளாவிய கோவில்கள் கட்டப்பட்டன. பரந்துவிரிந்த வளாகங்கள், பாதுகாப்பான உட்புற சுற்றுசுவர், சிற்பவேலைப்பாடு மிக்க அழகிய துாண்களுடன் கூடிய மண்டபங்கள் (மகா மண்டபம், அர்த்த மண்டபம், நர்த்தன மண்டபம், வாத்திய மண்டபம்) கருவறை, பெரிய விமானங்கள், தளங்கள் கட்டப்பட்டன கடவுளர்களுக்காக கருவறைகள் போன்ற கூறுகள் குறிப்பிடத்தக்கவை. தஞ்சை பிரகதீஸ்வரம், கங்கைகொண்ட சோழபுரம், தாராசுரம் போன்ற இடங்களில் காணப்படுகின்றன. கோயில்கள் சோழர் காலக்கட்டிடகலைக்குச் சிறந்த சான்றுகள். இக்கோயில்களில் எல்லாம் மிகச்சிறந்த சிற்ப வேலைப்பாடுகள் காணப்படுகின்றன.



ஐந்து ரதங்கள்

ஒவியக் கலைக்குச் சான்றாக சித்தன்னவாசல் குகைகள், காஞ்சி கைலாசநாதர் கோயில், பிரகதீஸ்வரர் கோயில்கள் போன்றவைகளில் மிகச் சிறந்த ஒவியங்கள் உள்ளன. கல்லிலே சிலை வடித்தது போன்று, வெண்கலம் போன்ற உலோகத்தாலும் சிலைகள் வார்க்கப்பட்டன. சோழர் காலத்திய வெண்கலத்தால் ஆன நடராசர் சிலை, சைவ, வைஷ்ணவ உற்சவ மூர்த்தி சிலைகள், 63 நாயன்மார்களின் சிலைகள் உலக புகழ் பெற்றவையாம்.



பிரகதீஸ்வரர் கோயில் – தஞ்சாவூர்

தமிழர்கள் தங்களுக்கென கணிதம், காலவியல், வானவியல், மருத்துவம் போன்ற துறைகளில் சிறந்து விளங்கினர். சங்க இலக்கியங்களில் எண், கணக்கு நாழிகை, யாமம், காதம், கோல் போன்ற அளவைகளும், இலையுதிர், இளவேனில் போன்ற கால கணக்குகளையும் காணலாம். ஏலாதி, திரிகடுகம், சிறு பஞ்சமூலம் போன்ற நூல்களின் பெயர்கள் மூலம் அவர்களின் மருத்துவ அறிவை அறியலாம்.



வைகுண்டப் பெருமாள் கோயில் – காஞ்சிபுரம்

கணியன் என்பவர் வானவியல் மற்றும் ஜோதிடவியலில் வல்லவராவார். தமிழ் சித்தர்கள் சித்த வைத்திய முறையில் தேர்ச்சி பெற்றவர்கள். அவர்கள் தங்கள் ஆய்வுகளையும், சிகிச்சைகளையும், மருந்து தயாரித்தலை பற்றியும் மருந்து தயாரிக்க பயன்படுத்திய மூலிகைகள் பற்றியும், தெளிவாக எழுதி வைத்துள்ளனர்.

இறுதியாக தமிழர்கள், மனிதச் செல்பாடுகளின் பல துறைகளிலும் சிறந்து விளங்கினர். அவர்களின் தத்தவம்

பேரளாவிய உலகப் பார்வை கொண்டது. அவர்களது இறையியல் மூடநம்பிக்கைகளுக்கு அதிக இடமளிக்கவில்லை. சமண, பௌத்த சமயங்கள் போன்று தமிழர்களும் "தீதும் நன்றும் பிறர் தரவாரா" என்ற கருத்தைக் கொண்டிருந்தனர். மனிதன் தன் விதியை தானே தீர்மானிக்கிறான் என்பதில் தெளிவாக இருந்தான். இந்திய வரலாற்றில் தமிழர்களின் மரபு ஒரு புகழ் வாய்ந்த பகுதியாகும்.

## பயிற்சி

### அ. சரியான விடையை தேர்வு செய்க

1. தமிழ் மொழி குறைந்தபட்சம்__________ஆண்டுகள் தொடர்ச்சியான வரலாற்றை உடையது.

   அ) 3500 ஆ) 2500 இ) 1500 ஈ) 4000

2. களப்பிரர்கள் __________ஆல் வடதமிழ்நாட்டிலும் காஞ்சியில் முறியடிக்கப்பட்டனர்.

   அ) பல்லவர்கள் ஆ) சேரர்கள்
   இ) சோழர்கள் ஈ) பாண்டியர்கள்

3. புகழ் பெற்ற இசைக்கலைஞர் உருத்ராசாரியார் பற்றி பல்லவர்களது__________ கல்வெட்டு குறிப்பிடுகிறது.

   அ) குடுமியான் மலை ஆ) உத்திர மேரூர்
   இ) மாமண்டூர் ஈ) மகேந்திரவாடி

4. பல்லவர்கள்__________ மொழிக்கு முக்கியத்துவம் அளித்தனர்.

   அ) தமிழ் ஆ) தெலுங்கு இ) சமஸ்கிருதம் ஈ) மலையாளம்

5. சங்க கால தமிழர்களின் சமூக நிலையை__________விளக்குகிறது.

   அ) மணிமேகலை ஆ) தொல்காப்பியம்
   இ) பத்துப்பாட்டு ஈ) எட்டுத் தொகை

### ஆ. பொருத்துக.

| | |
|---|---|
| 1. பட்டினம் | நாடகம் |
| 2. பாணர் | இசைவாணர் |
| 3. கூத்து | கடற்கரை பகுதி |
| 4. விரலியர் | காட்டு பகுதி |
| 5. முல்லை | மலை பகுதி |
| | நடனமாடுபவர் |
| | சமவெளி |

## இ. தலைப்புகளில் கீழ் கேட்கப்பட்ட அனைத்து கேள்விகளுக்கும் விடையளி.

1. சங்க இலக்கியம்

   அ) இரட்டை காப்பியங்களின் பெயர்களை கூறு.

   ஆ) சங்க இலக்கியத்தில் எத்தனை பெருங்காப்பியங்கள் உள்ளன ?

   இ) எந்த தமிழ் இலக்கியத்தில் "போரும் காதலும்" விவரிக்கப்பட்டுள்ளது ?

   ஈ.) பக்தி இலக்கியத்தை பற்றி ஓர் குறிப்பு வரைக.

2. சங்க கால சமுதாயம்

   அ) குறிஞ்சி நில மக்கள் யாவர் ?

   ஆ) கடற்கரை பகுதி எவ்வாறு அழைக்கப்பட்டது ?

   இ) சங்க தமிழர்களின் சமூக நிலையை எந்த நூல் கூறுகிறது ?

   ஈ) ஐந்திணைகள் யாவை ?

## ஈ. சுருக்கமாக விடையளி.

1. தமிழ் மொழியை பற்றி ஓர் குறிப்பு எழுதுக.
2. சோழர்கள் காலத்தில் கட்டப்பட்ட, புகழ்பெற்ற கோவில்களின் பெயர்கள் சிலவற்றை எழுதுக.
3. அரசுக்கு கிடைத்த வருவாய்கள் யாவை ?
4. களப்பிரர்களை பற்றி ஓர் குறிப்பு எழுது.
5. சித்த மருத்துவம் என்றால் என்ன ?
6. சங்க கால இசையை பற்றி ஓர் குறிப்பு வரைக.

## உ. விரிவான விடையளி.

1. சங்க கால நிர்வாக முறையை விவரி.
2. சோழர்களின் பண்பாட்டு பங்களிப்பை சுருக்கமாக எழுதுக.

## ஊ. செய்முறை பயிற்சி.

1. தென்னிந்திய வரைபடத்தில் சேர,சோழ பாண்டிய, பல்லவர்களின் எல்லைகளை வரையவும்.
2. புகழ் பெற்ற தென்னிந்திய கோவில்களின் நிழற்படங்களை சேகரிக்கவும்.

# புவியியல்

## 1. தமிழ் நாடு

தென் இந்தியாவின் கிழக்கு கடலோரப் பகுதியில் அமைந்துள்ள மாநிலமான தமிழ்நாடு, புதுச்சேரி, கேரளா, கர்நாடகம், ஆந்திரப் பிரதேசம் ஆகிய மாநிலங்களை எல்லைகளாக கொண்டுள்ளது. கிழக்கில் வங்காள விரிகுடாவையும், தெற்கில் இந்தியப் பெருங்கடலையும், மேற்கில் கேரளாவையும், வடக்கில் கர்நாடகம் மற்றும் ஆந்திரப்பிரதேசத்தினையும் தமிழகம் எல்லைகளாகக் கொண்டுள்ளது. தமிழ் மாநிலத்தின் ஆட்சி மொழியான 1958–ம் ஆண்டு ஜனவரி முதல் நடைமுறைக்கு கொண்டு வரப்பட்டது. இந்தியாவின் மொத்த மக்கள் தொகையில் ஆறாவது இடத்தை பெற்றுள்ள தமிழகம், விவசாயம் மற்றும் இயந்திர பொருட்கள் உற்பத்தியில் முன்னணி மாநிலங்களில் ஒன்றாகத் திகழ்கிறது.

தமிழ்நாடு வடக்கே 8° 05' அட்சத்திலிருந்து 13° 09' அட்சம் வரையிலும், கிழக்கே 76° 15' தீர்க்கத்திலிருந்து 80° 20' தீர்க்கம் வரை பரவியுள்ளது. ஏறக்குறைய முக்கோண வடிவ அமைப்பில் அமைந்துள்ள தமிழ்நாடு பரப்பளவில் இந்திய மாநிலங்களில் பதினொன்றாவது இடத்தை வகிக்கின்றது.

**உனக்குத் தெரியுமா ?**

இந்திய யூனியனின் தென் எல்லையாக கருதப்பட்ட இந்திரா முனை 2004ஆம் ஆண்டு ஆழிப்பேரலையின் (சுனாமி) காரணமாக கடலுக்கடியில் மூழ்கியது.

இந்தியாவில் நகரமயமாதலில் அதிக வளர்ச்சியடைந்த மாநிலங்களில் ஒன்றாகத் திகழும் தமிழ்நாடு தனித்தொரு புவியியல் மண்டலமாக திகழ்கின்றது. அழகிய இயற்கை வளங்களும், அடர்ந்த காடுகளும், அரிய வன விலங்குகளும், குளிர் மலைப்பிரதேசங்களும், திராவிட கலைநயம் மிக்க இந்துக் கோயில்களும், சிற்பக் கலைக்கூடங்களும் தமிழகத்தின் தனிப்பெரும் உடைமையாக உள்ளது. கடற்கரை விடுதிகள், பெருமை மிக்க மதவழிபாட்டுத் தலங்கள் மற்றும் யுனெஸ்கோவால் அங்கீகரிக்கப்பட்ட உலக பண்பாட்டுத் தலங்கள் நிறைந்த ஒரு மாநிலமாக இது திகழ்கிறது.

### ஆட்சிப் பிரிவுகள்

தமிழ்நாட்டின் மொத்த நிலப்பரப்பு 1,30,058 சதுர கிலோ மீட்டர்களாகும். இது இந்தியாவின் மொத்த பரப்பில் நான்கு சதவீதமாகும். நிர்வாக மேம்பாட்டிற்காக இம்மாநிலம் 32 மாவட்டங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. மாவட்டங்களின் பெயர்கள் பின் வரும் அட்டவணையில் கொடுக்கப்பட்டுள்ளது.

**அட்டவணை: தமிழ் நாட்டின் மாவட்டங்கள்**

| வ.எண் | மாவட்டம் |
|---|---|
| 1) | அரியலூர் |
| 2) | சென்னை |
| 3) | கோயம்புத்தூர் |
| 4) | கடலூர் |
| 5) | தருமபுரி |
| 6) | திண்டுக்கல் |
| 7) | ஈரோடு |
| 8) | காஞ்சிபுரம் |
| 9) | கன்னியாகுமரி |
| 10) | கரூர் |
| 11) | கிருஷ்ணகிரி |
| 12) | மதுரை |
| 13) | நாகப்பட்டினம் |
| 14) | நாமக்கல் |
| 15) | நீலகிரி |

| | |
|---|---|
| 16) | பெரம்பலூர் |
| 17) | புதுக்கோட்டை |
| 18) | இராமநாதபுரம் |
| 19 | சேலம் |
| 20) | சிவகங்கை |
| 21) | தஞ்சாவூர் |
| 22) | தேனி |
| 23) | திருச்சிராப்பள்ளி |
| 24) | திருநெல்வேலி |
| 25) | திருவள்ளூர் |
| 26) | திருவண்ணாமலை |
| 27) | திருவாரூர் |
| 28) | தூத்துக்குடி |
| 29) | திருப்பூர் |
| 30) | வேலூர் |
| 31) | விழுப்புரம் |
| 32) | விருதுநகர் |

## தெரிந்துகொள்


மாநிலப் பறவை: மரகதப்புறா


மாநிலப் பூ: செங்காந்தள் மலர்


மாநில விலங்கு: வரையாடு


மாநில மரம் : பனைமரம்

அட்டவணை:
தமிழ்நாட்டின் உள்ளாட்சி அமைப்பு

| | |
|---|---|
| மக்களவை தொகுதிகள் | 39 |
| சட்டமன்ற தொகுதிகள் | 234 |
| மாவட்டங்கள் | 32 |
| மாநகராட்சிகள் | 10 |
| ஊராட்சி ஒன்றியங்கள் | 152 |
| நகர பஞ்சாயத்துக்கள் | 611 |
| கிராமப் பஞ்சாயத்துக்கள் | 12618 |

**செய்முறை**

இவற்றுள் உன்னுடைய உள்ளாட்சி அமைப்பு எது என்பதை கண்டு பிடி ?

# தமிழ்நாடு
## மாவட்டங்கள்



## தமிழ் நாட்டின் வரலாறு

தமிழகத்தின் தோற்றம் மற்றும் வளர்ச்சி சுமார் 6000 ஆண்டுகளுக்கு மேற்பட்ட பழமையான ஒன்றாகும். சுமார் 1000 ஆண்டுகளுக்கு முன்னரே திராவிட பாரம்பரியத்துடன் ஆரிய நாகரிகம் கலந்ததன் காரணமாக நாகரிகத்தின் தொட்டிலாகவே தமிழகம் விளங்குகிறது. வானுயர்ந்த கோயில் கோபுரங்கள், கலைச் சிற்பங்கள், தொன்மை வாய்ந்த கலாச்சார நினைவிடங்கள் ஆகியவை பண்பாட்டின் பிரதிபலிப்பாக மாநிலமெங்கும் விரவி காணப்படுகிறது.

தமிழ் மொழியின் வளர்ச்சிக் காலத்தை மூன்று சங்க காலங்களைக் கொண்டு அறியலாம். மதுரையில் திகழ்ந்த முதற் தமிழ்ச் சங்கம் கடல்கோளால் அழிந்தது. இரண்டாம் தமிழ்ச் சங்கம் கபாடபுரத்திலும், மூன்றாம் தமிழ்ச் சங்கம் மதுரையில் அமைந்தது. தமிழ் மொழிக்கே உரித்தான சிறந்த இலக்கண காப்பியமான தொல்காப்பியம் சங்க காலத்தில் உருவான இலக்கியங்களுள் ஒன்றாகும். சங்க இலக்கியங்களுள் குறிப்பிடத்தக்க ஒன்றான எட்டுத் தொகையும், பத்துப் பாட்டும் சங்க காலத்தின் படைப்பிலக்கியங்களின் ஒன்றாகும்.

திருக்குறளின் ஆசிரியரான திருவள்ளுவர் தன்னுடைய படைப்பில் தனிப்பட்ட எந்தவொரு மதத்தையோ, நாட்டையோ அல்லது மக்களையோ குறிப்பிடவில்லை. அதனாலேயே அவர் தெய்வீக புலவர் என்று போற்றப்படுகிறார்.

அனைவருக்கும் பொருந்தக் கூடிய கருத்துகளை கொண்டுள்ளதால் திருவள்ளுவரால் இயற்றப்பட்ட திருக்குறள் உலகளாவிய இலக்கியம் என பெருமைப் படுத்தப்பட்டுள்ளது. செம்மொழியாக உயர்த்தப்பட்டுள்ள தமிழ்மொழி, செம்மொழி தரவரிசையில் எட்டாவதாகும்.

பண்டைய தமிழகத்தை சேர, சோழ, பாண்டியர் மற்றும் பல்லவர்களான நான்கு தமிழ் மன்னர்கள் ஆண்டனர். அவர்களின் ஆட்சியில் கலை, இசை, வணிகம், மற்றும் வேளாண்மை போன்றவை மிக வளர்ச்சியடைந்த நிலையில் காணப்பட்டதால் அவர்கள் ஆட்சிக்காலம் "தமிழ் நாட்டின் பொற்காலம்" என்று போற்றப்படுகிறது.

**தெரிந்துகொள்**

கிறித்துவ டச்சு பாதிரியார்களால் முதல் தமிழ் அச்சகம் தரங்கம்பாடியில் தொடங்கப்பட்டது.

### பயிற்சி

**அ. சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக.**

1. இந்திய மாநிலங்களில் பரப்பளவில் தமிழ் நாடு ____________ இடத்தை வகிக்கின்றது.

   அ) 5வது ஆ) 7ஆவது இ) 9ஆவது ஈ) 11ஆவது

2. தமிழ் நாடு ____________ மாவட்டங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

   அ) 28 ஆ) 30 இ) 32 ஈ) 34

3. தமிழ் நாட்டில் ____________ மாவட்டம் கிழக்கு கடற்கரையோரத்தில் அமைந்துள்ளன.

   அ) நீலகிரி ஆ) தேனி இ) நாகப்பட்டினம் ஈ) கோயம்புத்தூர்

4. இந்தியாவின் ____________ முனையில் தமிழ் நாடு அமைந்துள்ளது.

   அ) வடகிழக்கு ஆ) தென் மேற்கு இ) தென் கிழக்கு ஈ) வட மேற்கு

5. இந்தியாவின் மொத்த பரப்பளவில் தமிழ் நாடு ____________ விகித அளவில் அமைந்துள்ளது.

   அ) 4% ஆ) 5% இ) 3% ஈ) 2%

## ஆ. பொருத்துக.

| | | |
|---|---|---|
| 1. | மாநில பறவை | 152 |
| 2. | மாநில மரம் | 234 |
| 3. | சட்டமன்ற தொகுதிகள் | பனைமரம் |
| 4. | ஊராட்சி ஒன்றியங்கள் | தமிழ் நாட்டின் மேற்குப் பகுதி |
| 5. | கர்நாடகம் | மரகதப் புறா |
| | | 10 |
| | | மயில் |

## இ. சுருக்கமான விடை தருக.

1. தமிழ் நாட்டின் எல்லைகளைக் குறிப்பிடுக
2. தமிழ் நாட்டின் உள்ளாட்சி அமைப்புகளை எழுதுக ?
3. தமிழ் நாட்டின் அட்ச ரேகை, தீர்க்க ரேகை பரவலைக் கூறுக.
4. தமிழ் நாட்டின் எல்லைகளில் அமைந்துள்ள கடல்கள் யாவை ?
5. தமிழ் நாட்டின் மேற்கு பகுதியில் அமைந்துள்ள நான்கு மாவட்டங்களின் பெயர்களை எழுதுக.
6. தமிழ் நாட்டின் கடலோரப் பகுதியில் அமைந்துள்ள மாவட்டங்களின் பெயர்களை எழுதுக.

## உ. விரிவான விடை தருக.

1. தமிழ் நாட்டின் அமைவிடத்தைப் பற்றி விளக்குக
2. தமிழ் நாட்டின் வரலாற்றை தொகுத்து எழுது.

## ஊ. கொடுக்கப்பட்டுள்ள தமிழ் நாட்டின் வரைபடத்தில் பின்வருவனவற்றைக் குறிக்க.

1. கன்னியாகுமரி
2. இந்தியப் பெருங்கடல்
3. வங்காள விரிகுடா
4. சென்னை
5. புதுச்சேரி
6. ஈரோடு
7. புதுக்கோட்டை

# 2. தமிழ் நாட்டின் இயற்கை அமைப்பு

தமிழ் நாட்டின் இயற்கை அமைப்பு சற்று ஏறக்குறைய முக்கோண வடிவமான அமைப்பினைப் பெற்றுள்ளது. மேற்கு மற்றும் வடமேற்குப் பகுதிகளில், மேற்கு மலைத் தொடர்களாலும், கிழக்குப் பகுதியில் வங்கக் கடல் மற்றும் அதனை ஒட்டியுள்ள கிழக்கு தொடர்ச்சி மலைகளாலும், தெற்குப் பகுதியில் இந்தியப் பெருங்கடலாலும் சூழப்பட்டுள்ளது. தமிழ்நாட்டின் இயற்கையமைப்பு பொதுவாக அகன்ற உயர் நிலப்பரப்பாக காணப்படுகிறது. இதில் அதிகம் அரிக்கப்படாத மலைத் தொடர்களின் எஞ்சிய பகுதிகளும், அகன்ற ஆழம் குறைவான பள்ளத்தாக்குகளும் மற்றும் ஆற்றுச்சமவெளிகளும் காணப்படுகின்றன.

## இயற்கை அமைப்பு

பொதுவாக, தமிழ்நாட்டின் இயற்கை அமைப்பை நான்கு பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

1. மலைகள் (மேற்கு தொடர்ச்சி மலைகள் மற்றும் கிழக்கு தொடர்ச்சி மலைகள்)
2. பீடபூமி பகுதி
3. சமவெளிப் பகுதிகள்
4. கடலோரப் பகுதிகள்

## தமிழ் நாட்டின் மலைகள்

தமிழ் நாட்டில் மேற்குத் தொடர்ச்சி மலை நீலகிரி மாவட்டம் வழியாக நுழைந்து கன்னியாகுமரி மாவட்டம் வரை நீண்டு பரவியுள்ளது. கிழக்குத் தொடர்ச்சி மலைகளை விட மேற்குத் தொடர்ச்சி மலைகள் சற்றே மாறுபட்ட அமைப்புடன் காணப்படுகின்றது. இதன் சராசரி உயரம் 1000 மீட்டர்கள் முதல் 1500 மீட்டர்கள் வரை உள்ளன. தமிழ்நாட்டில் மலைத் தொடரின் அதிகபட்ச உயரமான சிகரங்கள் தொட்டபெட்டா (2620 மீட்டர்கள்) மற்றும் முக்கூர்த்தி (2540 மீட்டர்கள்) ஆகும். மேற்கு மலைத்தொடரின் வடமேற்குப் பகுதியில் நீலகிரி உயர்நிலப்பகுதி சுமார் 2500 சதுர மீட்டர்கள் பரப்பில் பரவிக் காணப்படுகின்றது. இவ் உயர்நிலப் பகுதியின் சராசரி உயரம் 1800 மீட்டர் முதல் 2400 மீட்டர் ஆகும். அவற்றில் தொட்டபெட்டா சிகரம் தமிழ் நாட்டின் மிக உயர்ந்த சிகரமாகும். மேற்கு மலைத் தொடரும், கிழக்கு மலைத் தொடரும் நீலகிரி மலைப்பகுதியில் ஒன்று சேர்கின்றன. தமிழ் நாட்டின் நீலகிரியிலிருந்தும் கேரளாவின் ஆனைமுடி மலையிலிருந்தும் ஓர் கிளைத்தொடர் குன்று கிழக்கு நோக்கி சுமார் 1500 மீட்டர்கள் முதல் 2000 மீட்டர் உயரத்தில் வரை கிழக்கு நோக்கி செல்கின்றது. இதற்கு பழனிக் குன்றுகள் என்று பெயர். பழனிக் குன்றுகளுக்கு தெற்கே வருச நாடு, ஆண்டிப்பட்டி என்ற இரு மலைத் தொடர்கள் காணப்படுகின்றன. மேற்கு தொடர்ச்சி மலைகள் இடைவெளியற்று காணப்பட்டாலும் பாலக்காடு அருகே 25கி.மீ. நீளத்தில் ஓர் கணவாய் காணப்படுகின்றது. பாலக்காட்டு கணவாய்க்குத் தெற்கே ஆண்டிப்பட்டி மலை, ஏலமலை, அகத்திய மலை ஆகிய மலைகள் காணப்படுகின்றன. ஏலமலைத் தொகுதியில் செழிப்பு மிக்க கம்பம் பள்ளத்தாக்கு அமைந்துள்ளது. வருச நாடு மலைக்கும் அகத்தியர் மலைக்கும் இடையே காணப்படும் இடைவெளி, செங்கோட்டை கணவாய் என்று அழைக்கப்படுகின்றது.

சமவெளிகளையும், பீட பூமிகளையும் பிரிக்கும் தமிழ்நாட்டின் மலைகளுக்கு இடையே இரண்டு குறிப்பிடத்தக்க இடைவெளிகள் காணப்படுகின்றன. அவை தெற்கில் ஆத்தூர் கணவாய் என்றும், வடக்கில் செங்கம் கணவாய் என்றும் அழைக்கப்படுகிறது. இக்கணவாய்கள் கடலூர் மாவட்டத்தை சமவெளி பகுதியோடும், சேலம் மாவட்டத்தை பீடபூமி பகுதியோடும் இணைக்கிறது.

# தமிழ்நாடு
# நிலத் தோற்ற உயர வேறுபாடுகள்

வ



# தமிழ்நாடு இயற்கை அமைப்பு

வ

ஆந்திரப்பிரதேசம்

கர்நாடகா

சின்னா

ஆர்க்கவதி

காவிரி

கவன் நீர் வீழ்ச்சி

கபினி

நாடேரி

புழல் ஏரி

பாலாறு

செய்யாறு

ஏலகிரி

ஜவ்வாது மலை

ஸ்டேன்லி நீர்த்தேக்கம்

சாத்தனூர்

பொன்னி ஆறு

செஞ்சி மலை

பவானிசாகர் நீர்த்தேக்கம்

தொட்டபெட்டா

நீலகிரி மலை

முக்கூர்த்தி ஏரி

சித்தேரி மலை

கல்வராயன் மலை

வெள்ளாறு

கீழ்காவிரி சமவெளி

நொய்யல்

கொள்ளிடம்

காவிரி

மலப்புலா

அமராவதி

கொல்லிமலை

பச்சமலை

ஆனைமலை

ஆண்டிப்பட்டி மலை

வெள்ளாறு

கம்பம் பள்ளத்தாக்கு

மேல் வைகை பள்ளத்தாக்கு

கேரளா

பழனிமலை

கீழ் வைகை சமவெளி

குண்டாறு

வைகை

வைப்பாறு

பாக் ஜலசந்தி

குறிப்பு

இயற்கை அமைப்பு உயரங்களில்

| | |
|---|---|
| 1800மீ | |
| 1350 | |
| 900 | |
| 600 | |
| 300 | |
| 150 | |
| ஏரி | |
| ஆறு | |
| மலை | |
| மலைச் சிகரம் | |

மன்னார் வளைகுடா

தாமிரவருனி

அகஸ்தியர் மலை

கோதையாறு



இடைவெளியற்று நீண்டு ஓடும் மேற்கு தொடர்ச்சி மலைகளின் குறிப்பிடத்தக்க கணவாய்கள் பாலக்காடும் செங்கோட்டையும் ஆகும்.



மேற்கு தொடர்ச்சி மலை

மேற்கு தொடர்ச்சி மலைகளோடு ஒப்பிடும் போது கிழக்கு தொடர்ச்சி மலைகள் தொடர்ச்சியற்ற மலைகளாக காணப்படுகின்றது. இடைவெளிவிட்டு காணப்படும் தனித்த மலைப்பகுதிகள் வடகிழக்கில் இருந்து தென் மேற்காக வேலூர், தருமபுரி, மற்றும் ஈரோடு மாவட்டங்களில் விரவி காணப்படுகிறது. இம்மலைகளின் சராசரி உயரம் 1100 மீட்டர்கள் முதல் 1600 மீட்டர்கள் வரை ஆகும். இம்மலைப் பகுதிகள் வெவ்வேறு பகுதிகளில் பல்வேறுப் பெயர்களால் அழைக்கப்படுகின்றன. அவை யாவன –

1.வேலூர் மாவட்டத்தில் உள்ள ஜவ்வாது மற்றும் ஏலகிரி மலை

2.சேலம் மாவட்டத்தில் உள்ள சேர்வராயன் மலை.

3.விழுப்புரம் மாவட்டத்தின் கல்ராயன் மலை.

4.திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் உள்ள பச்சை மலை

5.நாமக்கல் மாவட்டத்தில் உள்ள கொல்லி மலை.

6. தருமபுரி மற்றும் சேலம் மாவட்டத்திலும் விரவியுள்ள சித்தேரி மலை.

7. திருவண்ணாமலை மாவட்டத்தில் உள்ள செஞ்சி மலை.

மேற்குறிப்பிட்ட மலைகள் அனைத்தும் கூட்டாக தமிழ்நாட்டின் மலைகள் என அழைக்கப் படுகின்றன.

1. கிழக்குத் தொடர்ச்சி மலைகளில் உயர்ந்த மலை – சேர்வராயன் மலை (1500 – 1600 மீட்டர்)

2. மேற்குத் தொடர்ச்சி மலைகளில் உயர்ந்த மலை – ஆனைமலை (2700 மீட்டர்)

## தமிழ்நாட்டின் பீட பூமிகள்

மேற்குத் தொடர்ச்சி மலைகளும், கிழக்குத் தொடர்ச்சி மலைகளும் நீலகிரி பீடபூமியில் சந்திக்கின்றன. இப்பீடபூமியில் இருந்து நான்கு கிலோ மீட்டர் தொலைவில் கீழ் நோக்கி சுமார் 1800 மீட்டர் உயரத்தில் கோயம்புத்தூர் பீடபூமியை நோக்கி இவ் உயர்நிலம் சரிகின்றது. அங்கிருந்து மேலும் சரிந்து சேர்வராயன் உயர்நிலங்களுக்கு மேற்காக பாராமஹல் பீடபூமி என்று அழைக்கப்படும் தருமபுரி பீடபூமி அமைகிறது. இப்பீடபூமியின் சராசரி உயரம் சுமார் 300 முதல் 700 மீட்டர் ஆகும். இவை மேற்கில் மைசூர் பீடபூமியும் இணைகிறது. பொதுவாக தமிழ்நாட்டின் பீடபூமிகளின் சராசரி உயரம் கிழக்கில் இருந்து சுமார் 120 மீட்டர்களில் இருந்து மேற்காக 300 முதல் 400 மீட்டர் வரை உயர்ந்து காணப்படுகிறது. பொதுவாக தமிழ் நாட்டின் பீடபூமிகளை கோயம்புத்தூர் பீடபூமி மற்றும் மதுரை பீடபூமி என்று இரு பிரிவுகளாக பிரிக்கலாம். இவ்விரு பீடபூமி பிரிவுகளுக்கு இடையே பல தனித்தக் குன்றுகள் காணப்படுகின்றன. இவ்வகை குன்றுகளுள் ஒன்று ஈரோடு மாவட்டத்தில் உள்ள சென்னிமலை ஆகும்.

## தமிழ்நாட்டின் சமவெளி பகுதிகள்

தமிழ் நாட்டின் சமவெளிகளை ஆற்றுச் சமவெளி மற்றும் கடலோர சமவெளி என இருபிரிவுகளாக பிரிக்கலாம். கடலோரச் சமவெளிகள் வடக்கே பழவேற்காடு ஏரியில் இருந்து தெற்கே கன்னியாகுமரி வரை சுமார் 1000 கிலோ மீட்டர் நீளத்தில் பரவியுள்ளது. இச்சமவெளியின் சராசரி உயரம் 50 மீட்டர் ஆகும். ஆற்று சமவெளிகள் தமிழ்நாட்டின் முக்கிய

ஆறுகளின் செய்கையால் அமையப்பெற்றுள்ளது. வடக்கில் பாலாறு, செய்யாறு, பெண்ணாறு மற்றும் வெள்ளாறு ஆகிய நதிகளால் ஏற்படுத்தப்பட்டுள்ளது. மத்திய தமிழக ஆற்றோரச் சமவெளி காவிரி மற்றும் அதன் துணை ஆறுகளால் உண்டாக்கப்பட்டுள்ளது. தெற்குப் பகுதியில் பாயும் வைகை, வைப்பார் மற்றும் தாமிரவருணி ஆகிய நதிகள் தென்னக ஆற்றுச்சமவெளிகளை உருவாக்கியுள்ளது. திருவள்ளூர், காஞ்சிபுரம், கடலூர் மற்றும் விழுப்புரம் மாவட்டத்தில் உள்ள கடலோர சமவெளி தொன்றுதொட்டு சோழ மண்டல சமவெளி என்ற பெயரால் அழைக்கப்படுகிறது.

தமிழ்நாட்டில் இரண்டு கடற்கரைகள் குறிப்பிடத் தக்கதாகும். அவை –

1. மெரினா கடற்கரை

2. இராமேஸ்வரம் கடற்கரை

## மெரினா கடற்கரை

உலகின் இரண்டாவது அழகிய பெரிய கடற்கரையான மெரினா சுமார் 13 கிலோமீட்டர் நீளம் வரை பரவியுள்ளது. இது சென்னை நகரின் முக்கியச் சுற்றுலா தலங்களுள் ஒன்றாகும்.



மெரினா கடற்கரை

## இராமேஸ்வரம் கடற்கரை

அழகிய கடல்நிலத் தோற்றங்களுக்கும் அலையில்லாக் கடற்பரப்பிற்கும் இக்கடற்கரை புகழ் பெற்றதாகும். இங்கு கடல் அலைகள் 3 செ.மீட்டருக்கும் மிகாத அளவிற்கு எழும்புவதால் இது பார்ப்பதற்கு ஓர் மிகப் பெரிய ஆறு போன்ற தோற்றத்தை அளிக்கின்றது.



இராமேஸ்வரம் கடற்கரை

## தமிழ் நாட்டின் ஆறுகள்

தமிழ்நாட்டின் வடக்கே ஆரணியாறு, கொற்றலையாறு, பாலாறு, செய்யாறு, கடிலம் ஆறு, மணிமுத்தாறு மற்றும் தென் பெண்ணையாறு ஆகிய நதிகள் பாய்ந்து வளப்படுத்துகின்றன. தமிழ்நாட்டின் முக்கிய ஆறான காவிரி, கர்நாடக மாநிலத்தில் குடகு மாவட்டத்தில் உற்பத்தியாகிறது. காவிரியும் அதன் துணை ஆறுகளான பவானி, நொய்யல், மோயார் மற்றும் அமராவதி ஆகிய ஆறுகள் திருச்சி, தஞ்சை, திருவாரூர் மற்றும் நாகப்பட்டினம் மாவட்டங்களின் நீர் ஆதாரமாக விளங்குகின்றது. தமிழகத்தின் மத்தியப் பகுதியை காவிரி, கொள்ளிடம் மற்றும் வெள்ளாறு ஆகிய நதிகள் வளப்படுத்துகின்றன. காவிரி ஆறுக்கும் அதன் முதன்மை கிளையாறு ஆகிய கொள்ளிடத்திற்கும் இடையே ஸ்ரீரங்கம் அமையப்பெற்றுள்ளது. காவிரி டெல்டா பகுதியில் கொள்ளிடம், மண்ணியாறு, வெண்ணாறு, வெட்டாறு, அரசலாறு, நாட்டாறு, மணிக்கொண்டனாறு, குடமுருட்டி மற்றும் வீரசோழனாறு ஆகிய கிளையாறுகள் நாற்கர வடிவில் உள்ள ஓர் வண்டல் சமவெளிப்பகுதியை உருவாக்கியுள்ளது. தமிழகத்தின் தென்பகுதியில் பாயும் ஆறுகள் பின்வருமாறு; வைகை (மதுரை) , வைப்பார் (விருதுநகர்), தாமிரவருணி (திருநெல்வேலி), குண்டாறு (தூத்துக்குடி, இராமநாதபுரம்), சிற்றாறு (திருநெல்வேலி) மற்றும் கோதையாறு (கன்னியாகுமரி), தமிழகத்தின் பெரும்பான்மை சமவெளி பகுதியின் வண்டல் மண் கிழக்கு நோக்கி பாயும் ஆறுகளால் உற்பத்தி செய்யப்பட்டதே ஆகும்.

# தமிழ்நாடு
# ஆறுகள்

வ




அட்டவணை

ஆறுகள்
அருவிகள்
அணைக்கட்டுகள்

## பயிற்சி

### அ. சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக.

1. கிழக்குத் தொடர்ச்சி மலையில் அமைந்துள்ள குன்று ____________ ஆகும்.
   அ) நீலகிரி   ஆ) கல்ராயன் மலை   இ) ஏலமலை   ஈ) பழனிமலை
2. தமிழ் நாட்டின் மிகப்பெரிய சிகரம் ____________ ஆகும்
   அ) ஆனைமுடி   ஆ) தொட்டபெட்டா   இ) குடகுமலை   ஈ) பிரம்மகிரி மலை
3. சிற்றாறு ____________ ஆற்றின் முக்கிய துணையாறு ஆகும்.
   அ) காவிரி   ஆ) தாமிரவருணி   இ) வைகை   ஈ) பாலாறு
4. தமிழ் நாட்டின் நீளமான ஆறு ____________ ஆகும்.
   அ) தாமிரவருணி   ஆ) வைகை   இ) பாலாறு   ஈ) காவிரி
5. நொய்யலும் அமராவதியும் ____________ ஆற்றின் துணையாறுகள் ஆகும்.
   அ) வைகை   ஆ) காவிரி   இ) பாலாறு   ஈ) பெரியாறு

### ஆ. பொருத்துக.

| | |
|---|---|
| 1. கிழக்குத் தொடர்ச்சி மலை | மதுரை |
| 2. மேற்குத் தொடர்ச்சி மலை | கர்நாடகம் |
| 3. காவிரி ஆறு | நீலகிரி |
| 4. கொடைக்கானல் | சேர்வராயன் |
| 5. வைகை | கோயம்புத்தூர் |
| | மலைகளின் அரசி |
| | சென்னை |

### இ. சுருக்கமான விடை தருக.

1. தமிழ் நாட்டின் முக்கியமான ஆறுகளை எழுதுக.
2. தமிழ் நாட்டின் இயற்கை அமைப்பின் பிரிவுகளைக் கூறுக
3. தமிழ் நாட்டின் வட மாவட்டங்களில் பரவி இருக்கும் முக்கியமான மலைகளை எழுதுக.
4. மெரீனா கடற்கரையைப் பற்றி சிறு குறிப்பு வரைக.
5. கிழக்குத் தொடர்ச்சி மலைக்கும், மேற்குத் தொடர்ச்சி மலைக்கும் இடையே உள்ள வேறுபாடுகளை எழுதுக.

### உ. விரிவான விடைத் தருக.

1. தமிழ் நாட்டின் பீடபூமிகளைப் பற்றி விரிவாக எழுதுக.
2. தமிழ் நாட்டின் ஆறுகளைக் குறித்து ஒரு நீண்ட விளக்கம் கூறுக.

### ஊ. கொடுக்கப்பட்டுள்ள தமிழ் நாட்டின் வரைபடத்தில் பின்வருவனவற்றைக் குறிக்கவும்.

1. காவிரி ஆறு, 2. தொட்டபெட்டா, 3. கோயம்புத்தூர் பீடபமி, 4. சோழமண்டல கடற்கரை 5. வைகை ஆறு, 6. அகத்திய மலை, 7. நீலகிரி மலை, 8. கொள்ளிடம், 9. ஏலகிரி, 10.கல்வராயன் மலை

# 3. தமிழ் நாட்டின் காலநிலை

இயற்கை அமைப்பு, கடலுக்கு அண்மை, மற்றும் புவியியல் அமைவிடம் ஆகிய காரணிகள் புவியியல் பகுதிகளின் காலநிலையை தீர்மானிக்கும் காரணிகளாக அமைகின்றன.

ஒரு குறிப்பிட்ட இடத்தில், ஒரு குறிப்பிட்ட நேரத்தில் வளிமண்டலத்தில் காணப்படும் சூழல் வானிலை எனப்படுகிறது.

ஓர் பெரிய பரப்பிற்கான நீண்டகால சராசரி வானிலை (பொதுவாக சுமார் 30 வருடங்களுக்கான சராசரி வானிலை) அல்லது இயல்பான வானிலைக்கு காலநிலை என்று பெயர்.

முக்கியக் காலநிலை கூறுகள்: வெப்ப நிலை, அழுத்த நிலை, காற்று, ஈரப்பதம், மேகங்கள் மற்றும் மழைப் பொழிவு.

தமிழ் நாட்டின் காலநிலை பொதுவாக அயன மண்டல காலநிலை வகையை சார்ந்ததாகும். ஆண்டுக்கு இருமுறை சூரியனின் செங்குத்தான ஒளிக்கதிர்கள் தமிழ் நாட்டில் விழும். தமிழ்நாட்டின் காலநிலையைப் பாதிக்கக்கூடிய காரணிகள் இரண்டு ஆகும். 1. சூரியனின் கதிர்கள் பூமியில் படும் கோணம் 2. மழையைத் தருவிக்கும் பருவக் காற்றுகளினால் உண்டாகும் நேரடி தாக்கம். புவியியல் அமைவிடத்தின் (கடலோரம் மற்றும் உள்நாட்டு அமைவிடம்) முக்கியத்துவத்தை பெரிதும் உணர்த்தும் ஓர் புவியியல் பிரதேசமாக தமிழகம் விளங்குகிறது. தமிழ்நாடு அயன மண்டலக் காலநிலை பிரதேசத்தில் அமையப் பெற்றாலும், அதன் உள்நாட்டு வானிலை, சூழல் காரணமாக வெப்ப நிலை, ஈரப்பதம், மேகங்களின் அமைப்பு மற்றும் காற்று வீசும் திசை ஆகிய காரணிகளால் பிற அயன மண்டலப் பிரதேசங்களிலிருந்து இதனை பெரிதும் வேறுபடுத்துகின்றன.

பிப்ரவரி இரண்டாம் வாரத்திலிருந்து உயர தொடங்கும் வெப்ப அளவு ஒரே சீராக உயர்ந்து மார்ச், ஏப்ரல் மற்றும் ஜூன் மாதங்களின் முடிவில் கோடைப் பருவத்திற்கான உச்ச அளவை எட்டுகிறது. அதன் பிறகு ஜூன் இரண்டாம் வாரத்திலிருந்து வெப்பம் மெல்ல, மெல்ல குறையத் தொடங்கி அக்டோபர் முதல் வாரத்தில் வடகிழக்கு பருவக் காற்று மழையால் மேலும் குறைந்து அந்நிலை பிப்ரவரி மாதம் வரை நீடிக்கின்றது. தமிழ் நாட்டில் மே மாதம் வெப்பமிகு மாதமாகவும், ஜனவரி மாதம் குளிர் மிகுந்த மாதமாகவும் உள்ளது. தமிழ் நாட்டின் வெப்ப நிலை பொதுவாக மேற்குறிப்பிட்ட முறையில் இருந்தாலும், அதன் கால நிலை, கடற்கரை சமவெளி, உள்நாட்டுச் சமவெளி, பீட பூமி மற்றும் மலைப்பகுதிகளில் பருவ காலங்களுக்கு ஏற்ப மாறுபட்டுக் காணப்படுவதை பின்வரும் அட்டவணை எளிதாக விளக்குகிறது.

அட்டவணை: பகுதிவாரியாக பருவ காலங்களில் வெப்பத்தின் அளவு

| வ. எண் | புவியியல் அமைவிடம் | வானிலை நிலையங்கள் | வெப்பத்தின் அளவு செல்சியஸில் | | |
|---|---|---|---|---|---|
| | | | கோடை காலம் | குளிர் காலம் | மழைக் காலம் |
| 1 | கடலோரப்பகுதி | சென்னை | $40^{0}$செ | $22^{0}$செ | $25^{0}$செ |
| 2 | உள்நாட்டுச் சமவெளி | வேலூர் | $42^{0}$செ | $21^{0}$செ | $22^{0}$செ |
| 3 | உள்நாட்டுப் பகுதி | திருச்சி | $42^{0}$செ | $20^{0}$செ | $23^{0}$செ |
| 4 | மலைப் பகுதி | கொடைக்கானல் | $11^{0}$செ | $6^{0}$செ | $14^{0}$செ |
| 5 | பீட பூமி | கோயம்புத்தூர் | $32^{0}$செ | $26^{0}$செ | $21^{0}$செ |

**உனக்குத் தெரியுமா ?**

மான்சூன் என்ற சொல்லானது மௌசம் என்ற அரேபிய சொல்லிலிருந்து பெறப்பட்டது ஆகும். இச்சொல்லுக்கு பருவம் என்று பொருள். ஓர் ஆண்டில் ஒரு குறிப்பிட்ட பருவத்தில் நேர் எதிர் திசைகளில் இருந்து வீசும் காற்றுகளை பருவக் காற்றுகள் என்பர்.

கோடை காலத்தின் அதிக வெப்பமான காலம் அக்னி நட்சத்திரம் அல்லது கத்திரி வெயில் எனப்படும்

ஒப்பு ஈரப்பதம் கோடைக் கால மாதங்களை விட குளிர் காலத்தில் அதிகமாகவே உள்ளது. மே மாதத்தில் காற்றின் சராசரி ஈரப்பதம் 68 சதவீதமாகவும், ஜனவரி மாதத்தில் 82 சதவீதமாகவும் உள்ளது. ஆவியாதல் குளிர்காலத்தை விட கோடை காலத்தில்தான் அதிகமாக காணப்படுகின்றது. அக்டோபர், நவம்பர் மற்றும் டிசம்பர் மாதங்களில் மழைப்பொழிவு தரும் மேகங்கள் பெருமளவில் காணப்படுகின்றன.

அட்டவணை : தமிழ் நாட்டின் பருவக் காலங்கள்

| பருவங்கள் | தமிழ் பருவங்கள் | தமிழ் மாதங்கள் |
|---|---|---|
| கோடை (ஏப்ரல் முதல் ஆகஸ்டு வரை) | இளவேனில்<br>முதவேனில் | சித்திரை, வைகாசி<br>ஆனி, ஆடி |
| மழைக்காலம் (ஆகஸ்டு முதல் டிசம்பர் வரை) | கார்காலம்<br>குளிர் | ஆவணி, புரட்டாசி<br>ஐப்பசி, கார்த்திகை |
| குளிர் காலம் (டிசம்பர் முதல் ஏப்ரல் வரை) | முன் பனி<br>பின் பனி | மார்கழி, தை<br>மாசி, பங்குனி |

தமிழ்நாட்டின் மழைப் பொழிவு மூன்று காலக் கட்டங்களில் பெறப்படுகிறது.

1. தென் மேற்குப் பருவக் காற்று மழைப் பொழிவு.

2. வடகிழக்கு பருவக் காற்று மழைப் பொழிவு மற்றும்

3. சூறாவளி மழைப் பொழிவு.

### தென்மேற்குப் பருவக் காற்று மழைப் பொழிவு

தென்மேற்குப் பருவக் காற்று காலம் ஜூன் முதல் செப்டெம்பர் மாதம் வரை நிலவுகின்றது. நீலகிரி மாவட்டம், கன்னியாகுமரி மாவட்டம், கோவை மாவட்டத்தின் மேற்குப் பகுதி, தருமபுரி மற்றும் சேலம் மாவட்டங்கள் இம்மழைப் பொழிவால் பயனைடைகின்றன. தென் மேற்குப் பருவக்காற்று மழை மேற்குத் தொடர்ச்சி மலையின் மேற்குப் பகுதியில் இப்பருவ மழை முதலில் தொடங்குவதால் அங்கு சராசரியாக 150 செ.மீ மழை பொழிகின்றது. பருவக்காற்று தென் மேற்கு திசையில் வீசுவதன் காரணமாக, தமிழ் நாட்டின் கிழக்கு மற்றும் உட்பகுதிகள் இப்பருவ மழைக்கு மறைவு பிரதேசமாகிறது. பொதுவாக மழையின் அளவு மேற்கிலிருந்து கிழக்கு நோக்கி செல்ல செல்ல குறைகிறது. அதிகபட்ச அளவாக 70 சதவீதம் மழை நீலகிரி மாவட்டத்திலும் அதனைத் தொடர்ந்து சேலம் மற்றும் ஈரோடு மாவட்டங்கள் அதிக அளவு மழையை பெறுகிறது. தென் மேற்குப் பருவக்காற்றால் அதிக அளவில் மழையை பெறும் மற்றொரு மாவட்டம் கன்னியாகுமரியாகும்.

### வடகிழக்குப் பருவக்காற்று மழைப் பொழிவு

தமிழ்நாட்டில் அக்டோபர் முதல் டிசம்பர் வரை வடகிழக்குப் பருவ மழைப் பொழிவு காணப்படுகின்றது. இப்பருவ மழையால் தமிழ் நாட்டின் கடலோர மற்றும் உள்நாட்டு சமவெளிப் பகுதிகள் அதிக மழைப் பொழிவை பெறுகின்றன. பொதுவாக

இப்பருவ காலத்தில் வடகிழக்கு பருவ மழையும் சூறாவளி மழையும் இணைந்தே மழைப் பொழிவைத் தருகின்றன. இப்பருவ மழையின் போது கிழக்கிலிருந்து மேற்காக மழைப் பொழிவின் அளவு குறைந்துக் கொண்டே வருகிறது. கிழக்கு மாவட்டங்கள் அதிக மழைப் பொழிவையும், மத்திய மேற்கு மாவட்டங்கள் குறைவான மழைப் பொழிவையும், கன்னியாகுமரியைத் தவிர மற்ற கடற்கரை மாவட்டங்களான சென்னை, கடலூர், திருவள்ளூர், காஞ்சிபுரம், நாகப்பட்டினம், திருவாரூர், திருநெல்வேலி மாவட்டங்கள் 150 செ.மீ. முதல் 200 செ.மீ. வரை மழைப் பொழிவையும் வடகிழக்குப் பருவ மழையின் மூலம் பெறுகின்றது. திருச்சிராப்பள்ளி, சேலம் மற்றும் ஈரோடு மாவட்டங்களும் 100 செ. மீ. முதல் 150 செ. மீ. வரை இப்பருவ காலத்தில் மழையைப் பெறுகின்றது.

### சூறாவளி மழைப்பொழிவு

தமிழ் நாட்டிற்கு நவம்பர் மாதம் சூறாவளி மழைப்பொழிவு மாதமாகும். வங்கக் கடலின் தென் பகுதியில் ஏற்படுகின்ற வளிமண்டல அழுத்த வேறுபாட்டினால் தாழ் அழுத்த பகுதி உண்டாகி, அது மேன்மேலும் தீவிரமடைந்து சூறாவளியாக மாறுகின்றது. வடகிழக்கு பருவ மழையும் சூறாவளி மழைப்பொழிவும் சமமான அளவில் கடலோர மாவட்டங்களுக்கு மழைப் பொழிவைத் தருகின்றன.

அட்டவணை: பருவ காலமுறைக்கு ஏற்ப ஆண்டு மழை விகிதம்

| வ.எண் | பருவம் | ஆண்டு மழைப் பொழிவு % |
|---|---|---|
| 1 | தென் மேற்குப் பருவக் காற்றுக் காலம் | 22 |
| 2 | வடகிழக்குப் பருவக்காற்றுக் காலம் | 57 |
| 3 | சூறாவளி மழைப் பொழிவு | 21 |

ஆண்டு மழைப் பொழிவின் அளவைக் கொண்டு தமிழ்நாட்டின் மாவட்டங்களை ஐந்து மழை மண்டலங்களாகப் பிரிக்கலாம். கடலோர மாவட்டங்களும் நீலகிரி மாவட்டமும் ஆண்டிற்கு சுமார் 1400 மி.மீட்டருக்கு மேல் மழைப் பெறுவதை பின்வரும் அட்டவணை மூலம் அறியலாம். தமிழக மாவட்டங்களுள் கன்னியாகுமரி மாவட்டம் மட்டுமே மூன்றுப் பருவக் காலங்களிலும் மழையைப் பெறும் மாவட்டமாகும். ஆண்டின் மொத்த மழை அளவில் குறைந்த அளவு மழையை கோயம்புத்தூர் மாவட்டம் பெறுகின்றது.

தமிழ்நாட்டின் மழை மண்டலங்கள் மழைப் பொழிவின் பரவல் (2007 – 2008)

| வ.எண் | மழைப் பொழிவின் பரவல் | மழைப் பொழிவின் அளவு | மாவட்டங்கள் |
|---|---|---|---|
| 1 | மிக குறைவான மழைப் பொழிவு | 800 மி. மீக்கு கீழ் | கோயம்புத்தூர் |
| 2 | குறைவான மழைப் பொழிவு | 800 மி. மீ முதல்<br>1000 மி. மீ. வரை | நாமக்கல்,<br>கரூர்,<br>தூத்துக்குடி,<br>ஈரோடு,<br>தருமபுரி,<br>மதுரை,<br>திருச்சிராப்பள்ளி,<br>பெரம்பலூர்,<br>கிருஷ்ணகிரி |

## ஜல் புயலின் பயணப் பாதை
## (6–8 நவம்பர், 2010)

வ



8–11–2010
திங்கள் 5 மணி
பிற்பகல்

7–11.2010
5 மணி
ஞாயிறு பிற்பகல்

6–11.2010
சனி 5 மணி
பிற்பகல்

## தமிழ்நாடு
## மாவட்டங்களின் ஆண்டு மழைப்பொழிவு(2007–2008)

வ



| | | | |
|---|---|---|---|
| 3 | மிதமான மழைப் பொழிவு | 1000 மி. மீ. முதல் 1200 மி. மீ. வரை | புதுக்கோட்டை, விருதுநகர், சிவகங்கை, தஞ்சாவூர், சேலம், இராமநாதபுரம், திண்டுக்கல், தேனி, வேலூர். |
| 4 | அதிக மழைப் பொழிவு | 1200 மி. மீ. முதல் 1400 மி. மீ. வரை | திருநெல்வேலி, திருவண்ணாமலை, கன்னியாகுமரி |
| 5 | மிக அதிக மழைப் பொழிவு | 1400 மி. மீ.க்கு மேல் | காஞ்சிபுரம், சென்னை, விழுப்புரம், திருவள்ளூர், திருவாரூர், கடலூர், நாகப்பட்டினம், நீலகிரி |

### இயற்கைத் தாவரங்கள்

மனிதனின் முயற்சியின்றி தாமாகவே வளரும் தாவரங்கள் இயற்கைத் தாவரங்கள் எனப்படுகின்றன. பொதுவாக வெப்பநிலை, மழைப்பொழிவு மற்றும் மண் வகை ஆகியவற்றிற்கு ஏற்ப தாவரங்கள் வளர்ச்சி அடைகின்றன.

தேசியக் காடுகள் கொள்கைப்படி ஒரு பகுதியின் மொத்தப் பரப்பில் குறைந்த பட்சம் 33 சதவீத அளவு காடுகள் இருத்தல் வேண்டும். ஆனால் தமிழ் நாட்டின் காட்டுப் பகுதியின் விகிதாச்சாரம் 17 சதவீதமே ஆகும். தமிழகத்தின் காடுகள் மேற்கு மலைத்தொடர் மற்றும் பிற மலைப்பகுதிகளிலுமே காணப்படுகின்றன. நீலகிரி மாவட்டம், மாநிலங்களிலேயே அதிக சதவீத நிலப்பரப்பை காட்டுப் பகுதியாக கொண்டுள்ளது. இதனைத் தொடர்ந்து தேனி, தருமபுரி மற்றும் கன்னியாகுமரி மாவட்டங்களும் அதிக அளவிலான காடுகளை கொண்டுள்ளது. கடற்கரையோரங்களில் காணப்படும் கடலோரப் பகுதிகளில் வறண்ட வெப்பநிலையும், வளமற்ற மண்ணின் தன்மையும் சவுக்கு மரம் மட்டுமே வளர்வதற்கு ஏதவாக அமைகின்றது. அதிக மழைப் பொழிவு பெறும் பகுதிகளில் குறிப்பிடத்தக்க அளவு அயன மண்டலக் காடுகளும், பசுமை மாறாக் காடுகளும் காணப்படுகின்றன.

### காடுகளின் பரவல்

தமிழக மாவட்டங்களில் காடுகளின் பரவல் சதவீதம் சமமற்ற நிலையில் காணப்படுகிறது. தமிழக மேற்கு மாவட்டங்களிலும், வேலூர் மாவட்டத்தின் ஜவ்வாது மலைக் குன்றுகளிலுமே காடுகளின் அடர்த்தியை காண முடிகின்றது. சேலம் மாவட்டத்திலும் அடர்த்தியான காடுகள் உள்ளன. நீலகிரி மாவட்டத்தின் மொத்தப் பரப்பில் 50 சதவீதத்திற்கும் மேற்பட்ட பரப்பு, காடுகளாகவே உள்ளன. மற்ற மாவட்டங்களில் காடுகள் 1 முதல் 5 சதவீதம் வரை காணப்படுகின்றன.

தமிழ் நாட்டின் காடுகளில் பல்வேறு வகையான மரங்கள் காணப்படுகின்றன. வறண்ட பருவத்தில் பெரும்பாலான மரங்கள் இலைகளை உதிர்த்து விடுகின்றன. தமிழ் நாட்டில் 5,88,000 எக்டேர் பரப்பளவில் சந்தன மரக் காடுகள் உள்ளன. கோயம்புத்தூர், நீலகிரி மற்றும் கன்னியாகுமரி மாவட்டங்களில் மரங்கள் அடர்ந்துக் காணப்படுகின்றன. மதுரை, கோவை மற்றும் திருநெல்வேலி மாவட்டங்களில் காணப்படும் அடர்த்தியான மரங்கள் எரிபொருளாகப் பயன்படுத்தப்படுகிறது. இரப்பர் தோட்டங்கள் கன்னியாகுமரி மாவட்டத்தில் நிறைந்து காணப்படுகின்றன. கற்பூர மற்றும் தைல மரங்களுக்கு நீலகிரி மாவட்டம் பெயர் பெற்றதாகும். மேற்குத் தொடர்ச்சி மலைத் தொடரின் அடிவாரம் மற்றும் திருநெல்வேலி, மதுரை மாவட்டங்களில் செறிந்து காணப்படும் மரங்கள் தீக்குச்சிகள் செய்யப் பயன்படுகின்றது. இவையல்லாது அரசு நாவல், பலா, நெல்லிக்காய் போன்ற பழவகை மரங்களும் மாநிலமெங்கும் காணப்படுகின்றன.

### காடுகளின் வகைகள்

இயற்கை தாவரங்களை ஐந்து வெவ்வேறு வகையாகப் பிரிக்கலாம். அவை;

1. அயன மண்டலப் பசுமை மாறாக் காடுகள்
2. அயன மண்டல அகன்ற இலைக் காடுகள்
3. முட்புதர் காடுகள்
4. சதுப்பு நிலக் காடுகள்
5. மலையகக் காடுகள்

### அயன மண்டல பசுமை மாறாக் காடுகள்

இக்காடுகள் பெயருக்கு ஏற்றவாறு என்றும் பசுமை மாறாதவை மற்றும் இலைகளை உதிர்க்காதவை ஆகும். எப்பொழுதுமே இக்காடுகளின் மரங்களில் இலைகள் இருப்பதால் பசுமை மாறாக் காடுகள் என அழைக்கப்படுகின்றன. ஆண்டிற்கு மழைப்பொழிவு 200 செ.மீ. மேல் இருக்கின்ற பகுதிகளில் இக்காடுகள் காணப்படுகின்றன. தமிழ் நாட்டில் நீலகிரி, ஆனைமலைச் சரிவுகளிலும், கடலோரப் பகுதிகளிலும் இக்காடுகள் காணப்படுகின்றன. எபோனி, தேக்கு, செம்மரம், கருங்காலி போன்ற மரங்கள் இங்கே காணப்படுகின்றன. இவை சராசரியாக சுமார் 60 மீட்டர் உயரம் வரை வளரும்.

### அயன மண்டல அகன்ற இலைக் காடுகள்

ஆண்டிற்கு மழைப்பொழிவு 100 செ. மீ. இருந்து 200 செ. மீ. இருக்கின்ற பகுதிகளில் இக்காடுகள் காணப்படும். மேலும் மேற்குத் தொடர்ச்சி மலையின் கிழக்குச் சரிவிலும் பெரும்பான்மையாக காடுகள் காணப்படுகின்றன. இவை பருவக் காடுகள் என்றும் அழைக்கப்படுகின்றன. கோடைக்காலத்தில் ஈரப்பதத்தை இழப்பைத் தவிர்க்க இக்காடுகளில் உள்ள மரங்கள் இலைகளை உதிர்த்து விடுகின்றன. இக்காடுகளில் பல்வேறு வகையான குட்டையான, உயரமான, மென்மையான மற்றும் கடினமான மரங்கள் காணப்படுகின்றன. சால், சந்தனம், தேக்கு, மூங்கில், படாக் ஆகியவை குறிப்பிடத்தக்க அயன மண்டல அகன்ற இலை வகையை சார்ந்த மரங்கள் ஆகும்.

### முட்புதர் காடுகள்

நீண்ட வறண்ட காலமும், குறைவான மழைப் பொழிவும் உள்ள இடங்களில் இவை காணப்படுகின்றன. சிதறிய குட்டையான மரங்களும், புதர்களும் இக்காடுகளில் காணப்படுகின்றன. ஆழமான வேர்களும், கனமான தண்டு அமைப்பும் மற்றும் சதைப்பற்றுள்ள இலைகள் வறண்ட கால நிலையை எதிர் கொள்ளும் வகையில் இவ்வகை காடுகள் அமைந்துள்ளன.

### சதுப்பு நிலக்காடுகள்

அயன மண்டல, உப அயன மண்டலப் பகுதிகளில் அதிக உப்பளவு நீர் கொண்ட ஓதப் பெருக்கு பகுதிகளில் சதுப்பு நிலக் காடுகள் காணப்படுகின்றன. ஆற்று முகத்துவாரம் மற்றும் ஓதப் பெருக்கு அதிகம் உள்ள கடலோரப் பகுதிகளில் சதுப்பு மரங்கள் செறிந்து வளர்கின்றன. சதுப்பு நிலக்காடுகள் எனப்படும் ஓதக் காடுகள் தமிழகத்தில் பிச்சாவரம்,



சதுப்புநிலக்காடுகள்–பிச்சாவரம்

கோடியக்கரை மற்றும் வேதாரண்யம் ஆகிய பகுதிகளில் காணப்படுகிறது. இவற்றுள் பிச்சாவரம் சதுப்பு காடுகள் மாநிலத்தின் மிக முக்கிய பெரிய காடுகளாகும். கடலூர் மாவட்டத்தில் சிதம்பரம் நகர் அருகே வங்காள விரிகுடா கடலின் அமிழ்ந்த நிலப்பகுதியில் இக்காடுகள் சுமார் 1,214 ஹெக்டேர் நிலப்பரப்பில் அமைந்துள்ளன. இங்கு சிறுச் சிறு தீவுகளாக உள்ள மரக் கூட்டங்களால் அயன மண்டல மற்றும் பசுமை மாறா மரங்களும் புதர் வகைகளும் காணப்படுகின்றன. இவை ரைசோபோரா தாவர குடும்பத்தை சார்ந்தவைகளாகும். பிச்சாவரம் சதுப்பு நிலக் காடுகள் 25 ச.கி.மீட்டர் பரப்பிலும், கோடியக்கரையில் 17 சதுர கிலோ மீட்டர் பரப்பிலும் பரவியுள்ளன.

## மலையகக் காடுகள்

மழைப்பொழிவு அதிகமாக உள்ள மலைச்சரிவுகளில் இக்காடுகள் காணப்படுகின்றன. இவ்வகையான மலையகக் காடுகள் தமிழகப் பகுதியிலுள்ள ஆனைமலைப் பகுதியிலும், நீலகிரி மலைகளிலும் காணப்படுகிறது. மரங்களை தவிர்த்து சிறிய புதர் வகைகள், ஏறு கொடிகள் மற்றும் படரும் கொடி வகைகள் இங்கு செறிந்து காணப்படுகின்றன.

## காடுகளின் பொருட்கள்

தமிழ் நாட்டின் காடுகளிலிருந்துப் பெறப்படும் பயன் பொருட்களை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். 1. முக்கியப் பயன் பொருட்கள் 2. இதரப் பயன் பொருட்கள். முக்கியப் பயன் பொருளான மரப்பலகை மற்றும் மரக்கழிகள் பல்வேறு வகைகளில் பயன்படுத்தப்படுகிறது. அவை;

- வீடு கட்டுதல்
- மரச்சாமான்கள் செய்தல்
- படகுச் செய்தல்
- மரப் பலகை அறுத்தல்
- மரத் தண்டுகள் அறுத்தல்
- தீக்குச்சிகள் செய்தல்
- மரக் கூழ் தயாரித்தல்
- காகிதச் தொழிற்சாலைகளில் பயன்படுத்துதல்
- மரப் பெட்டிகள் செய்தல்
- மர விளையாட்டு சாமான்கள் செய்தல்
- பென்சில்கள் தயாரித்தல்
- மரச் சிற்பங்கள் செய்தல்.

இதரப் பயன் பொருட்கள்: மூங்கில் கழிகள், இலைகள், புல்வகைகள், முக்கிய எண்ணெய் வகைகள், மருத்துவ தாவரங்கள், அரக்கு, கோந்து, தோல் பதனிடப் பயன்படுத்தப்படும் மரப்பட்டைகள், மசாலா வகைப் பொருட்கள், சாயப் பொருட்கள், தேன் மெழுகு, தேன், டர்பன்டைன் தைலம் போன்றவை இதர பயன்படு பொருட்களாகும். இப்பொருட்கள் பெரும்பாலான குடிமைத் தொழில்களுக்கு மூலப் பொருட்களாகப் பயன்படுகின்றன.

## பயிற்சி

### அ. சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக.

1. தமிழ் நாட்டின் காலநிலை__________ வகையைச் சார்ந்தது.

   அ) அயன மண்டல  ஆ) மிதவெப்ப மண்டலம்

   இ) துருவப் பகுதி  ஈ) ஆர்டிக் பகுதி

2. அயன மண்டல சூறாவளி உருவாகும் மாதம்__________ ஆகும்.

   அ) நவம்பர்  ஆ) ஜனவரி  இ) டிசம்பர்  ஈ) ஏப்ரல்

3. தேக்கு மரமும் சந்தன மரமும்__________ வகை காடுகளைச் சார்ந்தது.

   அ) அயன மண்டல பசுமை மாறாக் காடுகள்

   ஆ) அயன மண்டல அகன்ற இலைக் காடுகள்

   இ) சதுப்பு நிலக் காடுகள்

   ஈ) மலையகக் காடுகள்

4. தென்மேற்கு பருவக் காற்று மழைப் பொழிவின் போது தமிழ் நாடு பெறும் மழையின் அளவு__________ .

   அ) மிக அதிகம்  ஆ) குறைவு  இ) சராசரி  ஈ) அதிகம்

5. __________ முதல்__________ வரை, வடகிழக்கு பருவ காற்று மழைப் பொழிவு பெறும் மாதம் ஆகும்.

   அ) ஜூன் முதல் செப்டெம்பர்  ஆ) அக்டோபர் முதல் நவம்பர்

   இ) டிசம்பர் முதல் பிப்ரவரி  ஈ) மார்ச் முதல் மே

6. சதுப்பு நிலக்காடுகள் காணப்படுகின்ற இடம்__________ .

   அ) வேதாரண்யம்  ஆ) கோயம்புத்தூர்  இ) புதுக்கோட்டை  ஈ) நீலகிரி

7. வறண்ட காலத்தில்__________ வகைக் காடுகளிலிருந்து இலைகளை உதிர்க்கின்றன.

   அ) முட்புதர் காடுகள்  ஆ) பசுமை மாறாக் காடுகள்

   இ) அகன்ற இலைக் காடுகள்  ஈ) சதுப்பு நிலக் காடுகள்

### ஆ. பொருத்துக.

| | | |
|---|---|---|
| 1. | பசுமை மாறாக் காடுகள் | காடுகளின் பொருட்கள் |
| 2. | பருவ மழை காடுகள் | மார்ச் முதல் ஜூன் வரை |
| 3. | கோடைக் காலம் | டிசம்பர் முதல் பிப்ரவரி வரை |
| 4. | குளிர் காலம் | செம்மரம் |
| 5. | மரப்பலகை | இலைகளை உதிர்த்தல் |
| | | சுந்தரி மரம் |
| | | முங்கில் |

## இ. சுருக்கமான விடை தருக.

1. தமிழ் நாட்டின் காலநிலையைத் தீர்மானிக்கும் புவியியல் காரணிகள் யாவை ?
2. தமிழ் நாட்டின் பருவங்களை வரையறு
3. மான்சூன் என்பதனை விளக்குக
4. தென்மேற்குப் பருவக்காற்று மற்றும் வடகிழக்குப் பருவக்காற்றுக்கும் உள்ள வேறுபாடுகளை எழுதுக.
5. பசுமை மாறாக் காடுகளுக்கும் பருவ மழை காடுகளுக்கும் உள்ள வேறுபாட்டைக் கூறுக.
6. தென்மேற்கு பருவக்காற்று மழையால் தமிழ் நாட்டின் கிழக்கு கடலோரப் பகுதியில் மழை பொழிவதில்லை – காரணம் கூறு.
7. சூறாவளி மழைப்பொழிவை பற்றி சிறு குறிப்பு வரைக.
8. தமிழ் நாட்டின் காடுகளில் கிடைக்கும் பொருட்கள் சிலவற்றை எழுதுக.

## ஈ. விரிவான விடை தருக.

1. தமிழ் நாட்டின் காடுகளின் வகைகளை விளக்குக.
2. தமிழ் நாட்டின் மழைப்பொழிவின் பரவலை எழுதுக.
3. தமிழ் நாட்டின் மழை மண்டலங்களை விளக்கி எழுதுக.

## உ. கொடுக்கப்பட்டுள்ள தமிழ் நாட்டின் வரைபடத்தில் பின்வருவனவற்றைக் குறிக்கவும்.

1. அரேபியக் கடலின் மழைப்பொழிவின் திசைப் போக்கு.
2. வடகிழக்கு பருவ மழைப் பொழிவின் திசைப் போக்கு.
3. பசுமை மாறாக் காடுகள்.
4. குறைவான மழைப் பொழிவு பெறும் பகுதி.
5. அதிக மழைப் பொழிவு பெறும் மாவட்டங்கள்.

# 4. தமிழ் நாட்டின் வளங்கள்

## வளங்கள்

மனிதனின் முயற்சியின்றி இயற்கையாகவே மனிதப் பயன்பாட்டிற்கு புவியில் கிடைக்கும் பொருட்கள் வளங்கள் என்றழைக்கப்படுகிறது. நாம் வாழும் சூழலில் வளங்கள் இயற்கை கூறுகளாக (பாறைகள் மற்றும் கனிமத் தாதுக்கள்) புவியின் மேற்புறத்திலும், உட்புறத்திலும் பொதிந்து வைக்கப்பட்டுள்ளது. வாழ்வதற்கு ஆதாரமான நீர், ஏரிகளாக, ஆறுகளாக மற்றும் கடல்களாக விரிந்து பரந்துள்ளது. உயிரினங்களான தாவரங்களும், விலங்கினங்களும் கூட ஓர் குறிப்பிடத்தக்க வளமேயாகும். ஓர் நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு இவ்வளங்கள் பெரிதும் உறுதுணையாக உள்ளது. வளங்கள் பின்வரும் காரணிகளைக் கொண்டு பொதுவாக வரையறை செய்யப்படுகிறது. அவை –

1. வளங்களின் வகைகள் (இயற்கை வளங்களான உயிருள்ள மற்றும் உயிரற்ற வளங்கள்)

2. வளங்களின் பண்புகள் (பௌதிகம் மற்றும் இரசாயன பண்புகள்)

**செய்து பார்ப்போம்**

நம் வீட்டிலும், வகுப்பறையிலும் பயன்படுத்தும் வளங்களை அட்டவணைப்படுத்துக

வளங்கள் மூன்று முக்கியப் பண்புகளைக் கொண்டுள்ளன. அவை –

1. பயன்படுத்தன்மை
2. பயன்பாட்டு இருப்பளவு
3. பயன்பாட்டு அளவு

## இயற்கை வளங்கள்

மனிதன் உயிர் வாழ்வதற்கும், சொந்தத் தேவைகளையும், விருப்பங்களையும் நிறைவேற்றிக் கொள்வதற்கும் இயற்கை வளங்கள் இன்றியமையாததாகிறது. இவ்வளங்களைப் பல்வேறு வகையாகப் பிரிக்கலாம்.

வளங்களை அவற்றின் உருவாக்கத்தின் அடிப்படையில் உயிருள்ளது, உயிரற்றது என இருவகையாகப் பிரிக்கலாம்.

## உயிரின வளங்கள்

உயிர் கோளத்தினின்று பெறப்படுபவை உயிரின வளங்கள் எனப்படும். காடுகளிலிருந்து பெறப்படும் பயன்பாட்டு பொருட்கள், விலங்கினம் மற்றும் பறவையினத்திலிருந்து பெறப்படும் பொருட்கள், மீன் மற்றும் பிற கடல்வாழ் உயிரினங்களை இவற்றிற்கு எடுத்துக்காட்டாக கூறலாம். இயற்கையாகவே அழிந்து, அழுத்தப்பட்ட உயிரினங்களிலிருந்து பெறப்படுவதால், கனிம தாதுக்களான நிலக்கரியும், பெட்ரோலியமும் கூட இயற்கை வளங்களாகக் கருதப்படுகிறது.

## உயிரற்ற வளங்கள்

நிலம், நீர், காற்று மற்றும் கனிமத் தாதுக்களான தங்கம், இரும்பு, செம்பு, வெள்ளி போன்றவை உயிரற்ற வளங்களாகும்.

வளங்களை அதன் பயன்பாட்டு இருப்பளவைக் கொண்டு புதுப்பிக்க இயலும் வளங்கள், புதுப்பிக்க இயலாத வளங்கள் என இரு வகையாகப் பிரிக்கலாம்.

## புதுப்பிக்க இயலும் வளங்கள்

மீண்டும் உருவாக்க கூடிய அல்லது உற்பத்திச் செய்யக் கூடிய முழுமையாக அழிக்க இயலாத வளங்களை புதுப்பிக்க இயலும் வளங்கள் என்றழைக்கின்றனர். எடுத்துக்காட்டு

1. சூரியனிலிருந்து பெறப்படும் வெப்பம், எரிசக்தி
2. காற்றின் சக்தி

ஆகும். தமிழ்நாட்டின் ஆண்டு வளர்ச்சி விகிதம் 1.1% ஆகும். இது தேசிய வளர்ச்சி விகிதத்திற்கும் குறைந்த அளவேயாகும்.




ஒரு நாட்டின் பிறப்பு விகிதம் தொடர்ந்து அதிகரித்து வந்தால் அந்நாடு பிறக்கும் அத்தனை குழந்தைகளுக்கும் கல்வி, சுகாதாரம் போன்ற சேவைகளை அளிக்க வேண்டியுள்ளது. மக்கள் தொகை உயர உயர, சூழ்நிலை கேடுகளும் மிகுதியாகின்றன. ஏனைய மாநிலங்களை விட தமிழ் நாடு வளர்ச்சி விகிதத்தை மிகுதியாகக் குறைத்துக் கொண்டுள்ளது.

## மக்கள் தொகைப் பரவல்

தமிழ் நாட்டில் மொத்த மக்கள் தொகையில் அதிக அளவான 6.96 விழுக்காட்டை சென்னை மாவட்டம் பெற்றுள்ளது. இதனைத் தொடர்ந்து கோயம்பத்தூர், வேலூர் மற்றும் சேலம் மாவட்டங்கள் அதிக எண்ணிக்கையிலான மக்களை கொண்டுள்ளன. மிகக் குறைந்த மக்கள் தொகையை உடைய மாவட்டம் பெரம்பலூர் (0.069%) மாவட்டமாகும்.

## மக்கள் தொகைப் பரவலை கட்டுப்படுத்தும் காரணிகள்

வாழ்வதற்கேற்ற காலநிலையை சமவெளி பகுதிகள் கொண்டுள்ளதால், அங்கு மக்கள் தொகை பரவல் அதிகம் காணப்படுகிறது.

மிதமான தட்ப வெப்ப நிலையையும், பொருளாதார செயல்பாட்டுக்கு ஏதுவான சூழ்நிலையையும் கடலோர சமவெளிப் பகுதிகள் கொண்டுள்ளதால் அப்பகுதி அதிக மக்கள் தொகையை ஊக்குவிக்கிறது.

பெரிய நகரங்களும், மாநகரங்களும் கற்றோர், கல்லாதோர் ஆகிய இரு

தமிழ்நாடு மாவட்டவாரியாக மக்கள் அடர்த்தி பரவல்

| எண்ணிக்கை / ஒரு சதுர கி.மீ | மக்கள் அடர்த்தி தன்மை | மாவட்டங்கள் |
|---|---|---|
| 300க்கும் குறைவாக | குறைந்த மக்கள் அடர்த்தி | சிவகங்கை (279), இராமநாதபுரம் (284), பெரம்பலூர் (289), தருமபுரி (297), நீலகிரி (299). |
| 300 முதல் 600 வரை | மிதமான மக்கள் அடர்த்தி | ஈரோடு (314), புதுக்கோட்டை (314), திண்டுக்கல் (317), கரூர் (323), தூத்துக்குடி (340), திருவண்ணாமலை (353), அரியலூர் (358), தேனி (381), திருநெல்வேலி (400), விருது நகர் (409), விழுப்புரம் (412), நாமக்கல் (439), திருவாரூர் (492), திருச்சி (536), கோயம்புத்தூர் (572), வேலூர் (572), சேலம் (575). |
| 600க்கு மேல் | அதிக மக்கள் அடர்த்தி | நாகப்பட்டினம் (616), கடலூர் (617), தஞ்சாவூர் (638), காஞ்சிபுரம் (668), மதுரை (698), திருவள்ளூர் (776), கன்னியாகுமரி (995), சென்னை (24963) |

## தமிழ்நாடு
## மக்கள் அடர்த்தி

வ



பிரிவினருக்கும் ஏற்ற வேலைவாய்ப்பினை அளித்து மக்களை கவர்ந்து இழுக்கின்றன.

வறண்ட பகுதிகள் பொதுவாக குறைந்த மக்கள் தொகையையே ஆதரிக்கின்றன.

செங்குத்தான சரிவையும், அடர்ந்த காடுகளையும் கொண்ட மலைப்பிரதேசம் மிகக் குறைந்த மக்கள் தொகையையே ஆதரிக்கின்றது.

### மக்களடர்த்தி

பல்வேறு பகுதிகளுக்கிடையே காணப்படும் மக்கள் தொகை வேறுபாட்டை பொதுவாக மக்களடர்த்தியின் மூலம் அறியலாம். ஒரு பகுதியின் மக்கள் தொகையை அதன் பரப்பளவால் (சதுர கி.மீ.) வகுத்தால் கிடைக்கும் எண்ணிக்கையையே மக்களடர்த்தி என்கிறோம். ஒரு குறிப்பிட்ட பகுதியில் வாழும் மக்களின் எண்ணிக்கையை கணக்கிட்டு அதனை ஒரு சதுர கிலோ மீட்டருக்கு எவ்வளவு என்பதை அறிவதே மக்களடர்த்தியாகும். கொடுக்கப்பட்டுள்ள அட்டவணை மாவட்டங்களின் மக்களடர்த்தியை விளக்குகிறது.

**செயல்பாடு**

1) கொடுக்கப்பட்டுள்ள வரைபடத்தின் உதவியுடன் உன் பகுதியின் மக்களடர்த்தியை கண்டுபிடி.

2) மாவட்டங்களுக்குள் உள்ள வேறுபாட்டிற்கான காரணங்களை ஆராய்க.

கொடுக்கப்பட்டுள்ள அட்டவணையிலிருந்து, எட்டு மாவட்டங்கள் அதிக மக்கள் அடர்த்தியையும், பதினேழு மாவட்டங்கள் மித மக்கள் அடர்த்தியையும், ஐந்து மாவட்டங்கள் குறைந்த மக்கள் அடர்த்தியையும் கொண்டுள்ளதை அறியலாம். மாநிலத்தின் தலைநகரமான சென்னை மாநகரம், நிர்வாகம், கல்வி, தொழில்வளம், வணிகம், வர்த்தகம், பொழுதுபோக்கு ஆகிய அம்சங்களை கொண்டிருப்பதால் மிக அதிக மக்கள் அடர்த்தியை பெற்றுள்ளது. சிவகங்கை மாவட்டம் மிகக் குறைந்த மக்களடர்த்தி கொண்டுள்ளது.

### தமிழ் நாட்டின் மக்கள் தொகை கட்டமைப்பு

2001ஆம் ஆண்டு மக்கள் தொகை கணக்கெடுப்பின்படி 37 விழுக்காடு மக்கள் 20 வயதுக்கு குறைவாகவும், 54 விழுக்காடு மக்கள் 20 முதல் 60 வரையிலும், 9 விழுக்காடு மக்கள் 60 வயதுக்கு மேற்பட்டும் உள்ளனர்.

தமிழ் நாட்டின் மொத்த மக்கள் தொகையில் 19 விழுக்காடு தாழ்த்தப்பட்டோரும், 1.04 விழுக்காடு பழங்குடியின மக்களும் வாழ்கின்றனர்.

சுமார் 88 விழுக்காடு மக்கள் இந்து மதத்தையும், 5.5 விழுக்காடு மக்கள் முஸ்லீம் மதத்தையும், 6 விழுக்காடு மக்கள் கிறித்துவ மதத்தையும் சார்ந்துள்ளனர். ஏனையோர் புத்த மதத்தினர் மற்றும் சமண மதத்தினர்கள் ஆவார்கள்.

தமிழ் நாட்டில் பாலின விகிதம், ஆயிரம் ஆண்களுக்கு 987 பெண்களாக உள்ளது. தூத்துக்குடி மாவட்டம் அதிக பாலின விகிதத்தையும் (1050), சேலம் மாவட்டம் (927) மிகக் குறைந்த பாலின விகிதத்தையும் கொண்டுள்ளது. சுமார் 15 மாவட்டங்களில் ஆண்களைவிட பெண்கள் அதிகமாக உள்ளனர்.

தமிழ் நாட்டின் மொத்த மக்கள் தொகையில் 56 விழுக்காடு ஊரகப் பகுதியிலும் 44 விழுக்காடு நகரத்திலும் வசிக்கின்றனர்.

### கல்வியறிவு

1951 முதல் 2001 வரையிலான காலக்கட்டத்தில், தமிழ் நாட்டு மக்களின் கல்வியறிவு விழுக்காடு மும்மடங்காகப் பெருகியுள்ளது. தமிழ் நாட்டில் 73.5 விழுக்காடு மக்கள் கல்வியறிவு பெற்றவராகத் திகழ்கின்றனர். மாவட்டங்களுக்குள், தர்மபுரி மாவட்டத்தில் மிகக் குறைந்த அளவு கற்றோர் (61.39%) உள்ளனர். கன்னியாகுமரி மாவட்டத்தில்தான் அதிகபட்சமான 87.55 விழுக்காடு கற்றோர் உள்ளனர்.

சென்னையிலும், தூத்துக்குடியிலும் 80 விழுக்காட்டுக்கு மேற்பட்டோர் கல்வியறிவுடையவர்கள். தாழ்த்தப்பட்டோரில் 5 விழுக்காட்டினரும், பழங்குடி இனத்தவரில் 35 விழுக்காட்டினரும் கல்வியறிவு பெற்றுள்ளனர்.




பள்ளிக் கல்வியைவிட்டு நீங்கியோரின் எண்ணிக்கை மாநிலத்தில் வெகுவாக குறைந்துள்ளது. எல்லோருக்கும் கல்வி என்பது மாநில அரசின் முக்கிய குறிக்கோளாக உள்ளது. ஆண்களில் ஆயிரத்தில் 726 நபர்கள் கல்வியறிவு பெற்றவர்களாக உள்ளனர். ஆனால் பெண்களுள் 571 நபர்களே கல்வி அறிவு பெற்றவர்களாக உள்ளனர். ஆனால் மாவட்டங்களுக்குள், கன்னியாகுமரி மாவட்டத்தில் தான் அதிக எண்ணிக்கையிலான ஆண்களும், பெண்களும் அதாவது முறையே 803, 758 நபர்கள் கல்வியறிவு பெற்றவர்களாக உள்ளனர்.

## தொழில்

2001 மக்கள் தொகை கணக்கீட்டின்படி தமிழ் நாட்டில் 44.6 விழுக்காடு மக்கள் வேலைப் பார்க்கின்றனர். அவர்களுள் 55.3 விழுக்காடு மக்கள் முதன்மை தொழிலும், 27.7 விழுக்காடு மக்கள் இரண்டாம் நிலைத் தொழிலும், 30.8 விழுக்காடு மக்கள் மூன்றாம் நிலை தொழிலையும் புரிகின்றனர்.

### தொழிலாளர்களின் வகைகள்:

| தொழில் | 1961 (%) | 1991 (%) | 2001 (%) |
|---|---|---|---|
| பயிர் செய்பவர்கள் | 42.0 | 25.0 | 18.4 |
| விவசாய கூலிகள் | 18.4 | 36.0 | 31.1 |
| வீட்டு வேலை, தொழில் புரிவோர்கள், உற்பத்தியாளர் | 13.4 | 03.6 | 05.3 |
| பிறபணி செய்வோர் | 26.2 | 35.0 | 45.2 |

ஆதாரம்: தமிழ் நாடு அரசின் மேம்பாடு அறிக்கை

### தமிழ்நாடு தொழிலாளர்கள் மற்றும் வேலை இல்லாதோர்



மேற்கண்ட அட்டவணையிலிருந்து, விவசாயம், விவசாயம் சார்ந்த தொழில்புரிவோரின் எண்ணிக்கை குறைந்து கொண்டு வரும் போக்கை காணலாம். அதே போல், கட்டுமானப்பணியிலும், மூன்றாம் நிலை தொழிலாளர்களின் எண்ணிக்கை அதிகமானதையும் அறியலாம். இது நகரமயமாதலின் போக்கினை எடுத்துக்காட்டுகிறது. 2000ஆம் ஆண்டில் வேலையற்றோரின் எண்ணிக்கை 2.4 விழுக்காடு ஆகும்.

## மகளிர் முன்னேற்றமும், பொருளாதாரத்தில் அவர்களின் பங்கும்

ஓர் சமூகம் அல்லது நாடு மேம்பட வேண்டும் என்றால் பெண்களின் ஆற்றலை உணர்ந்து, அதற்காக அங்கீகாரத்தை அளிக்க வேண்டும். தேசிய அளவில் பெண்களுக்கு சட்டபூர்வமாக அதிகாரத்தை அளித்த முதல் மாநிலம் தமிழகமே ஆகும்.

பெண்களுக்கான சட்டபூர்வ அதிகாரம் என்பது,

சுயமதிப்பை பெண்கள் உணரச் செய்தல்

வாய்ப்புகளை தேர்ந்தெடுக்கவும், தீர்மானிக்கவும் உரிமை அளித்தல்

வளங்களையும், அவற்றை அணுகும் வாய்ப்புகளைப் பெறும் உரிமை மற்றும்

வீட்டிலும் வெளி வாழ்விலும் தங்களது நிலையைத் தீர்மானித்தல்.

## தமிழக அரசின் மகளிருக்கான அதிகார மேம்பாட்டுத் திட்டங்கள்

தமிழக அரசு மகளிரின் மேம்பாட்டுக்காக பல்வேறு நலத்திட்டங்களைக் கொண்டு வந்துள்ளது. அறிவியல் நகரம் பெண்களுக்கான தொழில் முனைவு முன்னேற்றத்துக்கான திட்டத்தை (Entrepreunership Development Programme) செயல்படுத்தி வருகிறது. மேலும் தொழில் முனைவு விழிப்புணர்வு முகாம்கள் (Entrepreunership awareness programme) நடத்துவதன் மூலம் பெண்களின் தனித்திறமைகளை வெளிக் கொணர்ந்து அவர்களது ஆற்றலை நிரூபணம் செய்ய உதவி செய்கின்றது.

மகளிர் சுய உதவிக்குழுத் திட்டம் வறுமை ஒழிப்பதற்காக தமிழ் நாட்டில் அறிமுகப்படுத்தப்பட்டது. குழு உறுப்பினர்கள் மாதந்தோறும் சிறு சேமிப்பு செய்து, பொது பணமாக உருவாக்கி, தேவைப்படும்போது தங்களுக்குள் பகிர்ந்து கொள்கின்றன. தமிழ்நாட்டில் 1989ஆம் ஆண்டு தர்மபுரி மாவட்டத்தில்தான் முதன் முதலில் இக்குழு செயல்படத் தொடங்கியது. தற்போது தமிழ்நாட்டில் 1.4 இலட்சம் குழுக்கள், 23.83 இலட்சம் உறுப்பினர்களுடன் செயல்பட்டு வருகிறது. சுய உதவிக் குழுவின் மூலம் பொருளாதார மேம்பாட்டினை கண்ட முதல் மாநிலமாக தமிழ் நாடு திகழ்கிறது.

**உனக்குத் தெரியுமா ?**

ஐக்கிய நாட்டுச் சபையின் முன்னாள் செயலாளர் கோஃபி அனான் கூறியதாவது: பாலினச் சமத்துவம் என்பதே ஓர் இலக்கு. வறுமை ஒழிப்பிற்கும், நீடித்த வளர்ச்சி கொண்டு வருவதற்கும், திறமையான ஆளுமைத்தன்மை அடைவதற்கும் முன்நிறைவாக பாலினச் சமத்துவம் அமைகிறது.




உலகலாவிய பெண்களுக்கான அதிகார அமைப்பு




## மனிதவள மேலாண்மை

மனிதவளம் என்பது பூமியின் வளங்களுக்குள் அதிக மதிப்புடைய வளமாகும். எனவே மக்கள் பூமியில் அமைதியுடன் வாழ இவ்வளத்தை பேணிக் காக்க வேண்டும். மனிதவள மேலாண்மை, ஒவ்வொரு மனிதனுடைய தனித்தன்மையை மேம்படுத்தி அதனை நாட்டிற்கும், உலக சமாதானத்திற்கும் ஏற்ற வகையில் தன் பங்கை ஆற்ற வழிவகுக்கிறது என்றால் மிகையாகாது.

**செயல்பாடு**

தானும் வாழ்ந்து, பிறரையும் வாழச் செய்ய தனி மனிதன் வளர்த்துக் கொள்ள வேண்டிய பண்புகளை பட்டியலிடு.

1)

2)

3)

4)

5)

## பயிற்சி

### அ. சரியான விடையை தேர்ந்தெடு.

1. தமிழ் நாட்டில்__________மாவட்டம் கல்வியறிவில் முதன்மை வகிக்கிறது.

   அ) கரூர் ஆ) கன்னியாகுமரி இ) சென்னை ஈ) பெரம்பலூர்

2. மாவட்டங்களுக்குள் மிகக் குறைந்த மக்கள் அடர்த்தி உடையது__________ஆகும்.

   அ) சிவகங்கை ஆ) நீலகிரி இ) கன்னியாகுமரி ஈ) திருவள்ளூர்

3. தமிழ் நாட்டின் மக்கள் தொகை 1951 முதல் 2001 முடிய 50 ஆண்டுகளில்__________ நிலையை அடைந்துள்ளது.

   அ) உயர்ந்த ஆ) குறைந்த
   இ) இரட்டிப்பு ஈ) மாற்றமில்லாத

4. செங்குத்தான சரிவும் அடர்ந்த காடுகளும் கொண்ட மலைப்பிரதேசம் மிக__________ மக்கள் தொகையை ஆதரிக்கின்றது.

   அ) நடுத்தரம் ஆ) அதிகம் இ) குறைந்த ஈ) மிகக் குறைந்த

## ஆ. பொருத்துக.

| | | |
|---|---|---|
| 1. | ஆண்டு வளர்ச்சி விகிதம் | 44% |
| 2. | ஊரக மக்கட் தொகை | 56% |
| 3. | தமிழ் நாட்டின் கல்வியறிவு விழுக்காடு | 1.1% |
| 4. | இந்துக்கள் | 73.5% |
| 5. | நகர மக்கட் தொகை | 88% |
| | | 10% |
| | | 25% |

## இ. குறுகிய விடையளி.

1. மக்கள் தொகை பரவலை கட்டுப்படுத்தும் காரணிகள் யாவை ?
2. மகளிர் சுய உதவிக்குழு குறித்து எழுதுக ?
3. மக்கள் தொகையை வளமாகக் கருதுவதற்கான காரணங்கள் யாவை ?
4. பிறப்பு விகிதத்தை இறப்பு விகிதத்திலிருந்து வேறுபடுத்தி காட்டுக.
5. மனித மேலாண்மையின் முக்கிய குறிக்கோள் என்ன ?
6. தானும் வாழ்ந்து பிறரையும் வாழ்விக்க, தனி மனிதன் வளர்த்துக் கொள்ள வேண்டிய பண்புகள் யாவை ?

## ஈ. விரிவான விடையளி.

1. தமிழ் நாட்டில் மக்கள் தொகை பரவல் பற்றி எழுதுக.
2. மகளிர் அதிகார மேம்பாட்டிற்காக தமிழக அரசு மேற்கொண்டுள்ள நடவடிக்கைகளை எழுதுக.

## உ. கொடுக்கப்பட்டுள்ள தமிழ் நாட்டின் வரைபடத்தில் கீழ்காணும் இடங்களை தகுந்த குறியீடு கொடுத்து குறிக்கவும்.

1. மக்கள் அடர்த்தி மிகக் குறைவாக உள்ள மாவட்டம்.
2. மக்கள் அடர்த்தி அதிகம் உள்ள மாவட்டம்.

# 10. சுற்றுச் சூழலும் அதன் தொடர்புடைய நிகழ்வுகளும்

சுற்றுச் சூழலும் வளர்ச்சியும் ஒரு நாணயத்தின் இரு பக்கத்தை போன்றது. ஒரு நாட்டின் வளர்ச்சிக்கு பொருளாதார வளர்ச்சி மிகவும் அவசியம். ஆனால் சுற்றுச் சூழலை மாசுபடுத்தி அதனை அடைய முயற்சிப்பது ஆபத்தானது. மனிதன் ஆதிகாலம் முதல் இயற்கையோடு ஒன்றி வாழ்ந்தான். விஞ்ஞானம் மற்றும் தொழில் நுட்ப வளர்ச்சியின் காரணமாக, மனிதன் சுற்றுச்சூழலை தனக்கேற்றவாறு மாற்றியமைத்தான். மனிதனின் குறுக்கீடு காரணமாக, உயிரினவாழ்க்கைச் சூழலில் சமச்சீர் இன்மையும், சுற்றுச்சூழல் சீர்கேடுகளும் உருவாகியுள்ளன. உயிரினங்கள் ஒன்றோடொன்று உடன்பட்டு வாழும் சூழலைத்தான் சுற்றுப்புறச்சூழல் என்று கூறுகிறோம். எல்லா உயிரினங்களும் ஒன்றைஒன்று சார்ந்தே வாழ்கின்றன. மனிதன் தனது அடிப்படைத் தேவைகளுக்கு சுற்றுச்சூழலையே சார்ந்திருக்கின்றான். மக்கள் தொகைப் பெருக்கத்தின் காரணமாக, தேவைகளும் அதிகரிக்கின்றன. பெருகிவரும் தேவைகளுக்கேற்ப, சுற்றுச்சூழல் நமக்களித்துள்ள எல்லா இயற்கை வளங்களும் அதிவேகமாக பயன்படுத்தப்பட்டு வருவதால் புதுப்பிக்க இயலாத வளங்கள் தீர்ந்து போவதோடு மிகுந்த இயற்கை சீர்க்கேட்டை உருவாக்குகிறது. இந்த சீர்கேடுகள் காலப்போக்கில் மனிதஇனத்தை முழுமையாக பாதித்து விடக்கூடும். முக்கிய சுற்றுச்சூழல் பிரச்சனைகளாவன – நகரமையமாதல், காடுகள் அழிக்கப்படுதல், சுற்றுச்சூழல் மாசுபடுதல் மற்றும் புவி வெப்பமயமாதல்.

## நகரமயமாதல்

நகரமயமாதலை விவசாயமல்லாத மற்றத்தொழில்களைச் செய்பவர்களின் எண்ணிக்கை மற்றும் மிகுந்த மக்கள் தொகை அடர்த்தியை கொண்டு அறியலாம். நகரமயமாதலை ஊக்குவிக்கும் காரணிகள், தொழில்மயமாதல், வர்த்தக மயமாதல் மற்றும் அதிகப்போக்குவரத்து சேவைகள் மற்றும் தகவல் பரிமாற்றமுமே ஆகும். தமிழ்நாட்டின் நகரமயமாதலின் அளவு 2001 மக்கள் தொகை கணக்குப்படி



ஏறக்குறைய 44 விழுக்காடு ஆகும். இந்தியாவில் தமிழ்நாடு நகரமயமாதலில் இரண்டாவது இடத்தில் இருக்கின்றது. தமிழ்நாட்டில் ஸ்ரீபெரும்பூதூர், காஞ்சிபுரம், அரக்கோணம் ஆகிய பகுதிகள் வேகமான தொழில் வளர்ச்சியாலும், சென்னை நகரத்திற்கு அருகாமையில் இருப்பதனாலும் அதிவேகமாக நகரமயமாக்கப் பட்டிருக்கிறது. இதனால் அந்தப்பகுதிகள் அதிக அளவு சுற்றுச் சூழல் சீர்க்கேட்டை சந்தித்து வருகின்றது.

## குறிப்பிடத்தக்க விளைவுகள்

அங்கீகரிக்கப்படாத ஆக்கிரமிப்புகள், காலியாக உள்ள அரசாங்கத்திற்கு சொந்தமான இடங்களில் முறைப்படுத்தப்படாத குடிசைகள் பெருகுதல் ஆகியவை நகர்புற சூழலுக்கு பல்வேறுசீர்கேடுகளை ஏற்படுத்துகின்றன.

சென்னையின் முக்கிய ஆற்றுப்பகுதிகளின் அருகில் உள்ள குடிசைவாழ் மக்களின் எண்ணிக்கை.

| ஆறுகள் | குடிசைவாழ் குடும்பங்கள் |
|---|---|
| கூவம் | 8266 |
| பக்கிங்காம் கால்வாய் | 18423 |
| அடையார் ஆறு | 6624 |

குடிசைப்பகுதிகள் ஆற்றோரங்களிலும், இருப்பு பாதைகளின் அருகாமையில் வளர்ச்சியுறுவதை தடுக்க, தமிழ்நாடு குடிசை மாற்றுவாரியம் சுமார் 3000 குடியிருப்புப்பகுதிகளை உருவாக்கி உள்ளது.

**உனது பகுதியின் அருகாமையில் உள்ள குடிசைப் பகுதிகள் வாழ்க்கை நிலையைக் கண்டுபிடி.**

### நகரமயமாதலால் விளைந்த குறிப்பிடத்தக்க சீர்கேடுகள்

- நகரமயமாதலின் காரணமாக நகரப்பகுதிகளை சுற்றியுள்ள விவசாய நிலங்கள் மற்றும் புல்வெளிகள் ஆகியவை தொழிற்சாலை மற்றும் குடியிருப்பு பகுதியாக மாற்றப்பட்டுள்ளது.
- பெருகிவரும் போக்குவரத்தும் மற்றும் அதன் நெரிசலும் சுற்றுச்சூழல் மாசுபடுதலுக்கு காரணமாகின்றன.
- எரிபொருள் தேவைக்காக மரங்களும் புதர்களும் அழிக்கப்படுவதால் பசும்புல்வெளிகள் குறைந்து மழைக்குறைவும் ஏற்படுகிறது.
- உயிரினங்கள் வாழும் இடங்களான பசுமைப்பகுதிகள் அழிக்கப்படுவதால், நகரப்பகுதிகளில் பிராணவாயுவின் அளவு குறைந்து காற்று மாசுபடுகிறது.
- வேகமாகப் பெகிவரும் நகர மக்கள் பெருக்கத்தினால் மாநகர, நகர சுகாதார வசதிகள் பாதிக்கப்படுவதோடு, சேவை வசதிகளின் குறைபாடுகளும் உருவாகுகின்றன.
- நிலத்தின் தேவைக்கு ஏற்படும் போட்டியினால் நிலத்தின் மதிப்பீடு அதிகரித்து வீட்டு வாடகையும் உயர்கிறது.

### காடுகள் அழிக்கப்படுதல்

மரங்கள் வெட்டப்படுவதே காடுகள் அழிக்கப்படுவதாகும். இதன் காரணமாக வெப்பம் அதிகரித்தல், குறைந்த மழை பொழிவு, மண் அரிப்பு, பல்வேறு, உயிரினங்கள் அழிந்து போதல் ஆகியவை ஏற்பட்டு சுற்றுச்சூழல் தரம் வெகு தீவிரமாகக் குறைகின்றது. மரங்கள்



காடுகள் அழித்தல்

இயற்கை சமநிலையை நிலைநிறுத்த பெரிதும் உதவுகின்றன.

### நீண்டகால போக்கில் ஏற்படும் தீய விளைவுகள்

- பருவநிலை மாற்றமும், உயிரின வேற்றுமை அழிதலுமே நீண்டகால விளைவுகள் ஆகும். காலநிலை மாற்றத்திற்கு முக்கியமாக அதிக அளவு கரியமிலவாயு வெளியேற்றப்படுவதே ஆகும்.
- அதிகரிக்கும் கரியமிலவாயுவினால் புவிவெப்பம் அதிகமாகி பருவநிலை மாற்றம் ஏற்படுகிறது.
- காடுகள் அழிக்கப்படுவதால் விலங்கினங்கள் மற்றும் தாவரங்களின் இருப்பிடங்கள் சேதப்படுத்தப்பட்டு அவை அழிவதற்கு காரணமாகின்றன.
- காடுகள் அழிக்கப்படுவதால் ஒரு இடத்தின் இயற்கை அழகு பாதிக்கப்பட்டு அது சுற்றுலாவை பெரிதும் பாதிக்கிறது.

### குறுகிய காலத்தில் ஏற்படும் தீய விளைவுகள்

- வேகமாக காடுகள் குறைந்து வருவதால் கிராமப்பகுதிகளில் மக்கள் குறைந்த வெப்பத்தை தரக்கூடிய எரிபொருளை உபயோகிக்கின்றனர். மற்றும் அதிக நேரத்தை எரிபொருள் சேகரிப்பதில் செலவிடுகின்றனர்.
- காடுகள் குறைந்து வருவதால் மக்கள் அதிக அளவு இயற்கை உரங்களைத் தவிர்த்து சந்தையில் கிடைக்கும் இரசாயன உரங்களை உபயோகிக்கும் நிலைக்குத் தள்ளப்படுகிறார்கள்.

- ஆடுமாடுகளுக்கு தேவையான உணவும் குறைவதால், நாளடைவில் அதன் எண்ணிக்கையும் குறைகிறது.
- பசுமையான காட்டுப் பகுதிகள் அழியும் போது மண் அரிப்பு ஏற்பட்டு மண்வளம் குறைகிறது.
- தொடர்ந்து காடுகள் வெட்டப்படுவதால் நிலச்சரிவு ஏற்படுகிறது. உதாரணம் ஊட்டி மற்றும் குன்னூர்.

**செயல்பாடு**

காடுகளின் பயன்களை எழுதுக.



1)
2)
3)
4)
5)

## உயிரின வேற்றுமை

இயற்கையில் காணப்படும் பல்வேறு உயிரினங்களாகிய் தாவரங்கள், விலங்குகள் மற்றும் நுண்ணிய உயிரினங்கள் அனைத்தும் கூட்டாக உயிரின வேற்றுமை எனப்படுகிறது. உயிரின வேற்றுமைகள் அழிவதற்கும், இயற்கைக்கு மாறான உயிரின நடவடிக்கைகளுக்கும் மனித செயல்களே முக்கிய காரணமாகும்.



உயிரின வேற்றுமை

## உயிரின வேற்றுமை அழிந்துப்போதல்

இயற்கையான காரணங்களாலும் மனிதனுடையசெயல்பாடுகளாலும் தாவரங்களும் விலங்கினங்களும் அழிவதையே நாம் உயிரினவேற்றுமை அழிந்து போதல் என்று கூறுகிறோம்.

தமிழ் நாட்டில் உயிரின வேற்றுமையை பாதிக்கும் காரணிகள் பின்வருமாறு:–

1. தடுக்கப்படாத வர்த்தக நோக்கோடு அழிக்கப்படும் காடுகள், கடலோரப் பகுதிகள், சதுப்பு நிலங்கள் மற்றும் உயிரினங்களின் வாழுமிடங்களை மாற்றியமைத்தல் ஆகியவை உயிரின வேற்றுமையை பாதிக்கின்றன.

2. குடியிருப்பு பகுதிகள் மற்றும் தொழிற்சாலைகளை அமைக்க உயிரின வேற்றுமை நிறைந்து காணப்படும் பகுதிகளை ஆக்கிரமிப்பு செய்தலாகும்.

**செய்து பார்க்க**

பிச்சாவரம் மற்றும் முத்துப்பேட்டை பகுதியிலுள்ள அடர்ந்த சதுப்பு நிலக்காடுகள் மனிதனின் பொறுப்பற்ற செயலால் பெரிதும் பாதிக்கப்பட்டுள்ளது.

(இவ்விடங்களை பாதித்த மனித செயல்களை ஆராய்ந்து அறிக)

உயிர் கோளத்தையும், அதன் உயிரின வேற்றுமையையும் பாதுகாக்க நீலகிரி வனப்பகுதியிலும், மன்னார் வளைகுடா பகுதியிலும் பாதுகாப்பு மையங்கள் அமைக்கப்பட்டுள்ளன. உயிரின வேற்றுமை பாதுகாப்பு மையங்களின் நோக்கங்கள்.

1. மரபு வேற்றுமை உடைய பல்வேறு உயிரினங்களை அது வாழும் சூழ்நிலையில் எந்தவித இயற்கைநிலை மாறுபாடு இல்லாமல் பாதுகாத்தல்.

2. இம்மையங்கள் நிலைத்த வளர்ச்சியை செயல்படுத்தும் ஓர் மாற்று தீர்வாக பயன்படுகிறது.

**உங்களுக்கு தெரியுமா ?**

விலங்குகளை கொன்று பெறப்படும் வீட்டுப் பொருட்கள்.

1. வர்ணம் பூசும் தூரிகை – காட்டுப்பன்றி, கீரிப்பிள்ளை

2. பட்டு – 100 கிராம் பட்டு நூல் தயாரிக்க 1500 பட்டுப்புழுக்கள் கொல்லப்படுகின்றன.

3. வெள்ளிச்சுருள் – எருதின் குடல்

4. அரக்கு – 3,00,000 பூச்சிகள் கொல்லப்படுகின்றன.

## புவி வெப்பமயமாதல்

மனித இனம் சந்திக்கும் பல சூழல் பாதிப்புகளில் தலையானது புவி வெப்பமடைதலாகும். காற்றில் கரியமல வாயுவின் அளவு அதிகரித்து பசுமை விளைவில் மாற்றம் ஏற்படுவதால் பூமிக்கு அருகில் உள்ள வளி மண்டலம் வெப்பமடைவதே புவி வெப்பமயமாதல் ஆகும். புவி வெப்பமயமாதலின் முக்கிய காரணங்கள்:



பனியாறுகள் உருகுதல்

1. கரியமில வாயு, மீத்தேன், நைட்ரஸ் ஆக்சைட் மற்றும் குளோரோ ஃப்ளோரோ கார்பன் காற்றில் கலக்கும் நிலை.

2. எரிபொருளாக உபயோகப்படுத்தப்படும் பெட்ரோலியமும், இயற்கை வாயுவும் மற்றும் தீவிரமாக காடுகள் அழிக்கப் படுவதும் காற்று மாசடைதலுக்கான காரணங்களாகும்.

## புவி வெப்பமயமாதலால் ஏற்படும் விளைவுகள்

1. வெப்ப காற்றும் மாறுபட்ட பருவநிலையினால் ஏற்படும் நோய்கள் மற்றும் வட, தென் துருவ கடல் பகுதிகள் வெப்பமடைதல்.

2. பனி ஆறுகள் உருகுவதால் கடல் மட்டம் உயர்ந்து கடலோரப் பகுதிகளில் வெள்ளம் ஏற்படுகிறது.

3. சுற்றுச் சூழல் மாற்றத்தினால் பவளப்பாறைகள் நிறம் மாற்றமடைந்து அழிந்து போகத் தொடங்குகிறது.

4. அடிக்கடி ஏற்படும் வறட்சி, தீ, மற்றும் அதிக அளவு பனிப்பொழிவு.

## புவி வெப்பமயமாதலைக் கட்டுப்படுத்தும் வழிமுறைகள்

குறிப்பிடத்தக்க வழிமுறைகள் பின்வருமாறு.

1. புதுப்பிக்க இயலாத எரிசக்தி வளங்களுக்கு மாற்றாக புதுப்பிக்க இயலும் எரிசக்தி வளங்களை பயன்படுத்துதல்.

2. பசுமை வீட்டிற்கு பாதிப்பை செய்யும் நச்சுத்தன்மை வாயுக்களின் வெளியேற்றத்தை தடுத்தல்.

3. காடு வளர்த்தல் மற்றும் அரசு போக்குவரத்தை உபயோகிக்க மக்களை ஊக்குவித்தல்.

## பாழ்பட்டுவரும் சுற்றுச்சூழலை பாதுகாப்பதில் மனிதனின் பங்கீடு

எல்லா இயற்கை வளங்களையும் நிரந்தர முன்னேற்றத்திற்காக பாதுகாப்பதை ஒவ்வொரு குடிமகனும் தனது கடமையாக கொள்ள வேண்டும். ஒவ்வொரு மனிதனும் தனது வாழ்க்கை முறையை மாற்றிக் கொண்டு, சுற்றுச் சூழலைப் பாதுகாப்பதை ஒரு முக்கிய பொறுப்பாக நினைத்து செயல்பட வேண்டும். நமது பசுமையான பூமியை அழிவிலிருந்து பாதுகாக்கும் வழிமுறைகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

1. இயற்கையோடு இணைந்த வாழ்க்கை முறையை கடைபிடித்து, சுற்றுச் சூழலை பாதுகாத்தல்.

2. உயிரினச் சூழல் முன்னேற்றம், உயிரினச் சூழலின் திறன், உயிரினங்களுக்கு இணக்கமான தொழில்நுட்பம் ஆகியவற்றின் மூலம் இயற்கை வளங்களை பாதுகாத்தல்.

3. தேவைப்படாத மின் விளக்குகள் மற்றும் வீட்டு உபயோக மின் சாதனங்களை அணைத்து வைத்தல் மற்றும் போக்குவரத்தில் எரிபொருளை சேமித்தல்.

4. மக்கள் தொகைப் பெருக்கத்தை சீராக வைத்திருத்தல். இயற்கை வளங்களை தேவைக்கு அதிகமாக உபயோகிப்பதை கட்டுப்படுத்துதல், பல்வேறுபட்ட உயிரினங்களை பாதுகாத்தல்.

## மாசடைதல்

சுற்றுப்புறச் சூழலில் வாழும் உயிரினங்கள் மற்றும் கட்டிட அமைப்புகளுக்கு தீமை விளைவிக்கும் பொருட்களை மாசுபடுதல் என்கிறோம். மாசுபடுத்தும் எந்தப் பொருளையும் நாம் மாசுக்கள் என்கிறோம். மாசுபடுத்தும் காரணிகள் இரண்டு வகைப்படும். அவையாவன. இரசாயனம், தாவர மற்றும் பிற உயிரினங்கள். நம் பூமி, தொழிற்சாலைகளிலிருந்தும், வாகன போக்குவரத்தாலும் வெளியிடும் நச்சுத்தன்மை கொண்ட வாயு பொருட்களினால் மாசுபடுகிறது. மக்கள் தொகை நிறைந்த நகரப்பகுதிகளில் இதன் தாக்கம் மிக அதிகம். மாசுக்களை அவை உருவாகும் ஆதாரங்களை கொண்டு மூன்று வகையாகப் பிரிக்கலாம்.

1. காற்று மாசடைதல்
2. நீர் மாசடைதல்
3. ஒலி மாசடைதல்

## காற்று மாசுபடுதல்

சுகாதாரக் சீர்கேட்டை விளைவிக்கும் வாயுக்கள், திரவ மற்றும் திடக்கழிவு பொருட்கள் இருக்கும் காற்றை மாசுபட்ட காற்று என்கிறோம். காற்றின் இந்த தன்மையை மாற்றும் கூறுகளினால் உயிரினங்களின் சுகாதாரம் பாதிக்கப்படுகிறது.

## காற்றை மாசுபடுத்தும் முக்கிய காரணிகள்

1. தொழிற்சாலைக் கழிவுகள்
2. தானியங்கி வாகனங்கள்
3. வீடுகளில் இருந்து வெளியேற்றபடும் கழிவுகள்.
4. அணுகுண்டு வெடிப்புகள்.
5. எரிமலைக்கழிவுகள் மற்றும் காட்டுத்தீ.

அதிக எண்ணிக்கையில் உள்ள வாகனங்களே நகர்ப்புறங்களில் காற்று மாசுபடுவதற்கு காரணமாகும். இவையல்லாது சில இடங்களில் அதிக அளவில் உள்ள தொழிற்சாலைகளும், அனல் மின் நிலையங்களும காரணமாக அமைகின்றன. காற்று மாசுபடுவதற்கு முக்கிய உந்துதலாக இருப்பவை . தொழில் மயமாதல், வாகனங்களின் எண்ணிக்கை அதிகரித்தல், கட்டுப்பாடில்லாமல் எரிக்கப்படும் குப்பை மற்றும் கழிவுப் பொருட்களுமே காரணமாகும். மாநிலத்தின் பல பகுதிகளில் வேகமாகப் பெருகி வரும் மக்கள் தொகை திட்டமிடப்படாத நகரமயமாதலுக்கு காரணமாகவும், இதன் விளைவாக போக்குவரத்து, எரிபொருள் மற்றும் கட்டுமான வசதிகளின் தேவை அதிகரிப்பாலும் மாசுபட்டு பிரச்சினைகள் உருவாகின்றது.



காற்று மாசுபடுதல்



வாகனங்களால் மாசுபடுதல்

**காற்று மாசுபடுதலின் விளைவுகள்**

1. உலக வெப்பமயமாதல்
2. அமில மழை
3. ஓசோன் படலம் கரைதல்
4. புகை மூடுபனி
5. சுகாதாரப் பிரச்சினைகள்

**இரசாயனம் என்ன என்பதை விடப்பட்ட எழுத்துக்கள் மூலம் கண்டுபிடி**

தீமை விளைவிக்கும் சில இரசாயனங்கள்–

1. ஈ__ம் – கல்லீரல் மற்றும் உணவுக்குடல் பகுதியைப் பாதித்தல்.

2. கா__ __ ம் – மன வளர்ச்சி குன்றுதலும், பக்கவாதம் ஏற்படுதலும்

3. கா __ __ __ மோ __ __ __ சை__–இரத்தத்தில் பிராணவாயுவின் அளவை குறைத்தல்

4. நை__ __ஜன் டை__ __ சைடு– கண்ணில் எரிச்சல் ஏற்படுத்துதல்

5. சல்__ ர் __ __ __ சைடு– நுரையீரல் பாதிப்பு

6. ஹை__ __ஜன் __ __ பைடு – தொண்டைப் புண், இரத்தத்தில் இரும்பு சத்தை எடுத்தல்

7. தக__ம் – திசுக்களை பலவீனப்படுத்தல்.

(ஈயம், காரீயம், கார்பன் மோனாக்சைடு, நைட்ரஜன் டைஆக்ஸைடு, சல்பர் டைஆக்ஸைடு, ஹைட்ரஜன் சல்பைடு, தகரம்)

**நீர் மாசுபடுதல்**

மாசுக்கள் கலப்பதால் தண்ணீர் தரம் குறைகின்றது. நீர் மாசுக்களின் உற்பத்தி தளங்கள் பின்வருமாறு –

1. வீட்டு கழிவுகள் மற்றும் கழிவு நீர் குழாய்கள்

2. பூச்சிக் கொல்லிகளும், வேளாண்மைக் கழிவுகளும்

3. தொழிற்சாலைக் கழிவுகள்

4. அணு ஆராய்ச்சிக் கழிவுகள்

5. எண்ணைக் கசிவு

**நீர் மாசுபடுதலின் தீமைகள்**

1. நீரில் வாழும் நுண்ணுயிர்கள் அழிக்கப்பட்டு, நீர்வாழ் உயிரினங்களின் உணவுச் சங்கிலி பாதிக்கப்படுதல்.

2. நீரினால் பரவக்கூடிய வியாதிகளான காலரா, மஞ்சள் காமாலை, வயிற்றுபோக்கு மற்றும் டைபாயிட் உண்டாகக் காரணமாகிறது.

3. பயிர் நாசம், விளைச்சல், மண்வளம் மற்றும் மண்ணின் தரம் குறைய காரணமாகிறது.

4. கடல் பரப்பில் ஏற்படும் எண்ணெய் கசிவு கடல்வாழ் உயிரினங்களின் அழிவுக்கு காரணமாகிறது.



நீர் மாசுபடுதல்

**தமிழ் நாட்டின் ஆறுகள் மாசடைந்ததற்கான காரணங்கள்**

தமிழ் நாட்டில் பாயும் பெரும்பாலான ஆறுகள் மழையில்லா காலங்களில் வற்றிப்போகக் கூடிய தன்மையுடையதாகும். நிரந்தரமற்ற தண்ணீர் வளத்தின் காரணமாக தோல் தொழிற்சாலைகள், துணி தொழிற்சாலைகள், சாயப் பட்டறைகள் மற்றும் மருத்துவமனைகள் தங்கள் கழிவுகளை ஆற்றுப்பகுதியில் கொட்டி விடுகின்றன. ஈரோடு, திருப்பூர் மற்றும் கரூர் பகுதிகளில் உள்ள சாயப்பட்டறைகளிலிருந்து வெளியேறும் கழிவு நீரானது, நொய்யல் மற்றும் அமராவதி ஆற்றுப் பகுதியின் நீர் சூழலைப் பெரிதும்

பாதித்து உள்ளது. வேலூர் மாவட்டத்தில் பாயும் பாலாற்றின் படுகைப்பகுதியின் சூழல் நீர்க்கேட்டிற்கு அங்குள்ள தோல் பதனிடும் தொழிற்சாலைகளே பெரிதும் காரணமாகும். தமிழ் நாட்டில் பாயும் நான்கு முக்கிய நதிகளின் கரையோரம் அமைந்துள்ள நகரங்களிலிருந்து வெளியேறும் கழிவு நீர் அவற்றை மிகுந்த அளவில் மாசடையச் செய்துள்ளன. காவிரி ஆற்றங் கரையோரத்தில் 11 நகரங்களும், பாலாற்றங் கரையில் 6 நகரங்களும், வைகை ஆற்றங் கரையில் 5 நகரங்களும், தாமிரவருணி ஆற்றங்கரையில் அமைந்துள்ள 3 நகரங்களும் இவ்வாறுகளின் நீரை மாசடையச் செய்து உள்ளன.

தமிழ் நாட்டின் முக்கிய ஆறுகளான காவேரி மற்றும் அதன் துணை ஆறுகளும் பெண்ணையாறு , பாலாறு, வைகை மற்றும் தாமிரவருணி நதிக் கரைப்பகுதிகளிலும் அதிகளவு மாசுபடுத்தும் தொழிற் சாலைகளுக்கு அரசாங்கம் முழுத்தடை விதித்துள்ளது. அதிகமாக மாசுபடுத்தும் தொழிற்சாலைகளை கண்காணிக்க தனி கண்காணிப்புப் பிரிவை தமிழ்நாடு மாசுக்கட்டு பாடு வாரியம் அமைத்துள்ளது. உதக மண்டலம், கொடைக்கானல், ஏற்காடு பகுதி களில் உள்ள ஏரிகளை கண்காணிக்க தனி கண்காணிப்பு பிரிவை தமிழ்நாடு மாசுக்கட்டுப்பாட்டு வாரியம் ஜெம்ஸ் (GEMS - Global Environment Monitoring System) என்ற மத்திய அரசின் நிதி உதவி பெற்ற நிறுவனத்தின் மூலம் கண்காணிக்கிறது. சென்னை நகர நதிப் பாதுகாப்புத் திட்டத்தின் கீழ் கூவம், பக்கிங்காம், அடையார், ஓட்டேரி நல்லா மற்றும் மாம்பலம் கால்வாய் பகுதிகள் ஆகியவை மறுசீரமைப்பு படுத்தப்படுகின்றன.



நிலத்தில் திடக்கழிவுகளை கொட்டுதல்

**தமிழ் நாட்டின் முக்கிய நகரங்களும் அவற்றின் திடக்கழிவு உற்பத்தியும்**

| நகரம் | டன்கள்/நாள் ஒன்றுக்கு |
|---|---|
| சென்னை | 3500 |
| மதுரை | 711 |
| கோயம்புத்தூர் | 710 |
| திருச்சி | 408 |
| சேலம் | 330 |
| திருநெல்வேலி | 210 |

### நிலம் மற்றும் மண் மாசுபடுதல்

நிலம் மாசுபடுவது என்பது திடக்கழிவினால் நிலம் தூய்மை கெடுவதேயாகும். எந்த பொருள் நிலத்தின் உற்பத்தித் திறனை குறைக்கிறதோ அதுவே நிலத்தை மாசு படுத்தும் பொருளாகும். இந்த செயல் பாட்டையே மண் மாசுபடுதல் என்று கூறு கிறோம்.

### மண் மற்றும் நிலம் மாசுபடுதலுக்கான ஆதாரங்கள்

தொழிற்சாலை கழிவுகளும், விவசாயக் கழிவுகளும், நகர்புறத்திலிருந்து வரும் திடக்கழிவும் ஒரு இடத்தில் குவித்து வைப்பதன் மூலம் நிலம் மாசு அடைகிறது. அதிக அளவிள் செயற்கையான இரசாயன உரங்களும், பூச்சிக் கொல்லிகளும் உபயோகப்படுத்தப்படுவதால் அவை மண்ணை மக்க வைக்கும் பாக்டீரியாக்களை அழிக்கின்றன. இதனால் மண்ணின் வளமும், தரமும் பெரிதும் பாதிப்படைகிறது.

### மண் மாசுபடுதலின் விளைவுகள்

1. இரசாயனப் பொருட்கள் நிலத்தையும் அதன் மேல்பரப்பில் ஓடும் நீரையும் மாசுபடுத்துகிறது.

2. தீங்கு விளைவிக்கும் இரசாயனப் பொருட்கள் பல்வேறு உணவுப் பொருட்களின் மூலமாக மனிதனுக்கு பல்வேறு தீங்கு விளைவிக்கும் நோய்களை உண்டாக்குகிறது.

3. பூச்சிக்கொல்லிகள் மனிதனது மத்திய நரம்பு மண்டலம், நுரையீரல் மற்றும்

இனப்பெருக்க உறுப்புகளையும் பாதிக்கிறது.

**ஒலி மாசுபாடு**

தேவையில்லாத மற்றும் பொறுத்துக்கொள்ள முடியாத ஒலியையே ஒலி மாசுபாடு என்கிறோம். இவ்வகை மாசு தொழில்மயமான மக்கள் அடர்த்தி மிகுந்த நகரமயமாக்கப்பட்ட பகுதிகளில் அதிகமாக உணர முடிகிறது. சென்னையில் ஒலிக்கும் ஒலி அளவு 75 முதல் 80 டெசிபலாகவும், கோயம்புத்தூரில் 80 முதல் 85 வரையிலும், மதுரையில் 70 முதல் 75 ஆகவும் உள்ளது.

**ஒலி மாசுபாட்டினால் ஏற்படும் தீய விளைவுகள்**

1. கேட்கும் திறன் இழப்பு, தலைவலி, மனநிலை பாதிப்பும் மன அழுத்தமும்.

2. அதிக ஒலி கட்டிடங்களில் அதிர்வை ஏற்படுத்துகிறது.

3. தூக்கத்தை பாதித்து நரம்புத் தளர்ச்சியையும், எரிச்சலையும் உண்டாக்குகிறது.

4. ஒலி மாசுபாடு உயிரினங்களின் இனப்பெருக்கத்தினை வெகுவாக குறைக்கின்றது.

**சுற்றுச் சூழலை பாதுகாக்க அரசாங்கம் எடுத்துள்ள நடவடிக்கைகள்**

1. காட்டு வளங்களை பாதுகாக்கவும், பராமரிக்கவும் ஆவன செய்வதுடன் காட்டு மரங்களையும் வளர்க்கின்றது.

2. தேசிய பசுமைக் குழு என்றோர் அமைப்பை நிறுவி பள்ளி குழந்தைகளிடம் சுற்றுச் சூழல் பற்றிய விழிப்புணர்வை ஏற்படுத்த முனைந்துள்ளது. இதற்கு 29 மாவட்டங்களில், மாவட்டம் ஒவ்வொன்றிலும் 100 பள்ளிகள் வீதம் தேர்ந்தெடுத்து உள்ளது. இந்திய அரசாங்கம் இத்திட்டத்திற்காக ஒவ்வொரு ஆண்டும் ஒவ்வொரு பள்ளிக்கும் ரூ1000/– வீதம் மானியம் வழங்கி வருகிறது. சுமார் 3 இலட்சம் குழந்தைகள் இத்திட்டத்தில் பங்கேற்றுள்ளனர்.

3. உயிரின விழா, சுற்றுச் சூழல் பாசறை, போட்டிகள், பந்தயங்கள் ஆகியவை நடத்தப்படுகின்றன. மக்களிடையே சுற்றுச்சூழல் விழிப்புணர்வு ஏற்பட புவி நாள் (சூன் 22ஆம் நாள்), உலக சுற்றுச் சூழல் தினம் (சூன் 5ஆம் நாள்), ஓசோன் தினம் (செப்டெம்பர் 16 ஆம் நாள்) ஆகியவை கொண்டாடப்படுகிறது.

4. திட கழிவுகள் பல்வேறு வகையாகப் பிரிப்பதன் மூலம் திடக்கழிவு மேலாண்மை எளிதாகிறது.

5. வளர்ந்து வரும் தகவல் தொழில் நுட்பம் உறபத்தி செய்யும் 70 சதவீத மின்னணு கழிவுகளை தமிழ் நாடு மாசு கட்டுப்பாட்டு வாரியம் மறு சுழற்சி முறையில் அப்புறப்படுத்திட வேண்டும்.



மின்னியல் கழிவுகள்

6. சரக்கு வாகனங்கள் வெளியேற்றும் மாசுக்களை கண்காணிக்க தமிழ் நாடு மாசு கட்டுபாடு வாரியம் கண்காணிப்பு நிலையங்களை ஏற்படுத்தி உள்ளது. சென்னையில் ஆலந்தூர், மாதவரம் மற்றும் அம்பத்தூரிலும், பிற மாவட்டங்களில் நீலகிரி, திண்டுக்கல், பழனி மற்றும் செங்கல்பட்டு ஆகிய இடங்களில் நிறுவப்பட்டுள்ளது. இவையல்லாது, வாகன போக்குவரத்தின் மாசு வெளியேற்றத்தை கண்காணிக்க சென்னையில், கிண்டி, வியாசர்பாடி மற்றும் திருமங்கலம் ஆகிய இடங்களில் கண்காணிப்பு நிலையங்கள் உள்ளன.

7. சிருங்கார சென்னையை உருவாக்க அரசாங்கம் பல்வேறு இடங்களில் பூங்காக்கள், மேம்பாலங்கள், பாலங்கள்

அமைத்தல், கடற்கரையை அழுகுப்படுத்துதல், ஆக்கிரமிப்புகளை அகற்றுதல் மற்றும் சாலையோர நடைபாதைகளை மறுசீரமைப்புச் செய்தல் ஆகிய செயல்களை செய்து வருகிறது.

**உனக்குத் தெரியுமா ?**

1. வீட்டு சிட்டுக்குருவிகள் தற்போது அதிக அளவில் காணப்படாததற்கு காரணம் மின்னஞ்சல் கோபுரங்கள் வெளியிடும் மின் அலைகளே ஆகும்.





2. வேட்டையாடுவதால் புலிகளின் எண்ணிக்கை வெகுவாக குறைந்துள்ளது.

## பயிற்சி

### அ. சரியான விடையைத் தேர்ந்தெடு.

1. உயிரினங்கள் ஒன்றை ஒன்று சார்ந்து வாழும் உயிரினச் சூாலை------- என்று கூறகிறோம்.

   அ) உயிரினச்சூழல் ஆ) சுற்றுச்சூழல் இ) நிலப்பகுதி ஈ) உயிரினப்பகுதி

2. மனிதனால் காடுகள் அழிக்கப்படுவதை--------என்று கூறகிறோம்.

   அ) காடுகள் வளர்த்தல் ஆ) காடுகள் அழித்தல்
   இ) பயிரிடுதல் ஈ) சிதறுதல்

3. சுற்றுச்சூழல் உயிரினங்கள் அழிவதை --------- என்று கூறகிறோம்.

   அ) உயிரினங்கள் அழிதல் ஆ) காடுகள் அழிதல்
   இ) அமில மழை இ) உயிரின வேற்றுமை

4. அதிகளவு செயற்கை இரசாயண உரங்கள் உபயோகிப்பதால்-------தரம் குறைகிறது.

   அ) காற்று ஆ) மண் இ) அறுகள் ஈ) கடல்

### ஆ. பொருத்துக.

| | | |
|---|---|---|
| 1. | புவி வெப்பமடைதல் | பூச்சி கொல்லிகள் |
| 2. | காடுகளை அழித்தல் | காற்று மாசடைதல் |
| 3. | வாகனங்கள் | தடை செய்யப்படாத ஆக்கரமிப்புகள் |
| 4. | நீர் மாசடைதல் | கரிமல வாயு |
| 5. | நகர மயமாதல் | கடலோர வெள்ளம் |
| | | நீர் |
| | | நெரிசல் |

## இ. கீழ்கண்ட வினாக்களுக்கு விடையளி.

1. சுற்றுச் சூழல் பிரச்சினைகள் எவை எவை ?
2. புவி வெப்பமயமாதல் என்றால் என்ன ?
3. காடுகள் அழிக்கப்படுதல் என்றால் என்ன ?
4. பைங்குடில் வாயுக்கள்(Green house gases)என்று அழைக்கப்படும் பசுமைவீட்டு விளைவு வாயுக்கள் சிலவற்றை கூறு.
5. மாசுபடுதல் என்றால் என்ன ?
6. நகரமயமாதல் என்றால் என்ன ?
7. உயிரின வேற்றுமையை அச்சுறுத்துபவை எவை ?
8. நிலம் மாசுபடுவதற்கான ஆதாரங்கள் எவை எவை ?

## உ. விரிவான வார்த்தைகளில் விடையளி.

1. புவி வெப்பமயமாதலின் விளைவுகள் என்ன ?
2. உயிரினங்களின் பாதுகாப்பு மையங்களின் குறிக்கோள்களை எழுது ?
3. தமிழ் நாட்டின் நீர் மாசுபட்டுள்ள இடங்களை குறிப்பிடு. இரசாங்கம் இதைத் தடுக்க என்ன நடவடிக்கை எடுத்துள்ளது ?
4. பாழ்பட்டு வரும் சுற்றுச்சூழலைப் பாதுகாக்க மனிதனின் பங்கு என்ன ?
5. காடுகள் அழிக்கப்படுவதால் ஏற்படும் விளைவுகள் என்ன ?

## ஊ. செய்முறை

1. புத்தகத்தில் கொடுக்கப்படாத பிற சுற்றுச்சூழல் பிரச்சினைகள் பற்றிய தகவலை சேகரி.
2. உன்னுடைய பகுதியை பாதிக்கும் சுற்றுச்சூழல் பிரச்சினைகளை விவாதி.

# 11. வளங்களை பாதுகாத்தலும் நிலைப்படுத்தப்பட்ட வளர்ச்சியும்

இயற்கை மனிதனுக்கு பலவகை வளங்களை தாராளமாக வாரி வழங்கியுள்ளது. மனிதன் நவீன நாகரீக காலக்கட்டத்தில் அறிவியல் மற்றும் தொழில்நுட்பத்தின் அபரீத வளர்ச்சியின் உதவியோடு வளங்களை அனுமதிக்கப்பட்ட அளவிற்கு மீறி பயன்படுத்துகிறான். இதனால் சுற்று சூழல் சீர்கேடு அடைந்துள்ளது. இதன் விளைவாக, மனிதன் இயற்கை வளங்களை பராமரிப்பது எப்படி என்று ஆராயும் நிலையை அடைந்துள்ளான.

மதிப்புமிக்க வளங்கள் மனிதனுக்கு அத்தியாவசியமானதாகும். ஒரு வளத்தின் இருப்பளவு மற்றும் அதன் கலப்படமற்ற தூய்மை மற்ற வளத்தின் நிலைப்பாட்டை பாதிக்கும் விதத்தில் ஒன்றோடு ஒன்று தொடர்புடையதாகும். வளங்களின் மாறுபட்ட நிலை மனிதனை பாதிக்கின்றது. எனவே சுற்றுச் சூழலை அதன் தனித்தன்மையோடு பாதுகாக்க தகுந்த மேலாண்மை முறைகளைக் கையாண்டு பாதுகாக்க வேண்டும்.



மாசுக்களின் எதிர்விளைவு சங்கிலி

**செயல்பாடு**

1) உனது பகுதியில் மாசுக்களின் எதிர் விளைவு சங்கிலி செயல்வழிப்படமாக வரைக

2) மாசடைதலின் ஆதாரங்களைக் கண்டுபிடி

3) சக மாணவர்களுடன் கலந்தாய்வு செய்து, மாசடைதலினால் உண்டாகும் பாதிப்பின் தீவிரத்தை அறிக.

4) உன் பகுதி மக்களுக்கும் மாணவர்களுக்கும் இதைப் பற்றி விழிப்புணர்வு முகாம் நடந்தது.

இயற்கை வளங்களை காத்தல் என்பது நிலையான திட்டமிட்ட முறையில் வளங்களை பயன்படுத்துவதன் மூலம் பின்வரும் சந்ததியினருக்கும் உபயோகப்படும் அளவிற்கு பாதுகாத்து விட்டு வைத்தல் ஆகும்.

இயற்கை வளங்களை பராமரித்தல் என்பது வளங்களை நீண்ட கால பயன்பாட்டிற்காக தகுந்த முறையில் சமநிலை மாறாமல் பராமரித்தல் ஆகும்.

மனிதனின் அனைத்து செயல்களும் மண்ணையே ஆதாரமாகக் கொண்டுள்ளதால், மண்வளம் மிகச் சிறந்த வளமாகக் கருதப்படுகிறது. கம்பம் பள்ளத்தாக்கு, திருநெல்வேலி, தூத்துக்குடி மற்றும் இராமநாதபுரத்தின் சில பகுதிகளில் காற்றால் மண் அரிப்பு அதிகம் காணப்படுகிறது. காட்டினை அழிப்பதால் உண்டாகக்கூடிய அதிக நீர்பெருக்கு மலைச்சரிவுகளில் வேகமாக வருவதாலும் மேற்கு தொடர்ச்சி மலைப்பகுதியில் மண் அரிப்பு அதிக அளவில் ஏற்படுகிறது. மண் அரிப்பு தடுப்பு திட்டங்கள் பலவற்றை தமிழக அரசு சிறப்பாக செயல்படுத்தி வருகிறது. மேலும் வேளாண்துறை, கிராமபுறங்களில் மண் பரிசோதனை கூடங்கள் அமைத்து, விவசாயிகளுக்கு விஞ்ஞான பூர்வமாக மண்ணின் தன்மையை பரிசோதித்து, மண் மேம்பாட்டு வழிமுறைகளை அறிமுகப்படுத்தி மண்வளத்தை பாதுகாக்க உதவுகிறது. மாவட்ட அளவில் மண் ஆராய்ச்சி நிலையங்கள் அமைக்கப்பட்டு, மண்வள நிலையை மதிப்பீடு செய்கின்றது. பொதுவாக மண் பாதுகாப்பு இருவழிகளில் கையாளப் படுகிறது. அவை ஒன்று, மண் அரிப்பை தடுத்தல், மற்றொன்று மண்வளத்தை தக்க வைத்தல்.

| பாதுகாத்தல் | பராமரித்தல் |
|---|---|
| 1. காடுகளை வளர்த்தல் பாதுகாத்தலின் முறை ஆகும். | காட்டுப்பகுதியியை பாதுகாக்கப்பட வேண்டிய பகுதியாக அறிவிப்பது பராமரித்ல் ஆகும். |
| 2. சொட்டு நீர் பாசன நீர்வளப் பாதுகாப்பின் ஓர் முறையாகும். | நீர் கசிவு குட்டைகள் அமைத்து நிலத்தடி நீரைப் பாதுகாத்தல் பராமரித்தலின் அம்சமாகும். |
| 3. விலங்குகளை வளர்த்து, வருடத்தின் ஒரு குறிப்பிட்ட பருவத்தில் மட்டும் அதன் ரோமங்களை எடுத்தல் விலங்கின பாதுகாப்பாகும். | அழியும் நிலையிலுள்ள விலங்குகளை வளர்த்து, இனப்பெருக்கம் செய்ய உதவியாக இருப்பது பராமரித்தலாகும். |
| விலங்குகளை அதன் வாழும் சூழலிலேயே பாதுகாப்பது ஒரு முறையாகும். | புவியில் ஒரு பகுதியை பெட்டகமாக பாதுகாத்தல் பராமரித்தலின் ஓர் முறையாகும். |

## மண் அரிப்பின் வகைகளும் தடுப்பு முறைகளும்


மேல் மண் அரித்தல்


நீர் கால அரித்தல்


காற்றின் அரிப்பு செயல்


ஊடு பயிர் வளர்த்தல்


சம உயர கோட்டு நடவு


படிக்கட்டு விவசாயம்

## மண் வளத்தை தக்க வைத்தல்


விவசாயக் கழிவு மற்றும் குப்பை

+


நன்மை செய்யும் பூஞ்சைகளும் காளாண்களும்

=


உயிர் உரம்

**தமிழகத்தில் காடு மற்றும் விலங்குகளின் பாதுகாப்பு**

தமிழகத்தில் 17 விழுக்காடு நிலப்பகுதியில் காடுகள் பரவியிருக்கின்றது. மழை நீரை அறுவடை செய்யவும், மண்வளத்தை புதுப்பிக்கவும், நிலத்தடியில் நீரினைத் தேக்கி வைக்கவும், பல உயிரினங்களின் வாழுமிடமாகவும், சுற்றுச்சூழலை நிலைபடுத்தவும் காடுகள் பெரும் பங்கு வகிக்கின்றன. இவையல்லாது காட்டுப் பொருட்களின் உற்பத்தி சீராக அமையவும், நிலத்தின் மூன்றில் ஒரு பங்கு காடுகள் இருக்க வேண்டும்.

அரசு மற்றும் அரசு சாரா நிறுவனங்கள் காடு வளர்க்கும் / காக்கும் திட்டங்கள் பலவற்றை செயல்படுத்தி வருகின்றன. சமூக காடுகள் வளர்ப்பு திட்டத்தின் கீழ் மரங்கள் சாலையோரங்களிலும், இரயில் பாதை ஓரங்களிலும், ஆற்றங்கரையோரங்களிலும், நீர்பிடிப்பு பகுதிகளிலும் வளர்க்கப்படுகிறது. தேர்ந்தெடுக்கப்பட்ட சில பகுதிகளில், சூழல் சமநிலையை பாதுகாக்கவும், உயிரின் வேற்றுமையை காக்கவும் தமிழக அரசு மக்கள் பங்கேற்பு திட்ங்களை செயல்படுத்தி வருகின்றது. தமிழ் நாட்டில் 13 பறவைகள் சரணாலயங்கள், 5 தேசிய பூங்காக்கள் மற்றும் 7 வனவிலங்கு சரணாலயங்கள் உள்ளன. ஆண்டுதோறும் ஆர்டிக் பகுதியிலிருந்து குளிர்காலங்களில் பறவைகள் தமிழ் நாட்டிற்கு இனப்பெருக்கத்திற்காக வந்து தங்கி செல்கின்றன. புலிகளைப் பாதுகாக்க "ப்ராஜெக்ட் டைகர்" ஏற்படுத்தியது போல யானைகளை அழிவிலிருந்து காப்பாற்ற "ப்ராஜெக்ட் யானை" என்ற பாதுகாப்புத் திட்டம் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளது.

தமிழகத்தில் உள்ள பறவைகள் மற்றும் விலங்குகளின் சரணாலயங்கள் பின்வருமாறு

| பெயர் | மாவட்டம் |
|---|---|
| சித்திரங்குடி பறவைகள் சரணாலயம், | இராமநாதபுரம் |
| கஞ்சிராங்குளம் | இராமநாதபுரம் |
| மேலசெல்வனூர் கீழசெல்வனூர் பறவைகள் சரணாலயம் | இராமநாதபுரம் |
| மன்னார் கடல்சார் தேசிய பூங்கா | இராமநாதபுரம் |
| கரைவெட்டி பறவைகள் சரணாலயம் | அரியலூர் |
| கூடங்குளம் பவைகள் சரணாலயம் (மிகப்பெரிய இருப்பு) | திருநெல்வேலி |
| களக்காடு வனவிலங்கு சரணாலயம் | திருநெல்வேலி |
| முண்டந்துரை சரணாலயம் | திருநெல்வேலி |
| கோடியக்கரை பறவைகள் சரணாலயம் (Point Calimere) | தஞ்சாவூர் |
| பழவேற்காடு பறவைகள் சரணாலயம் (Pulicut) | திருவள்ளூர் |
| உதயமார்த்தாண்டபுரம் பறவைகள் சரணாலயம் | திருவாரூர் |
| வடுவூர் பறவைகள் சரணாலயம் | நாகப்பட்டினம் |
| வேடந்தாங்கல் பறவைகள் சரணாலயம் | காஞ்சிபுரம் |
| வெள்ளோடு பறவைகள் சரணாலயம் | ஈரோடு |
| சத்தியமங்கலம் பறவைகள் சரணாலயம் | ஈரோடு |
| வேட்டங்குடி பறவைகள் சரணாலயம் | சிவகங்கை |
| முதுமலை தேசிய பூங்கா | நீலகிரி |
| முக்குறுத்தி தேசிய பூங்கா | நீலகிரி |
| மதுமலை சரணாலயம் | நீலகிரி |
| கிண்டி தேசிய பூங்கா | சென்னை |
| பழனி மலை தேசிய பூங்கா | திண்டுக்கல் |
| சாம்பல் நிற அணில்கள் சரணாலயம் | விருதுநகர் |
| இந்திரா காந்தி வனவிலங்கு சரணாலயம் | கோயம்புத்தூர் |
| கன்னியாகுமரி வனவிலங்கு சரணாலயம் | கன்னியாகுமரி |

## தமிழ்நாடு
## தேசிய பூங்கா, பறவைகள் மற்றும் விலங்குகள் சரணாலயம்

வ



**செயல்பாடு**

உனது பகுதியில் அமைந்துள்ள சரணாலயங்களின் பெயரை கண்டுபிடி. அங்குள்ள பறவைகள், விலங்குகள், தாவரங்களின் பெயர்களைப் பட்டியலிடுக:

## தமிழ் நாட்டின் பறவைகள்

கீழ்காணும் பறவைகள் தமிழ்நாட்டில் உள்ளன. பறவைகளின் பெயர் மற்றும் ஆங்கிலச்சொல்லும் கொடுக்கப்பட்டுள்ளன.

| பறவைகள் | ஆங்கிலப் பெயர் |
|---|---|
| கூழைக்கடா | Spot billed pelican |
| நீர் காகம் | Cormorants |
| உண்ணி கொக்கு | Egrets |
| சாம்பல் நாரை | Grey Heron |
| நாரை | Stork |
| வெள்ளை அறிவாள் மூக்கன் | White Ibis |
| கரண்டி வாயன் | Common spoon bills |
| நாரை | Flamingo |
| கிலுவாய் வாத்து | Teal |
| பெரிய கடல் காகம் | Gulls |
| ஆலா | Terns |
| சின்னக் கோட்டான் | Plovers |
| பவழக்கால் உள்ளான் | Stilts |
| சிறிய நீர்காகம் | Little cormorants |
| பாம்புத்தாரா | Darter |
| காரை கொக்கு | India Reef Heron |
| வெண்கழுத்து வண்ணாத்தி நாரை | White necked stork |
| திணைக் குருவி / நெல் குரவி | Black headed Munia |
| மீன் கொத்தி | King fisher |
| மணிப்புறா | Spotted dove |
| ஊசி வால் வாத்து | Pintail ducks |
| நத்தை கொத்தி நாரை | Asian open bill stork |
| வக்கா | Night Heron |
| பனங்கொட்டை செறவி | Garganey |
| மட்டி மூக்கு செறவி | Shovellers |

இதில் பணங்கொட்டை செறவி, மட்டி மூக்கு செறவி மற்றும் கிலுவாய் வாத்து பிற நாட்டிலிருந்து குளிர்காலத்தில் தமிழ் நாட்டிற்கு வருடந்தோறும் வரும் பறவைகள் கீழ்காணும் விலங்குகள் தமிழ் நாட்டில் காணப்படுகின்றன.



கூழைக்கடா



வண்ண நாரை

| விலங்கு | ஆங்கிலப் பெயர் |
|---|---|
| புலி | Tiger |
| யானை | Elephant |
| வரையாடு | Nilgiri Tahr |
| முயல் | Hare |
| அணில் | Squirrel |
| கடல் பன்றி | Dugong |
| கடல் ஆமைகள் | Sea turtles |
| பணவை மீன் (டால்பின்) | Dolphin |
| புள்ளி மான் | Chital |
| கலை மான் | Black buck |
| சாம்பல்நிற மலை அணில் | Grizzled giant squirrel |
| பறக்கும் அணில் | Flying squirrel |
| மூங்கில் அணைந்தான் | Tree Shrew |
| சிறுத்தை | Panther |
| கரடி | Sloth bear |
| காட்டுப்பன்றி | Wild boar |
| காட்டு நாய் | Dhole |
| நீலிகிரி கருங்குரங்கு | Nilgiri langour |
| சிங்கவால் குரங்கு | Lion-tailed Mecaque |



கரண்டி வாயன்

"சிப்கோ இயக்கம்" போன்று "அபிக்கோ" என்று இயக்கம் கர்நாடக மாநிலத்தில் தொடங்கப்பட்டுள்ளது. இவ்வியக்கம் மேற்கு தொடர்ச்சி மலையிலிருந்து, கிழக்கு தொடர்ச்சிமலை வரை வனப்பாதுகாப்பு இயக்கமாக செயல்படுகிறது. இது ஒரு முழுமையான மக்கள் பங்கேற்பு இயக்கமாகும். இவ்வியக்கத்தின் முக்கிய குறிகோள், எஞ்சியுள்ள அயணமண்டல ஈரக்காடுகளை பாதுகாப்பதாகும். அழியும் நிலையில் உள்ள பகுதிகளை தக்கவைக்கவும், காட்டுப் பொருட்களை சீரான வழியில் சிக்கனமாக உபயோகிக்கவும் காட்டு வளத்தை ஆக்கிரமிப்பு செய்வதால் உண்டாகும் அழுத்தத்தை விடுவிக்கவும் நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டுள்ளது. இவ்வியக்கத்தின் மிக பிரபலமான முழக்க வாசகம் பின்வருமாறு. "பாதுகாக்க, வளர்க்க, விவேகமாக உபயோகிக்க"

இவ்வியக்கத்தால் தென்னிந்திய கிராமப்புறங்களில் அறிமுகப்படுத்தப்பட்ட மாற்று சக்தி ஆதாரங்கள் வீடுகளில் பயன்படுத்தப்படும் விறகுகளின் அளவை சுமார் 40 விழுக்காடு குறைந்துள்ளது.

**உனக்குத் தெரியுமா ?**

1977ஆம் ஆண்டு யுனஸ்கோ நிறுவனம் 'மனிதனும் உயிர் கோளமும்' என்ற திட்டத்தினை உருவாக்கியது. தொடர்புடைய அனைத்து ஆய்வுத் துறைகளை இணைத்து, பயிற்சி அளிப்பதன் மூலம் சூழலை பாதுகாத்து சீரான முறையில் வளங்களை உபயோகப்படுத்தும் வழிமுறைகளை கண்டறிய இத்திட்டம் தொடங்கப்பட்டது. இதன் விளைவாக உலகிலுள்ள 107 நாடுகளில் 553 உயிர்கோள சேமிப்பு மையங்கள் உருவாக்கப்பட்டுள்ளன.

## உயிர்கோள சேமிப்பு பெட்டகங்கள் (Biosphere - reserve)

உயிர்கோள சேமிப்பு பெட்டகம் என்பது ஒரு பாதுகாக்கப்பட்ட பிரத்தியோக புவிப்பகுதிகளின் உலகளாவிய வலை அமைப்பாகும். இவ்வமைப்பு, பாதுகாப்பு முறைக்கும், முன்னேற்றத்திற்கும் உண்டான தொடர்பினை செய்முறையில் நிரூபணம் செய்கின்றது. இவ்வமைப்பின் மாதிரி செயல்பாடு மூன்று பகுதிகளைக் கொண்டது.

1) நன்கு பாதுகாக்கப்பட்ட மையப் பகுதி

2) கல்வி, பயிற்சி மற்றும் ஆராய்ச்சிக்காக பயன்படுத்தப்படும் செயல்பாட்டுப் பகுதி

3) சுற்றுலாவுக்காகவும், பொழுதுபோக்கிற்காகவும் பயன்படுத்தப்படும் மாற்றமடையும் வெளிப்பகுதி.




உயிர்க் கோள சேமிப்பு பெட்டகத்தின் மாதிரி

- மையப்பகுதி
- செயல்பாட்டுப் பகுதி
- மாற்றம் அடையும் செயல்பகுதி
- குடியிருப்பு
- R ஆராய்ச்சி
- E கல்வி / பயிற்சி
- T சுற்றுலா / ஆராய்ச்சி

தமிழ் நாட்டில் மூன்று உயிர்கோள சேமிப்பு பெட்டகப் பகுதிகள் உள்ளன. அவை 1) நீலகிரி 2) மன்னார் வளைகுடா 3) அகஸ்திய மலை ஆகும்.

**உனக்குத் தெரியுமா ?**

அரசு மற்றும் அரசு சாரா அமைப்புகள் தமிழ் நாட்டின் மருத்துவ குணம் கொண்ட செடிகளை பாதுகாக்க முனைந்துள்ளன.

1) வட்டார அரோக்கிய பழக்க வழக்கங்களுக்கு புத்துயிர்பு அளிக்கும் நிறுவனம் (FRLHT - Foundation for Revitatization of Local Health and Tradition)

2) தமிழ் நாடு வனத்துறை

3) டச்சு நாட்டின் உலகளாவிய வளர்ச்சி குழுமம் (DANIDA - Danish Internationl Development Agency)

தமிழக வனத்துறை அரசு சாரா நிறுவனங்களின் உதவியோடு மருத்துவ தாவரங்களைப் பாதுகாக்கும் முயற்சியில் ஈடுபட்டுள்ளது. பாதுகாக்கப்பட வேண்டிய மருத்துவ தாவரங்கள் பகுதிகளை (MPCA- Medicinal Plant Conservation Area) கண்டறிந்து அழிவின் அபாயத்திலிருந்து தாவரங்களை காக்கும் செயலில் ஈடுபட்டுள்ளது. இதற்கென பதினோரு மையங்கள் செயல்படுகின்றன. அவை அமைந்துள்ள இடங்களாவன.

1) அழகர் கோயில்

2) கொடைக்கானல்

3) கொல்லிமலை

4) குரம்பாரம்

5) குற்றாலம்

6) முண்டந்துறை

7) அம்பாசமுத்திரம்

8) பேச்சிப்பாறை

9) தனிப்பாறை

10) தென்மலை மற்றும்

11) டாப் ஸ்லிப்

அழியும் நிலையில் உள்ள தாவர இனங்களை அப்பகுதிவாழ் மக்களின் துணையோடு அபிவிருத்தி செய்யும் மையங்கள் கீழ் காணும் எட்டு இடங்களில் செயல்படுகின்றன (MPDA-Medicinal Plant Development Area).

1) ஆத்தூர்

2) செங்கல்பட்டு

3) கோயம்புத்தூர்

4) தர்மபுரி

5) தொட்டபெட்டா

6) மதுரை

7) சேலம் மற்றும்

8) வேலூர்

**செயல்பாடு**

உனக்குத் தெரிந்த மருத்துவ செடிகளையும் அதன் பயன்பாடுகளையும் எழுதுக.

உதாரணமாக சளியையும், இருமலையும் குணப்படுத்தும், துளசி மருத்துவ குணம் நிறைந்த தாவரமாகும்.

### சதுப்பு நிலப்பாதுகாப்பு

ஆறு அடி ஆழத்தில் நிரந்தரமாகவோ அல்லது தற்காலிகமாகவோ நீர் தேங்கிய பகுதியை சதுப்பு நிலம் எனக்கூறலாம். நிலத்தடி நீரினை வளப்படுத்துதலில் இவ்வகை நிலம் பெரும்பங்கு வகிக்கிறது. சதுப்பு நிலம் நேர்முகமாகவோ, மறைமுகமாகவோ பெரும்பாலான மக்களின் வாழ்க்கைக்கு ஆதாரமாக மட்டுமல்லாது சுற்றியுள்ள பகுதிக்கு பாதுகாப்பாளராக பணியாற்றுகிறது. தமிழ் நாட்டின் சில முக்கிய சதுப்பு நிலங்கள் பின்வருமாறு:

கோடியக்கரை, கழுவேலி (விழுப்புரம் மாவட்டம்), பள்ளிக்கரணை (சென்னை), முத்துப்பேட்டை, பிச்சாவரம் மற்றும் இராமநாதபுரத்தின் சில பகுதிகளாகும். இந்திய அரசு, இச்சதுப்பு நிலங்கள், வளங்களைப் பாதுகாப்பதில் முக்கிய

பங்கிறுப்பதை உணர்ந்து இவற்றைப் பாதுகாக்க தேவையான நடவடிக்கைகளை பரிந்துரைத்துள்ளது.

## நீர்வளப் பாதுகாப்பு

வாழ்க்கைக்கு நீர் ஆதாரமாக உள்ளது. நீர் வளம் மாசுபடாமல், பாதுகாத்தலும் பராமரித்தலும் மிக அவசியமான ஒன்றாகும். நீர் பிரிமேடு (Watershed Management) என்பது அதிக மழைபொழிவின் போதும், ஆறுகள், ஏரிகள் நிரம்பி வழியும் போதும் மட்டுமல்லாது வறண்ட காலங்களிலும் தொடர்ந்து தேவையான நீர் கிடைக்கும்படி செய்வதாகும். வற்றாத நதிகளை வற்றும் நதிகளோடும் ஏனைய நீர்நிலைகளோடும் இணைக்கும் திட்டமானது, இரட்டை பிரச்சனையான வெள்ளப் பெருக்கையும் வரட்சியையும் தீர்க்க உதவும் அறிவு சார்ந்த வழிமுறையாகும்.

## பொதுவாகக் கடைப்பிடிக்கப்படும் நீர்வளப் பாதுகாப்பு முறைகள்

1) நீரை வீணாக்குவது தவிர்க்கப்பட வேண்டும்.

2) மழை நீர் சேமிப்புமுறை, சிறுதடுப்பு அணைகள் கட்டுதல் ஆகியவை, மழைநீர் வீணாவதைத் தடுத்து நிலத்தடி நீர்மட்டத்தை உயர்த்த வழி செய்கின்றன.

3) கழிவு நீரை முடிந்தவரையில் சுத்தகரித்து, குறிப்பிட்ட செயல்களுக்குப் பயன்படுத்துதல்.

4) மரங்களை அதிக அளவில் வளர்த்தால், அவை அதிக அளவில் நீரினை ஈர்த்து நிலத்தடி நீர் மட்டத்தை உயர்த்தி புதுப்பிக்கும்.



### செயல்பாடு

கொடுக்கப்பட்டுள்ள உள்ள படங்களை பார்த்து உன் சகமாணவர்களோடு கலந்துரையாடு:

1) குடிநீரை பணம் கொடுத்து வாங்குகிறாயா ?

2) நீரினை பாதுகாக்க உனக்குத் தெரிந்த வழிகளைப் பட்டியலிடு

3) "மழையைப் பார்ப்பதோடு நிற்காதே! மழைநீரை சேமிக்க மறக்காதே!" போன்ற முழுக்க வாசகங்களை உருவாக்கு

4) தனி மனிதனாக, அனறாட நீர் உபயோகிப்பதை எவ்வகையில் சிக்கனமாக பயன்படுத்தலாம் என்று பட்டியலிடுக.

5) விவசாயத்தில் எவ்வாறு நீர் வீணாவதைத் தடுத்து சீரான முறையில் தாவரங்களுக்கு பாசனத்தை அளிக்கலாம் என்பதை கண்டுபிடி.

6) தொழிற்சாலைகளில் சுத்தகரிக்கப்பட்ட நீரை எவ்வாறு பயன்படுத்தலாம் என்று விவாதித்து அறிந்து கொள்.

## எரிபொருள் பாதுகாப்பு

மரபுவழி எரிபொருள்கள் தீர்ந்து போகும் வளங்களாகும். எனவே புதுப்பிக்க இயலும் எரிபொருள் வளங்களான காற்று, அலைகள், ஓதசக்தி, உயிர்வாயு, உயிர்–எரிசக்தி ஆகியவற்றைப் பயன்படுத்தும் வழிமுறைகளைக் கண்டறிய ஒவ்வொரு



ஆமணக்கு செடியும், விதைகளும்

நாடும் ஆர்வம் காட்டுகின்றன. உயிர்–வாயு வளர்ச்சி திட்டத்தின் மூலம் 2008ஆம் ஆண்டு மார்ச்சு மாத நிலவரப்படி தமிழ் நாட்டில் 1285 உயிர்–வாயு நிலையங்கள் உள்ளன. உயிர் எரிசக்தி உற்பத்தி செய்யும் ஒன்பது மாநிலங்களில், தமிழகம், முதன்மை நிலையில் 5 விழுக்காடு எத்தனால் (Ethonal) கலப்பு வாகன எரிபொருளை 2003 ஆம் ஆண்டிலிருந்து பயன்படுத்துகிறது.

தமிழக வனத்துறை கரஞ்சாவின் (புங்கம்) இருந்து தயாரிக்கும் உயிர்–எரிபொருள் எஸ்ரிபிகேஷன் நிலையங்கள் மூன்று ஒசூரிலும், தூத்துக்குடியிலும் அமைத்துள்ளது. இவை தமிழ்நாடு வேளாண்மை பல்கலைக்கழகம் பரிந்துரைத்துள்ள மாதிரியில் அமைக்கப்பட்டுள்ளன.

**உனக்குத் தெரியுமா ?**

எஸ்டரிபிகேஷன்(Esterification) என்ற பதம் இரு எதிர்மாற்ற செயல்களுக்கு இடையே உண்டான இரசாயண விளைவின் மூலம் உருவாகும் ஒரு பொருளை (ester) குறிக்கின்றது. எஸ்டர் வாசனை திரவிய தொழிற்சாலைகளில், அருமையான வாசனை அளிப்பதால் பயன்படுத்தப்படுகிறது.

காட்டாமணக்கு விதைகளைக் கொண்டு உயிர் எரிசக்தி தயாரிக்கப்படுகிறது. இதுதவிர வேம்பு, கரஞ்சா (புங்கம்) விதைகளில் இருந்தும் உயிர் எரிபொருள் தயாரிக்கப்படுகிறது.

ஓர் பகுதியை வளர்ச்சியடைய தீட்டப்படும் எந்தவொரு வளர்ச்சித் திட்டமும், தற்போதைய தேவைகளைப் பூர்த்தி செய்வதை மட்டும் நோக்கமாக கொள்ளாமல், எதிர்கால தலைமுறையினரின் வள உரிமை பாதுகாப்பையும் மனதில் கொள்ள வேண்டும். இத்தகைய வளர்ச்சித் திட்டங்களே நிலைப்படுத்தப்பட்ட வளர்ச்சிக்கு (Sustainable Development) வழிவகுக்கும்.

பாதுகாத்தலும், பராமரித்தாலும் இயற்கை பகுதிகளுக்கும் வளங்களுக்கும் மட்டும் அல்லாது, நகரங்களின் மிகப் பெரிய கட்டுமான பகுதிகளுக்கும் அவசியமாகிறது. சூழலை பாதிக்காத கட்டுமான பொருட்களும், கட்டிடம் கட்டும் முறைகளும் தற்போது சந்தையில்



புழக்கத்தில் வரத் தொடங்கியுள்ளது. இவை மனிதன் தன் சௌகரியங்களைத் தியாகம் செய்யாது, இயற்கை வளங்களைப் பாதுகாக்க வழிவகுக்கின்றன.

முடிவாக இயற்கை அளித்த கொடையான வளங்களை எதிர்காலத் தலைமுறையினரிடம் மிகக்குறைந்த அளவிலான பாதிப்போடு கொண்டு சேர்ப்பதை முக்கிய குறிக்கோளாகக் கொண்டு செயல்பட வேண்டும்.

## பயிற்சி

### அ. சரியான விடையை தேர்ந்தெடு.

1. தமிழ் நாட்டின் கம்பம் பள்ளத்தாக்கில் __________ வகை மண் அரிப்பு ஏற்படுகிறது.

   அ) காற்று  ஆ) ஆறு  இ) பனியாறு  ஈ) அலை

2. காட்டுப் பொருள்கள் சீராகக் கிடைக்க ஒரு பகுதியில்__________ பங்கு காடுகளாக இருக்க வேண்டும்.

அ) நான்கில் மூன்று ஆ) மூன்றில் இரண்டு

இ) மூன்றில் ஒன்று ஈ) ஐந்தில் ஒன்று

3. விலங்குகளை வளர்த்து வருடத்தின் ஒரு பருவத்தில் மட்டுமே அதன் ரோமங்களை எடுத்து உபயோகித்தல்__________ஆகும்.

அ) பாதுகாத்தல் ஆ) பராமரித்தல் இ) காப்பாற்றுதல் ஈ) அழித்தல்

4. விலங்குகளை அதன் வாழும் இடத்திலேயே பாதுகாத்தல்__________ஆகும்.

அ) பராமரித்தல் ஆ) சரணாலயம்

இ) பூங்கா ஈ) மிருக காட்சிசாலை

5. பனங்கொட்டை செறவி, கிலுவாய் வாத்து மற்றும் மட்டி மூக்கு செறவி ஆகியவை__________ பறவைகள்

அ) இடம் விட்டு இடம் பெயரும் ஆ) சுதேசி இ) வட்டாரம் ஈ) உள்நாடு

## ஆ. பொருத்துக.

| | |
|---|---|
| 1. மன்னார் வளைகுடா | புலிப் பாதுகாப்பகம் |
| 2. கோடியக்கரை | யானைப் பாதுகாப்பகம் |
| 3. அகத்திய மலை | கடல்சார் பூங்கா |
| 4. முதுமலை | பறவைகள் சரணாலயம் |
| 5. முண்டந்துரை | உயிர்கோளச் சேமிப்பு பெட்டகம் |
| | பாதுகாக்கப்பட்ட காடுகள் |
| | அணில் சரணாலயம் |

## இ. குறு விடை தருக.

1. எல்லா வளங்களையும் ஏன் பாதுகாத்து பராமரிக்க வேண்டும்?
2. பாதுகாத்தல், பராமரிஙத்தல் – வேறுபடுத்திக் காட்டுக
3. பாதுகாக்கப்பட வேண்டிய மருத்துவ தாவரப்பகுதி (MPCA) மருத்துவ தாவர அபிவிருத்தி பகுதி (MPDA) – வேறுபடுத்திக்காட்டுக.
4. நிலைப்படுத்தப்பட்ட முன்னேற்றம் என்பதை வரையறு.

## ஈ. ஒரு பத்தியில் விடை தருக.

1. நீர்வளப் பாதுகாப்பு பொதுவாக கையாளப்படும் முறைகளை எழுதுக.
2. மண்வளப் பாதுகாப்பு முறைகளைப் பற்றி எழுதுக.
3. அப்பிகோ இயக்கம் பற்றி விவரி.
4. உயிர் கோள் சேமிப்பு பெட்டகத்தை விவரித்து எழுதுக.

## உ. கொடுக்கப்பட்டுள்ள வரைபடத்தில் தமிழ் நாட்டின் பறவை சரணாலயங்கள், தேசிய பூங்கா, உயிர்கோள் சேமிப்பு பெட்டகங்கள் ஆகியவற்றை குறி.

# குடிமையியல்

## நாம் எவ்வாறு ஆளப்படுகிறோம் ?

இந்திய அரசியலமைப்பை உருவாக்கிய சிற்பிகள், இந்தியாவின் பரந்த மற்றும் பன்முகத் தன்மையை கருதில் கொண்டு , கூட்டாட்சி முறையை வழங்கி, இந்திய நிர்வாக முறையை அங்கீகரித்தனர். இருப்பினும் கூட்டாட்சியைத் தவிர்க்க, மாநிலங்களை உள்ளடக்கி மைய அமைப்பை ஏற்படுத்தியுள்ளனர், கூட்டாட்சி முறையில் இருவகையான அரசுகளையும் – மைய அரசு, மாநில அரசு என்றும், இருவகையான சட்ட மன்றங்களையும் , மத்திய சட்டமன்றம் மற்றும் மாநில சட்ட மன்றம் என்றும் ஏற்படுத்தியுள்ளனர். இருப்பினும் உச்ச நீதிமன்றத்தின் கீழ் ஒரே முறையான நீதி அமைப்பை ஏற்படுத்தியுள்ளனர். இந்திய அரசியலமைப்பில் இரண்டு அரசுகளின் அதிகாரங்கள் மற்றும் பொறுப்புகள் 1)மையப்பட்டியல், 2)மாநிலப்பட்டியல், 3) பொதுப்பட்டியல் என மூன்று பட்டியல்களாக வரையறுக்கப்பட்டுள்ளன. எனவே இந்திய அரசு எவ்வாறு ஆளப்படுகிறது என்பதை அறிந்துகொள்ள வேண்டுமானால் மைய, மாநில அரசு நிருவாக முறையை ஒவ்வொருவரும் தெளிவாக புரிந்து கொள்ள வேண்டும்.

# 1. மத்திய அரசு



இந்திய அரசியலமைப்புச் சட்டம் தேர்ந்தெடுக்கப்பட்ட குடியரசுத் தலைவர் தலைமையில் பாராளுமன்ற அரசு அமைய வழி வகுக்கிறது, இவ்வரசு சட்ட மன்றம், நிருவாகம், நீதித்துறை என மூன்று அங்கங்களைக் கொண்டது.

## இந்திய நாடாளுமன்றம்

நாடாளுமன்றம், மத்திய அரசின் சட்டமன்றத்தைக் குறிக்கும். இது மேல்சபை, கீழ்சபை என இரு சபைகளைக் கொண்டது. மேல் சபையை மாநிலங்கள் அவை அல்லது ராஜ்ய சபை என்றும், கீழ் சபையை மக்களவை அல்லது லோக் சபை என்றும் அழைக்கிறோம்.



## மக்களவை (லோக் சபை)

நாடாளுமன்றத்தின், கீழ் அவையான லோக் சபை அல்லது மக்களவை முக்கியத்துவம் வாய்ந்த சபையாகும். இச்சபை உறுப்பினர்களை மக்கள் நேரடியாகத் தேர்ந்தெடுக்கின்றனர். தற்போது உள்ள மக்களவையில் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களின் எண்ணிக்கை 543 ஆகும்.இதில்பல்வேறு மாநிலங்களிலிருந்து 530 உறுப்பினர்களும், யூனியன் பிரதேசங்களிலிருந்து 13 உறுப்பினர்களும் மக்களால் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். குடியரசு தலைவர் இரண்டு ஆங்கிலோ– இந்திய சமுதாயத்தினரை உறுப்பினராக நியமனம் செய்கிறார். இவ்வாறு மொத்தம் 545 உறுப்பினர்களைக் கொண்டது மக்களவை.



நாடாளுமன்றம்

**தெரிந்துகொள்**

1. தற்போதைய லோக்சபையின் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களின் எண்ணிக்கை 543 மற்றும் 2 ஆங்கிலோ – இந்தியர்கள் குடியரசுத் தலைவரால் நியமிக்கப்பட்டுகின்றனர்.

2. நாட்டின் எப்பகுதியிலிருந்தும் மக்களவை தேர்தலில் வேட்பாளராக போட்டியிடமுடியும்.

## தகுதிகள்

மக்களவை தேர்தலில் போட்டியிட கீழ்க்கண்ட தகுதிகளைப் பெற்றிருக்க வேண்டும்.

- இந்திய குடிமகனாக இருக்க வேண்டும்.
- 25 வயது நிரம்பியவராக இருக்க வேண்டும்.
- மத்திய மாநில அரசுப் பணியில் சம்பளம் பெறுபவராக இருக்கக் கூடாது.
- மனவளர்ச்சி குறைந்தவர்களும், பெற்ற கடனை திருப்பித்தர முடியாதவர்களும் போட்டியிட முடியாது.

## பதவிக்காலம்

பொதுவாக, மக்களவை முதல் கூட்டத்தொடர் தொடங்கிய நாளிலிருந்து ஐந்து ஆண்டு காலத்திற்கு செயல்படலாம். பிரதமமந்திரியின் பரிந்துரையின் அடிப்படையிலோ அல்லது எந்த ஒரு கட்சிக்கும் பெரும்பான்மை இல்லாத நிலையிலோ குடியரசுத் தலைவர் மக்களவையை கலைக்கலாம்.

## தேர்தல் முறை

மக்களவை உறுப்பினர்கள் மக்கள் தொகையின் அடிப்படையில் மக்களால் நேரடியாக தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். தேர்தல் ஆணையம் தேர்தலை நடத்துவதற்கான ஆயத்தப் பணிகளை மேற்கொண்டு, தனது மேற்பார்வையில் தேர்தலை நடத்துகிறது. மக்கள் தொகையின் அடிப்படையில் தொகுதிகள் நிர்ணயம் செய்யப்பட்டு மக்களவைக்கு தேர்தல் நடத்தப்படுகிறது. வயது வந்தோருக்கு வாக்குரிமை என்ற அடிப்படையில், 18 வயது நிரம்பிய ஆண்கள் மற்றும் பெண்களுக்கு வாக்குரிமை அளிக்கப்படுகிறது. மக்களால் நேரிடியாகத் தேர்ந்தெடுக்கப்படுவதால், மாநிலங்களவை உறுப்பினர்களை விட இவர்களுக்கு அதிக அதிகாரங்கள் உண்டு. நிதி மசோதாக்கள் மக்களவையில் மட்டுமே கொண்டு வரமுடியும். அமைச்சர்கள் அவைரும் கூட்டாகவும், தனித்தனியாகவும் லோக்சபைக்கு பொறுப்புடையவர்கள். மக்களவையின் தலைவர் சபாநாயகர். அவர் மக்களவை உறுப்பினர்களால்

தேர்ந்தெடுக்கப்படுகிறார். சபாநாயகர் இல்லாத காலங்களில் லோக்சபையால் தேர்ந்தெடுக்கப்பட்ட துணை சபாநாயகர் அவையை நடத்துவார்.

தற்போதைய மக்களவை பெண் தலைவர் யார் ?



திருமதி. மீரா குமார்

## ராஜ்ய சபை அல்லது மாநிலங்களவை

மாநிலங்களவை 250 உறுப்பினர்களைக் கொண்டது. இவர்களில் 238 உறுப்பினர்கள் மாநிலங்கள் மற்றும் யூனியன் பிரதேசங்களிலிருந்து மறைமுகமாக தேர்ந்தெக்கப்படுகின்றனர். இலக்கியம், அறிவியல், கலை மற்றும் சமூகச் சேவை ஆகிய துறைகளில் சிறப்பு அறிவும், நடைமுறை அனுபவமுடைய 12 உறுப்பினர்கள் குடியரசுத் தலைவரால் நேரடியாக நியமிக்கப்படுகின்றனர்.

**தெரிந்துகொள்**

1) 250 உறுப்பினர்கள் மட்டுமே ராஜ்யசபை உறுப்பினர்கள்.

2) 12 உறுப்பினர்களுக்கும் மேல் குடியரசுத் தலைவர் நியமிக்கலாம்.

## தகுதிகள்

⇨ ராஜ்ய சபை உறுப்பினராக வேண்டிய தகுதிகள்

⇨ இந்திய குடிமகனாக இருத்தல் வேண்டும்.

⇨ 30 வயது நிரம்பியவராக இருத்தல் வேண்டும்.

⇨ நாடாளுமன்றத் தொகுதியில் வாக்காளராகப் பதிவு செய்யப்பட்டிருக்க வேண்டும்.

⇨ மத்திய மாநில அரசு ஊழியராக இருத்தல் கூடாது.

⇨ மக்களவை உறுப்பினராக இருக்கக் கூடாது.

⇨ மனநிலை சரியில்லாதவராகவோ அல்லது பெற்றக் கடனை திருப்பித்தர இயலாதவராகவோ இருத்தல் கூடாது.




மாநிலங்களவை

## பதவிக்காலம்

மாநிலங்களவை ஒரு நிரந்தர அவையாகும். இதனைக் கலைக்க முடியாது. மாநிலங்களவை உறுப்பினர்களின் பதவிக் காலம் 6 ஆண்டுகளாகும். ஆனால் இதன் உறுப்பினர்களில் மூன்றில் ஒரு பகுதியினர் (1/3) ஒவ்வொரு இரண்டு ஆண்டுக்கு பிறகு ஓய்வு பெறுகின்றனர். குடியரசுத் துணைத் தலைவர், மாநிலங்களவைத் தலைவர் ஆவார். மாநிலங்களவை உறுப்பினர்களால் குடியரசுத் துணைத் தலைவர் தேர்ந்தெடுக்கப்படுகிறார்.

தற்போதைய மாநிலங்களவை தலைவர் மற்றும் துணைத் தலைவர் யார் ?

## தேர்தல்

மாநில சட்டப்பேரவைக்கு தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள், மாநிலங்களவை உறுப்பினர்களை ஒற்றை மாற்று வாக்கு முறை மூலம் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். இது மறைமுகத் தேர்தல் என்று

அழைக்கப்படுகிறது. ஒவ்வொரு மாநிலத்தின் மக்கள் தொகையின் எண்ணிக்கைக்கேற்ப தேர்ந்தெடுக்கப்பட வேண்டிய ராஜ்ய சபை உறுப்பினர்கள் எண்ணிக்கை தீர்மானிக்கப்படுகிறது.

### நாடாளுமன்றத்தின் அதிகாரங்கள் மற்றும் பணிகள்

நாடாளுமன்றம் மாநிலங்களவை, மக்களவை என இரு அவைகளைக் கொண்டது. எனவே இந்திய நாடாளுமன்றம் ஈரவை மன்ற முறையைச் சார்ந்தது. இதன் முக்கியமானப் பணி, சீரிய முறையில் ஆட்சி நடப்பதற்கான சட்டமியற்றுதல் ஆகும். நாட்டின் அமைதி, பாதுகாப்பு மற்றும் வளர்ச்சிக்காக இச்சட்டங்கள் இயற்றப்படுகிறது. நாடாளுமன்றம் நாட்டின் நிதி நிலமைக்கு முழு பொறுப்பாகும். மைய வரவு செலவு திட்டங்களை தாக்கல் செய்வதும், வரி நிர்ணயம் செய்வதும் இதன் பணிகள் ஆகும். பல்வேறு அரசுத் துறைகளுக்கு நிதியைப் பகிர்ந்தளிப்பதும் அதன் பொறுப்பாகும். அரசியலமைப்பு சட்டவிதிகளைத் திருத்தம் செய்வதும், குடியரசுத் தலைவர் மற்றும் உச்சநீதிமன்ற நீதிபதிகள் மற்றும் உயர் அரசியலமைப்பு அதிகாரங்கள் மீதான குற்றச்சாட்டுகளை விசாரித்து குற்றச்சாட்டுகள் நிரூபிக்கப்பட்டால் பதவி நீக்கம் செய்யும் அதிகாரத்தையும் நாடாளுமன்றம் பெற்றுள்ளது. எந்த ஒரு மாநிலத்தின் மீதும் நெருக்கடி நிலைப் பிரகடனம் செய்யவும் குடியரசுத் தலைவரை நாடாளுமன்றம் அனுமதிக்கிறது. அமைச்சரவையின் செயல்பாட்டினைக் கண்காணிக்கவும், மதிப்பீடு செய்யவும் கட்டுப்படுத்தவும் நாடாளுமன்றத்திற்கு உரிமை உள்ளது. நாடாளுமன்றத்தில் நம்பிக்கை உள்ளவரைதான் எந்த அமைச்சரவையும் செயல்பட முடியும்.

### நிருவாக அதிகாரம்

மைய நிருவாகம் என்பது குடியரசுத் தலைவர், பிரதமர் மற்றும் அமைச்சரவை ஆகியவர்களைக் கொண்டதாகும். குடியரசுத் தலைவர் நாட்டின் நிருவாகத் தலைவராவார். குடியரசுத் தலைவரின் நிருவாகப்பொறுப்புகள் பிரதமர் தலைமையில் அமைந்துள்ள அமைச்சரவையிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளது. மக்களவையில் பெரும்பான்மைபெற்ற கட்சித் தலைவர் அல்லது கூட்டணிகட்சிகளின் தலைவரை பிரதமராக குடியரசுத் தலைவர் நியமனம் செய்கிறார்.

### இந்திய குடியரசுத் தலைவர்

இந்திய அரசியலமைப்பின்படி, குடியரசுத் தலைவர், இந்தியக் குடியரசின் தலைவராகவும், இந்திய ஒன்றியத்தின் (யூனியன்) நிருவாகத் தலைவராகவும் விளங்குகிறார். மேலும் நீதித்துறைக்கும் பொறுப்புடையவராவார். 53–வது அரசியிலமைப்புச் சட்டத்தின்படி, மத்திய அரசாங்கத்தின் அதிகாரங்கள் அனைத்தும் குடியரசுத் தலைவரிடமே உள்ளன. இவ்வதிகாரங்களை இவர் நேரிடையாகவோ அல்லது அவர் கீழ் இயங்கும் அலுவலர்கள் மூலமாகவோ செயல்படுத்தலாம்.



திருமதி. பிரதீபா தேவி சிங் பட்டேல்

## குடியரசுத் தலைவருக்கான தகுதிகள்

⇨இந்திய குடிமகனாக இருக்க வேண்டும்.

⇨35 வயது நிறைந்தவராக இருக்க வேண்டும்.

⇨லோக் சபை என அழைக்கப்படும் மக்களவைக்கு தேர்ந்தெடுக்கக் கூடிய தகுதி உடையவராக இருக்க வேண்டும்.

⇨மத்திய, மாநில மற்றும் உள்ளாட்சி அமைப்புகளில் ஊதியம் பெறும் பதவி வகித்தல் கூடாது.

⇨நாடாளுமன்றத்தில் இரு அவைகளிலும், மாநில சட்ட மன்ற அவைகளிலும் உறுப்பினராக இருத்தல் கூடாது. அப்படி உறுப்பினராக இருந்தால் குடியரசு தலைவர் தேர்வுக்கு முன்னர் விலகிவிட வேண்டும்.

### தேர்தல்

விகிதாச்சார பிரதிநிதித்துவ முறையைப் பின்பற்றி ஒற்றை மாற்று வாக்கு முறையில் தேர்வாளர் குழுவால் குடியரசுத் தலைவர் தேர்ந்தெடுக்கப்படுகிறார். இத்தேர்வாளர் குழுவில் நாடாளுமன்ற இரு அவைகளின் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள், மற்றும் மாநிலச் சட்ட பேரவைக்கு தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள் இடம்பெற்றிருப்பர். பதவிக்காலம் முடியும் முன்னரே குற்ற விசாரணை மூலமாக இவரை பதவி நீக்கம் செய்ய நாடாளுமன்றத்தினால் முடியும் (சட்டத்திருத்தம் 61). குடியரசுத் தலைவர் பதவிக்காலம் 5 ஆண்டுகள் ஆகும். அவர் மீண்டும் ஒரு முறை குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட தகுதியுடையவராவார். இவர் பதவி விலக விரும்பினால் தனது ராஜினாமா கடிதத்தைத் குடியரசுத் துணைக் தலைவருக்கு அனுப்ப வேண்டும். குடியரசுத் துணைத் தலைவர் மக்களவைத் தலைவருக்கு உடனடியாக குடியரசுத் தலைவர் ராஜினாமாவைப் பற்றி அறிவிப்பார்.

## தேர்வாளர் குழு

லோக் சபா உறுப்பினர்கள்

ராஜ்ய சபா உறுப்பினர்கள்

குடியரசுத் தலைவரின் பணிகள்

குடியரசுத் தலைவரின் பணிகள் இரண்டு வகையாகப் பிரிக்கப்படுகிறது. அவை,

நிருவாகப் பணிகள்.

நெருக்கடிக் கால அதிகாரங்கள்.

சாதாரண காலங்களில் குடியரசுத் தலைவர் கீழ்க்கண்ட நிருவாகப்பணிகள் மேற்கொள்வார்.

1. நிருவாக அதிகாரங்கள்
2. சட்டமன்ற அதிகாரங்கள்
3. நிதி அதிகாரங்கள்
4. நீதித்துறை அதிகாரங்கள்
5. இராணுவ அதிகாரங்கள்
6. நெருக்கடிக்கால அதிகாரங்கள்

## நிருவாக அதிகாரங்கள்

இந்திய குடியரசுத் தலைவர் நாட்டின் நிருவாகத் தலைவராவார். நாட்டின் நிருவாகம் இவரது பெயரால் மேற்கொள்ளப்படுகிறது. பாராளுமன்றத்தில் கொண்டுவரப்படும் அனைத்துச் சட்டங்களும் இவரது ஒப்புதல் பெற்ற பின்னரே சட்டமாக வெளிவரும். பல்வேறு உயர் பதவிகளை இவரே நியமனம் செய்கிறார். பிரதம அமைச்சரை நியமனம் செய்கிறார். அவரது ஆலோனை பேரில் மற்ற அமைச்சர்களை நியமிக்கிறார். உச்ச நீதிமன்ற தலைமை நீதிபதி மற்றும் பிற நீதிபதிகளையும், உயர் நீதிமன்ற தலைமை நீதிபதி மற்றும் பிறநீதிபதிகளையும் நியமனம் செய்கிறார். தேர்தல் ஆணையத்தின் தலைவரையும் , அட்டார்னி ஜெனரல் மற்றும் தணிக்கைக்குழு தலைவரையும் தேர்ந்தெடுக்கிறார்.மத்திய பணியாளர் தேர்வாணையத்தின் தலைவர் மற்றும் உறுப்பினர்களையும், ராணுவ படைத் தளபதிகளையும் நியமனம் செய்கிறார்.

முப்படைகளுக்கும் தலைவராகவும் விளங்குகிறார்.

### சட்டமன்ற அதிகாரங்கள்

மத்திய நாடாளுமன்றத்தின் தலைவராக விளங்குகிறார். நாடாளுமன்றத்தின் இரு சபைகளை கூட்டவும், தொடர்ந்து நடத்தவும், கலைக்கவும் இவருக்கு மட்டுமே அதிகாரம் உண்டு. முதல் நாடாளுமன்றத்தின் கூட்டத்தை துவக்கி அதில் உரை நிகழ்த்துகிறார்.

நாடாளுமன்றத்தில் நிறைவேற்றப்படும் எந்தவொரு மசோதாவும், இவரது இசைவு பெற்ற பின்னரே சட்டமாகிறது. பண மசோதா இவரது முன் அனுமதி பெற்றே நாடாளுமன்றத்தில் தாக்கல் செய்யப்படுகிறது.

கலை, அறிவியல், இலக்கியம் மற்றும் சமூகச் சேவை போன்றத்துறைகளில் சிறப்புப் பெற்றவர்களில், 12 உறுப்பினர்களை ராஜ்ய சபைக்கு நியமனம் செய்கிறார்.

### நீதித்துறை அதிகாரங்கள்

குடியரசுத் தலைவர் எந்த ஒரு நீதிமன்றத்திற்கும் கட்டுப்பட்டவர் அல்ல. எனினும் பாராளுமன்றத்தில் அரசியல் குற்றச்சாட்டுகளுக்கு உட்படுத்தலாம். குற்றவாளிகளின் தண்டனைகளை கூட்டவோ, குறைக்கவோ அல்லது தள்ளுபடி செய்யவோ இவருக்கு மட்டுமே அதிகாரம் உண்டு. மரணதண்டனையைக் கூட இவர் தள்ளுபடி செய்யலாம்.

### நிதித்துறை அதிகாரங்கள்

நாட்டின் நிதிக்கு குடியரசுத்தலைவரே முழுப் பொறுப்பாவார். இவரது பரிந்துரையில்லாமல் எந்த ஒரு நிதி மசோதாவும் நாடாளுமன்றத்தில் அறிமுகப்படுத்த முடியாது. ஆண்டு வரவு–செலவு கணக்கு இவரது அனுமதியுடன் நாடாளுமன்றத்தில், மத்திய நிதி அமைச்சரால் தாக்கல் செய்யப்படுகிறது. எதிர்பாராச் செலவு நிதியிலிருந்து செலவழிக்கும் உரிமையை குடியரசுத்தலைவருக்கு வழங்கப்பட்டுள்ளது. அவர் அந்நிதியிலிருந்து நாடாளுமன்றத்தில் இறுதி அங்கீகாரம் பெறும் முன்னர், அரசின் எதிர்பாராச் செலவுகளைச் சமாளிக்க அரசுக்கு முன் பணம் வழங்க அதிகாரம் பெற்றுள்ளார்.

### நெருக்கடி நிலை அதிகாரங்கள்

இந்திய நிலைமைகளை சமாளிக்க குடியரசுத் தலைருக்கு சிறப்பு அதிகாரங்கள் வழங்கப்பட்டுள்ளது. அவை, "நெருக்கடி நிலைஅதிகாரங்கள்" என்றழைக்கப்படுகின்றது. மூன்று நெருக்கடி நிலை அதிகாரங்களை குடியரசுத் தலைவர் பெற்றுத் திகழ்கிறார்.

### தேசிய நெருக்கடி நிலை

இந்தியாவின் பாதுகாப்பிற்கு அச்சுறுத்தல், போர், அயல்நாட்டுப் படையெடுப்பு மற்றும் ராணுவ கிளர்ச்சியால் ஏற்படும்போது அதனை சமாளிப்பதற்கு இந்திய அரசியலமைப்பு சட்டம் 352–வது பிரிவு வழிசெய்கிறது. இதன் மூலம் குடியரசுத் தலைவர் நெருக்கடி நிலையை அறிவித்து நாட்டை பாதுகாக்க முடியும்.

### அரசு நெருக்கடி

ஒரு மாநிலத்தில், மாநில அரசு, அரசியலமைப்பு சட்டத்தை மீறி செயல்படும்போது அந்த மாநிலத்தில் நெருக்கடி நிலைமையை கொண்டு வர இந்திய அரசியலமைப்புச் சட்டம் 356–வது பிரிவு வழி செய்கிறது. இதன்படி மாநிலத்தில் நெருக்கடி நிலை அறிவிக்கப்பட்டு, மாநில நிருவாகத்தை ஏற்றுக்கொள்கிறார்.

### நிதி நெருக்கடி

இந்தியாவின் பொருளாதாரத்திற்கு நெருக்கடி தோன்றினால், அதனை சமாளிப்பதற்கு இந்திய அரசியலமைப்புச் சட்டம் 360–வது பிரிவு வழிசெய்கிறது. இதன்படி நாடு முழுவதும் அல்லது ஏதாவது ஒரு பகுதியிலோ நெருக்கடி நிலைமை அறிவிக்கப்படுகிறது.

## குடியரசுத் துணைத் தலைவர்

இந்திய அரசியலமைப்புச் சட்டம் 63 வது பிரிவு குடியரசுத் துணைத் தலைவர் பதவிக்கு வழி செய்கிறது. இவர் நாடாளுமன்ற உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப்படுகிறார்.



திரு. எச். ஹமீது அன்சாரி

குடியரசுத் தலைவர் உடல் நலக் குறைவால் தனது கடமைகளை ஆற்ற இயலாத போதும், அல்லது நாட்டில் இல்லாத போதும் குடியரசு துணைத் தலைவர், குடியரசுத் தலைவரின் பணிகளைமேற்கொள்வார். குடியரசுத் தலைவர் பதவி விலகினால், இறப்பு அல்லது குற்றச்சாட்டு மூலம் பதவி காலியாகும் போதும் அவரது பணிகளை மேற்கொள்வார்.

குடியரசுத் தலைவராவதற்குரிய தகுதிகள் அனைத்தும் குடியரசுத் துணைத் தலைவர் ஆவதற்கு இருக்க வேண்டும்.

குடியரசுத் துணைத்தலைவரின் பதவிக்காலம் 5 ஆண்டுகள். குடியரசுத் தலைவர் பதவி காலியாகும் போது, அதிகபட்சம் 6 மாத காலத்திற்கு குடியரசு தலைவர் பொறுப்பை வகிக்கலாம்.

குடியரசுத் தலைவருக்கு அடுத்தபடியாக, குடியரசுத் துணைத் தலைவர் இரண்டாவது இடத்தைப் பெற்றுத்திகழ்கிறார். இவருக்கு தனிப்பட்ட பணிகள் வரையறுக்கப்படவில்லை. இவர் ராஜ்ய சபையின் தலைவராக செயல்படுகிறார். குடியரசுத் தலைவரின் பதவி விலகல் (ராஜினாமா), இறப்பு அல்லது நீக்கம் ஏற்படும் போது, புதிய குடியரசுத் தலைவர் தேர்ந்தெடுக்கும் வரை அவரது பணிகளை மேற்கொள்கிறார்.

## பிரதம மந்திரி

இங்கிலாந்து நாட்டு முறையைப் பின்பற்றி, இந்திய அரசியலமைப்புச் சட்டம் பிரதம அமைச்சரின் தலைமையிலான நிர்வாக அமைப்பைத் தந்துள்ளது. இந்திய அரசியலமைப்புச் சட்டத்தின் படி மக்களவையில் பெரும்பான்மை பெற்றுள்ள கட்சியின் தலைவரை பிரதம அமைச்சராக, குடியரசுத் தலைவர் நியமனம் செய்கிறார். பிரதம அமைச்சரின் ஆலோசனைப் பேரில் அவரது அமைச்சரவை நியமனம் செய்யப்படுகிறது. பிரதம அமைச்சரே அமைச்சரவையின் தலைவராக



ஜவர்ஹலால் நேரு



டாக்டர். மன்மோகன் சிங்

செயல்படுகிறார். பிரதம அமைச்சர், அமைச்சர்களுக்கு துறைகளை ஒதுக்கீடு செய்து, அவர்களின் பணிகளை மேற்பார்வையிடுகிறார். அரசின் நடவடிக்கைகளை பிரதமரின் தலையில் அமைந்த அமைச்சரவை நிறைவேற்றுகிறது. எனவே இவர் அரசியல் தலைவர் என போற்றப்படுகிறார். மேலும், அரசின் நிதிக்குழு, தேசிய ஒற்றுமைக்குழு, திட்டக்குழு போன்றவற்றிற்கும் தலைவராக விளங்குகிறார்.

## அமைச்சரவை

அரசியலமைப்புச் சட்டத்தில் அமைச்சரவையில் அமைச்சர்களின் எண்ணிக்கை வரையறுக்கப்படவில்லை. பிரதமரின் ஆலோசனைப்படி மூன்று வகையான தகுதிகளில் அமைச்சர்கள் நியமிக்கப்படுகின்றனர்.

1. கேபினெட் அல்லது அமைச்சரவை அமைச்சர்கள்
2. ராஜாங்க அமைச்சர்கள்
3. இணை அமைச்சர்கள்

1. கேபினெட் அமைச்சர்கள்

கேபினெட் அமைச்சர்கள் அரசின் கொள்கைகளை வகுப்பவர்களாகவும், அரசின் பல்வேறு துறைகளைத் தலைமையேற்று நடத்துபவர்களாகவும் திகழ்கின்றனர். அவர்கள் தங்களுக்கு அளிக்கப்பட்ட அரசுத் துறைகளின் தலைமை நிருவாகிகளாக இருக்கின்றனர். முக்கியமான துறைகளான நிதி, உள்நாட்டு விவகாரம், வெளிநாட்டு விவகாரம், இரயில் போக்குவரத்து போன்றவற்றை இவர்களின் பொறுப்பில் ஒதுக்கப்பட்டுள்ளது.

## 2. ராஜாங்க அமைச்சர்கள்

ராஜாங்க அமைச்சர்கள் பல்வேறு துறைகள் அல்லது இலாக்காகளுக்கு பொறுப்பாளராக திகழ்கின்றனர். இவர்கள் சிறப்பு விருந்தினராக அழைக்கப்பட்டாலொழிய கேபினெட் கூட்டங்களில் கலந்துக் கொள்ள முடியாது.

## 3. இணை அமைச்சர்கள்

இவர்கள் கேபினட் மற்றும் ராஜாங்க அமைச்சர்களுக்கு உதவியாக அமைச்சகங்களில் செயல்படுகின்றனர்.

## நீதித்துறை

உச்ச நீதிமன்றத்தை தலையாய நீதிமன்றமாகக் கொண்ட சுதந்திரமான, ஒருங்கிணைக்கப்பட்ட நீதித்துறை ஒன்றினை நமது அரசியலமைப்பு ஏற்படுத்தியுள்ளது. இந்த நீதித்துறை மத்திய, மாநில அரசுகளின் சட்டம் மற்றும் நிருவாகப் பிரிவுகளின் தலையீடுகளில்லாமல் சுதந்திரமாக இயங்குவதாகும். ஒருங்கிணைக்கப்பட்ட நீதித்துறை என்பது நாடு முழுவதும் பல அடுக்குகளிலுள்ள நீதி மன்றங்கள் அனைத்தும் ஒரே அமைப்பின் கீழ் செயல்படுவது என்று பொருள்படும். குடிமக்களின் உரிமைகளையும் சுதந்திரத்தையும் பாதுகாப்பதில் நீதித்துறை முக்கிய பங்கு வகிக்கிறது. அது மட்டுமன்றி, அரசியலமைப்பு விதிகளை விளக்குவதிலும், நிருவாக, சட்டமன்றத் தலையீடுகளிலிருந்து அரசியலமைப்பின் அடிப்படைக் கட்டமைப்பைப் பாதுகாப்பதிலும், நீதித்துறை முக்கியப் பங்காற்றுகிறது.



உச்சநீதி மன்றம்

## உச்சநீதிமன்றத்தின் அமைப்பு

1950 ஆம் ஆண்டு இந்திய அரசியல் அமைப்பு சட்டம் நடைமுறைக்கு வந்த போது, உச்ச நீதிமன்றத்தில், ஒரு தலைமை நீதிபதி உட்பட எட்டு நீதிபதிகள் இடம்பெற்றிருந்தனர். தற்சமயம் உச்ச

நீதிமன்றத்தில் தலைமை நீதிபதி உட்பட 26 நீதிபதிகள் இடம் பெற்றுள்ளனர்.

### உச்சநீதிமன்ற நீதிபதிகள் நியமனம்

உச்சநீதிமன்றத்தின் தலைமை நீதிபதியை இந்திய குடியரசுத் தலைவர் நியமனம் செய்கிறார். அவரது ஆலோசனையின் பேரில் மற்ற நீதிபதிகளையும், குடியரசுத் தலைவரே நியமனம் செய்கிறார்.

நிரந்தர அடிப்படையில் நியமனம் செய்யப்படும் நீதிபதிகளைத் தவிர தற்காலிக அடிப்படையிலும் சில நீதிபதிகளை நியமனம் செய்வதற்கும் அரசியலமைப்பில் வாய்ப்பு தரப்பட்டுள்ளது.

### உச்சநீதிமன்ற நீதிபதிகளின் தகுதிகள்

1. இந்தியக் குடிமகனாக இருத்தல் வேண்டும்.

2. உயர்நீதிமன்றங்களில் குறைந்தபட்சம் ஐந்து ஆண்டுகள் நீதிபதியாகப் பணியாற்றிய அனுபவம் பெற்றிருக்க வேண்டும்.

அல்லது

உயர்நீதி மன்றத்தில் குறைந்தபட்சம் பத்து ஆண்டுகள் வழக்குரைஞராகப் பணியாற்றிய அனுபவம் பெற்றிருக்க வேண்டும்.

### பதவிக் காலம்

உச்சநீதிமன்றத்தின் தலைமை நீதிபதியும், பிற நீதிபதிகளும் 65 வயது நிறைவடையும் வரைப் பதவி வகிக்கலாம். பதவிக்காலத்திற்கு முன்கூட்டியே தங்களது ராஜினாமாவை குடியரசுத் தலைவரிடம் வழங்கலாம். பாராளுமன்ற குற்றச்சாட்டுகள் மூலமும் பதவி நீக்கம் செய்யலாம்.

உச்ச நீதிமன்றம், இந்தியாவின் தலைநகரமான தில்லியில் அமைந்துள்ளது. குடியரசுத் தலைவரின் ஒப்புதலுடன், இந்தியாவின் வேறு எந்த ஒரு பகுதியிலும் அமர்வுகளை நடத்தி முடிவெடுக்கும் அதிகாரம் தலைமை நீதிபதிக்கு உண்டு.

### உச்ச நீதிமன்றத்தின் அதிகாரங்களும் செயல்பாடுகளும்

#### அ) நீதி வழங்கும் அதிகாரங்கள்

உச்சநீதி மன்றம் இந்திய அரசியலமைப்பு சட்டத்தின் பாதுகாவலனாக விளங்குகிறது. இரண்டு முக்கிய அதிகாரங்களான முதல்நிலை விசாரணை மற்றும் மேல்முறையீட்டு அதிகாரம் ஆகியவற்றை பெற்றுத் திகழ்கிறது.

#### முதல் விசாரணை அதிகாரம்

உச்சநீதிமன்றத்திற்கு நேரிடையாக முதன்முதலாகக் கொண்டுவரப்படும் வழக்குகளை விசாரிக்கும் அதிகாரங்களை முதல் விசாரணை அதிகாரங்கள் (Original Jurisdiction) என்று அழைக்கப்படுகின்றது. இவை மாநில அரசுக்கும், மத்திய அரசிற்கும் இடையிலான சிக்கல்கள், மாநில அரசுகளுக்கிடையேயான சிக்கல்கள், அடிப்படை உரிமைகள் தொடர்பான வழக்குகள் போன்றவற்றை உச்சநீதிமன்றம் நேரடியாக எடுத்துக் கொள்ளலாம். அடிப்படை உரிமைகளை நடைமுறைப்படுத்துவது தொடர்பான சிக்கல்கள் உச்ச நீதிமன்றத்தின் அதிகார வரம்பில் உள்ளவையாகும். அடிப்படை உரிமைகளை நடைமுறைப்படுத்துவதற்காக உச்சநீதிமன்றத்தால் நீதிப் பேராணைகள் பிறப்பிக்கப்படுகின்றன. அவை

1) ஆட்கொணர் நீதிப்பேராணை

2) செயலுறுத்தும் நீதிப்பேராணை

3) தடைப்பேராணை

4) ஆவணக்கேட்புப் பேராணை

5) தகுதி முறை வினவும் நீதிப்பேராணை.

உச்சநீதி மன்றமும், உயர்நீதி மன்றமும் மேற்கண்ட ஐந்து ஆணைகளை மக்களின் உரிமைகளைப் பாதுகாக்க அரசிலமைப்பில் வெளியிட்டுள்ளது. இதன் மூலம் மக்களின் அடிப்படை உரிமைகளுக்கு உத்திரவாதம் அளிக்கப்பட்டுள்ளது. எனவே உச்சநீதி

மன்றம் அரசியலமைப்பின் பாதுகாவலன் என அழைக்கப்படுகிறது.

**1) ஆட்கொணர் நீதிப்பேராணை**

சட்டத்திற்குப் புறம்பாக கைது செய்வதிலிருந்து மக்களை பாதுகாக்கிறது.

**2) செயலுறுத்தும் நீதிப்பேராணை**

விண்ணப்பதாரர்களுக்கு சட்ட உதவி அளித்து, பொது சொத்தை பாதுகாக்கிறது.

**3) தடைப்பேராணை**

துணை நீதி மன்றங்கள் வரம்பு மீறி செயல்படுவதை தடை செய்கிறது.

**4) ஆவணகேட்பு பேராணை**

துணை நீதி மன்றங்களின் வரம்பு மீறி வெளியிடும் ஆணைகளை நீக்குதல்.

**5) தகுதி முறை வினவும் நீதிப்பேராணை**

பொது அலுவலகங்களை ஆக்கிரமிப்பு செய்வதை தடை செய்தல்.

### மேல்முறையீட்டு அதிகாரங்கள்

சிவில், குற்றவியல் மற்றும் அரசியலமைப்பு தொடர்பான வழக்குகளில் உயர்நீதி மன்றத் தீர்ப்பிற்கு எதிராக ஒருவர் உச்சநீதிமன்றத்தில் மேல்முறையீடு செய்யலாம். அதற்கு உயர்நீதிமன்றத்தின் ஒப்புதலும் தேவை. இத்தகைய, உயர்நீதிமன்றத் தீர்ப்புகளுக்கு எதிராக உச்சநீதிமன்றத்தில் மேல் முறையீடு செய்யப்படும் வழக்குகளை விசாரிக்கும் அதிகாரத்தைத்தான் மேல் முறையீட்டு அதிகாரங்கள் என்கிறோம்.

### நிர்வாகப் பொறுப்புகள்

பாதிக்கப்பட்டவர்களுக்கு நீதி கிடைப்பதற்காக, பல அடுக்குகளில் நீதிமன்றங்கள் சங்கிலித் தொடர்போல அமைந்துள்ளன. தற்போது 21 உயர்நீதி மன்றங்கள் உள்ளன. சில உயர்நீதி மன்றங்கள் ஒன்றிற்கு மேற்பட்ட மாநிலங்களின் அல்லது மாநிலங்கள் மற்றும் யூனியன் பிரதேசங்களின் வழக்குகளை எடுத்துக் கொள்கின்றன. உயர் நீதிமன்றத்திற்கு கீழே பலவிதமான சார்பு நீதிமன்றங்கள் உள்ளன. ஆனால் இந்தியாவிலுள்ள அனைத்து நீதிமன்றங்களும் உச்சநீதிமன்றத்தின் நிருவாகம் மற்றும் கட்டுப்பாட்டின் கீழ் இயங்குகின்றன. அண்மைக் காலத்தில் விரைவாகவும், குறைந்த செலவிலும் நீதி கிடைப்பதற்காக, குறிப்பாக ஏழை மக்களுக்குக் கிடைப்பதற்காக லோக் அதாலத் எனப்படும் மக்கள் நீதி மன்றங்கள் உருவாக்கப்பட்டுள்ளன.

1987ஆம் ஆண்டின் உரிமை பணிச் சட்டத்தின்படி லோக் அதாலத் எனப்படும் மக்கள் நீதிமன்றம் ஏற்படுத்தப்பட்டன. இவை நீண்டகாலம் தேங்கி இருக்கும் வழக்குகளை விரைவாக விசாரித்து தீர்ப்பு வழங்குகின்றன. இதன் மூலம் மக்கள் தங்களின் பணம், நேரம், சக்தியை பாதுகாக்கலாம். குற்றவியல் வழக்குகளைத் தவிர, மற்ற அனைத்து வழக்குகளுக்கும் இந்நீதி மன்றங்களின் மூலம் தீர்வுக் காணலாம்.

இத்தகைய நீதிமன்றங்கள் பற்றி மேலும் அறிந்துகொள்ள நாளேடுகள் பெரிதும் உதவியாக உள்ளன. இந்த நீதிமன்றங்கள் மூலம் தமிழகத்தில் பல வழக்குகளுக்கு தீர்வு காணப்பட்டுள்ளன. இந்த நீதி மன்றங்களை விரைவு நீதிமன்றங்கள் என்றழைக்கிறோம்.

அரசியல் சட்டப் பிரச்சனை தொடர்பாக, குடியரசுத் தலைவர் விளக்கம் பெற விரும்பினால், அத்தகைய ஆலோசனைகளை வழங்கும் பொறுப்பு உச்சநீதிமன்றத்திற்கு உரியதாகும்.

### நீதிப் புரனாய்வு

சட்டமன்றங்களால் நிறைவேற்றப்படும் எந்த ஒரு சட்டத்தையும் அரசியலமைப்புச் சட்டவிதிகளுக்கு முரணானது என்று தீர்ப்பளிக்கும் உச்சநீதிமன்றத்தின் அதிகாரத்தையும் 'நீதிமன்ற மறுபரிசீலனை' என்கிறோம். இந்த சட்ட மறுபரிசீலனையின்படி, இந்தியாவில் உள்ள நாடாளுமன்றம் உள்ளிட்ட எந்த ஒரு சட்டமன்றத்தால் நிறைவேற்றப்பட்ட சட்டத்தையும், அது இந்திய

அரசியலமைப்புச் சட்டத்தின் அடிப்படை விதிகளுக்கு முரணானது என்று கண்டால், அந்தச் சட்டம் "செல்லுபடியாகாது" என்று அறிவிக்கும் உரிமையை உச்சநீதிமன்றம் பெற்றுள்ளது. நிருவாக அமைப்பு மற்றும் சட்டமன்றங்கள் வரம்பு மீறிச் செயல்படுவதை இந்த 'மறுபரிசீலனை' கட்டுப்படுத்துகிறது. எனவே, உச்சநீதிமன்றத்தை "அரசியலமைப்பின் பாதுகாவலன்" என்று மிகச் சரியாகக் குறிப்பிடுகின்றனர்.

**செயல்பாடு**

ஒன்றிணைந்த மற்றும் சுதந்திர நீதித்துறை இந்தியாவிற்கு அவசியமா? ஏன்?

**உங்களுக்குத் தெரியுமா ?**

இராணுவத் தீர்ப்பாயங்களில் அறிவிக்கப்பட்ட தீர்ப்புகளில் உச்சநீதிமன்றம் தலையிட முடியாது. இராணுவ தீர்ப்பாயங்களின் தீர்ப்புகளுக்கு எதிராக உச்சநீதிமன்றத்தில் மேல்முறையீடு செய்யமுடியாது.

**உங்களுக்கு தெரியுமா ?**

உச்சநீதிமன்ற நீதிபதிகள், தமது கைப்பட பதவி விலகல் கடிதத்தைக் குடியரசுத் தலைவருக்குத் தந்து, பதவிக் காலம் முடியும் முன்னரே பதவி விலகலாம். முறைகேடுகளுக்காக, உரிய வழிமுறைகளைப் பின்பற்றி எந்த ஒரு நீதிபதியையும் நாடாளுமன்றம் பதவி நீக்கம் செய்ய முடியும். இதனை Impeachment என்பர்.

## உயர்நீதி மன்றம்

இந்திய அரசியலமைப்புச் சட்டம் 214வது பிரிவின்படி, ஒவ்வொரு மாநிலத்திலும் உயர்நீதி மன்றம் அமைக்கப்பட்டுள்ளது. பொதுவாக இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட உயர்நீதிமன்றங்கள் ஒவ்வொரு மாநிலத்திலும் மற்றும் யூனியன் பிரதேசத்திலும் இருக்கும். பாராளுமன்ற சட்டங்களின் அனுமதியின் பேரில் இவை செயல்படுகிறது. மாநிலத்திலுள்ள பிற நீதிமன்றங்கள் உயர்நீதிமன்றத்தின் மேற்பார்வையின் கீழ் செயல்படுகிறது. உயர்நீதி மன்றத்தால் கொண்டுவரப்படும் மேல்முறையீடு வழக்குகளை இந்திய உச்சநீதி மன்றம் விசாரிக்கும்.

உயர்நீதிமன்றம் ஒரு தலைமை நீதிபதியையும், பிற நீதிபதிகளையும் கொண்டுள்ளது. இவர்களை இந்தியக் குடியரசுத்தலைவர் நியமனம் செய்கிறார். உயர்நீதிமன்ற நீதிபதிகளின் எண்ணிக்கை வரையறை செய்யப்பட வில்லை.

**செயல்பாடு**

உயர் நீதிமன்றத்தில் அதிகார வரம்பின் கீழ் மாநிலத்தில் செயல்படும் வெவ்வேறு நீதிமன்றங்கள் யாவை ?

## உயர்நீதிமன்ற தலைமை நீதிபதி மற்றும் பிற நீதிபதிகள்

இந்தியக் குடியரசுத்தலைவர், உச்சநீதிமன்றத் தலைமை நீதிபதி, மற்றும் மாநில ஆளுநரின் ஆலோசனையின் பேரில் உயர்நீதி மன்ற தலைமை நீதிபதியை நியமனம் செய்கிறார். பொதுவாக பணி மூப்பின் அடிப்படையிலேயே தலைமை நீதிபதியின் நியமனம் அமைகிறது. உயர்நீதி மன்றத் தலைமை நீதிபதியின் ஆலோசனையின் பேரில், உயர்நீதிமன்றத்தின் பிற நீதிபதிகளையும் குடியரசுத் தலைவரே நியமனம் செய்கிறார்.

## நீதிபதிகளின் தகுதி

1. இந்தியக் குடிமகனாக இருத்தல் வேண்டும்.

2. உயர்நீதிமன்றங்களில் வழக்குரைஞராக குறைந்தபட்சம் பத்தாண்டுகள் அனுபவம் பெற்றிருக்க வேண்டும்.

3. குறைந்தபட்சம் பத்து ஆண்டுகள் ஏதாவதொரு நீதிமன்றத்தில் நீதிபதியாகப் பணியாற்றியிருக்க வேண்டும்.

நீதிபதிகள் ஓய்வு பெறும் வயது 60 என்று வரையறுக்கப்பட்டிருந்தது. ஆனால் 1963–ம் ஆண்டுஅரசியலமைப்பு 15 வது

பிரிவு திருத்தப்படி நீதிபதிகளின் ஓய்வுபெறும் வயது 62 – ஆக உயர்த்தப்பட்டுள்ளது.

### உயர்நீதிமன்றத்தின் அதிகாரங்களும், செயல்பாடுகளும்

உயர்நீதிமன்றத்தின் அதிகார வரம்பினை இரண்டு விதமாகப் பிரிக்கலாம்.

உயர்நீதிமன்றம்
- முதல் விசாரணை நீதி அதிகாரம்
- மேல்முறையீட்டு அதிகாரம்



உயர்நீதிமன்றம்

### முதல் விசாரணை நீதி அதிகாரம்

உயர்நீதி மன்றங்களின் முதல் விசாரணை அதிகாரம் வரையறைகளுக்கு உட்பட்டது. அரசியலமைப்பின் 226–வது பிரிவின்படி, அடிப்படை உரிமைகளைச் செயல்படுத்தவோ, அல்லது வேறுசில குறிப்பிட்ட நோக்கங்களுக்காகவோ நீதிப் பேராணையினை பிறப்பிக்க முடியும். இந்த முதன்மை நிலை அல்லது நேரடி அதிகாரத்தில் நிருவாகம், திருமணம் தொடர்பான வழக்குகள், கம்பெனிச் சட்டம், நீதிமன்ற அவமதிப்பு போன்ற வழக்குகள் அடங்கும். உச்ச நீதிமன்றத்தைப் போலவே உயர்நீதிமன்றமும் அடிப்படை உரிமைகளைப் பாதுகாப்பதற்காக 1) ஆட்கொணர் நீதிப்பேராணை 2) செயலுறுத்தும் நீதிப்பேராணை 3)தடைப்பேராணை 4)ஆவணக்கேட்புப் பேராணை 5)தகுதி முறை வினவும் நீதிப்பேராணை ஆகிய ஆணைகளைப் பிறப்பிக்க முடியும்.

### மேல் முறையீடு அதிகார வரம்பு

இதன்படி கீழ் நீதிமன்றத் தீர்ப்புகளுக்கு எதிராக மேல்முறையீடு செய்யப்படும் சிவில் மற்றும் குற்றவழக்குகளை விசாரித்து தீர்ப்பு வழங்கலாம். அரசியலமைப்பு சட்ட விதிகளின் விளக்கங்கள் தொடர்பான வழக்குகளையும், உயர்நீதிமன்றம் விசாரிக்கலாம். இத்தகைய நீதிமன்ற அதிகார வரம்பிற்குள், உயர்நீதிமன்றம் முழுமையாகவும், சுதந்திரமாகவும் செயல்படுகிறது.

**தெரிந்து கொள் ?**

உயர்நீதிமன்றத்தின் கீழ் உள்ள நீதிமன்றங்கள் யாவை ? நடத்துநர் யார் ?

**உங்களுக்கு தெரியுமா ?**

கீழ் நீதிமன்றங்களிலிருந்து வரும் உரிமையியல் முதல்நிலை அல்லது இரண்டாம் நிலை வழக்குகளை உயர்நீதிமன்றம் விசாரிக்கலாம். குற்றவியல் வழக்குகளில் உயர் நீதிமன்றம், கீழ் நீதிமன்றத்தின் தீர்ப்புகளுக்கு எதிராகவும் செயல்படும்.

### நிருவாகப் பொறுப்புகள்

மாநிலத்தில் சட்டம் ஒழுங்கை உறுதி செய்வதற்காக பல நிலைகளிலான நீதிமன்றங்கள் உள்ளன. அவை சார்பு நீதிமன்றங்கள் என்று அழைக்கப்படுகின்றன. அத்தகைய சார்பு நீதிமன்றங்களை உயர்நீதிமன்றம் கண்காணிக்கிறது. சார்பு நிலை நீதிமன்றங்கள் உயர்நீதி மன்றத்தின் விதிகளையும், ஒழுங்கு முறைகளையும் கடைப்பிடிக்க வேண்டும். கீழ்மட்ட நீதிமன்றங்களின் கோப்புகளை உயர்நீதிமன்றம் ஆய்வு செய்யும். ஒரு சார்பு நீதிமன்றத்திலிருந்து வழக்கை மாற்றும் அதிகாரம் உயர்நீதி மன்றத்திற்கு உள்ளது.

**சட்டத்தை நீதிமன்ற மறுபரிசீலனை செய்யும் அதிகாரம்**

சட்டமன்றத்தால் இயற்றப்படும் மசோதா, அரசியலமைப்புச் சட்ட விதிகளுக்கு முரணானது என்று அறியப்பட்டால், அத்தகைய சட்டம் செல்லாது என்று அறிவிக்கின்ற உரிமை உச்சநீதி மன்றம் போல் உயர்நீதி மன்றத்திற்கும் உண்டு. இவ்வுரிமை, நிர்வாக மற்றும் சட்டமன்றங்களை வரம்பு மீறாமல் கட்டுப்படுத்துவதற்கு உதவுகிறது.

மதுரையில் சென்னை உயர்நீதிமன்றம் கிளை செயல்படுகிறது. மாநில நிருவாகத்தில் மூன்று பிரிவுகளும், தன்னிச்சையாக செயல்படும் பிரிவுகளாக இருந்தாலும் நிருவாகத்தில் அதிகார வரம்பை மீறி செயல்பட முடியாது. இப்பிரிவுகளில் ஏதாவது ஒரு பிரிவு அரசியலமைப்பின் அதிகாரத்தைத் தவறாக பயன்படுத்தினால் மற்ற இருபிரிவுகள் இதனை கண்காணித்து மக்களை பாதிக்காத வகையில் பாதுகாக்கிறது. இது **கண்காணித்து சமநிலைப்படுத்தும் முறை** என அழைக்கப்படுகிறது. இதன்மூலம் நிருவாகத்துறை, சட்டத்துறை, நீதித்துறை, முழுமையான சுதந்திரத்துடன் செயல்படுகிறது என்பதை தெளிவாகக் காணலாம். ஒருவர் மீது ஒருவர் ஆக்கிரமிப்பு செய்வதிலும், அதேபோல நீதித்துறை மத்திய அரசும், மாநில அரசும் தங்களின் உரிமைகளில் தலையிடுவதையும் தடுத்து பாதுகாக்கிறது.

**செயல்பாடு**

மாநில அரசின் பல்வேறு நீதிமன்றங்களின் பணிகளைப் பற்றி அறிந்துகொள்ளுங்கள்.

மக்களின் சட்டம், நீதி முக்கியத்துவம் பற்றி தெரிந்து கொள்ளவும்.

சட்ட நீதிமன்றங்கள் தவிர பிற நீதி மன்றங்கள் யாவை ?

## பயிற்சி

**அ. சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுது.**

1. இந்திய பாராளுமன்றம் _________ஐ கொண்டவை.

   அ) ஒரு அவை  ஆ) ஈரவை  இ) மூன்று அவை  ஈ) எதுவுமில்லை

2. பிரதம மந்திரியை நியமிப்பவர் _________.

   அ) லோக் சபை  ஆ) அமைச்சரவை  இ) ராஜ்ய சபை  ஈ) குடியரசு தலைவர்

3. லோக் சபையில் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களின் எண்ணிக்கை

   அ) 530  ஆ) 238  இ) 545  ஈ) 250

4. லோக் சபை உறுப்பினர்கள் _________மூலம் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள்.

   அ) நேரடி தேர்தல் முறை  ஆ) மறைமுக தேர்தல்

   இ) சபாநாயகர்  ஈ) பிரதம மந்திரி

5. மேல் சபை என்பது

   அ) ராஜ்ய சபை  ஆ) லோக் சபை  இ) காபினெட்  ஈ) பாராளுமன்றம்

6. இந்திய யூனியன் மற்றும் குடியரசின் தலைவர் _________.

அ) சபா நாயகர் ஆ) குடியரசு துணை தலைவர்

இ) குடியரசு தலைவர் ஈ) உச்சநீதிமன்ற நீதிபதி

7. பணமசோதா _________ அனுமதியின்றி வெளியிடமுடியாது

அ) பாராளுமன்றம் ஆ) பிரதம மந்திரி

இ) குடியரசு தலைவர் ஈ) அட்டர்னி ஜெனரல்

8. மத்திய நிதி அமைச்சர் ஆண்டு அறிக்கையை _________ முன்னிலையில் சமர்பிப்பார்

அ) பாராளுமன்றம் ஆ) லோக் சபை

இ) ராஜ்ய சபை ஈ) பிரதம மந்திரி

9. குடியரசுத் துணை தலைவர் பதவிக்கு _________ அரசியல் அமைப்பு திருத்தம் கூறுகிறது.

அ) அரசியல் திருத்தம் 53 ஆ) அரசியல் திருத்தம் 356

இ) அரசியல் திருத்தம் 360 ஈ) அரசியல் திருத்தம் 63

10. இந்திய குடியரசு தலைவர் _________.

அ) திருமதி. சோனியா காந்தி ஆ) டாக்டர். மன் மோகன்சிங்

இ) திருமதி. பிரதீபா தேவிசிங் பாட்டீல் ஈ) டாக்டர். அப்துல் கலாம்

11. உச்சநீதிமன்ற நீதிபதியை நியமிப்பவர்

அ) காபினெட் அமைச்சர்கள் ஆ) பாராளுமன்ற உறுப்பினர்கள்

இ) பிரதம மந்திரி ஈ) குடியரசு தலைவர்

12. உச்சநீதிமன்ற நீதிபதிகளின் எண்ணிக்கை _________.

அ) 26 ஆ) 15 இ) 9 ஈ) 12

13. உச்ச நீதிமன்ற நீதிபதிகள் ஓய்வு பெறும் வயது _________.

அ) 62 ஆ) 65 இ) 58 ஈ) 60

14. லோக் அதாலத் தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு _________.

அ) 1950 ஆ) 1947 இ) 1987 ஈ) 2000

15. உச்சநீதி மன்றத்தின் தலைமையிடம் உள்ள இடம் _________.

அ) சென்னை ஆ) பம்பாய் இ) கல்கத்தா ஈ) புதுடெல்லி

## ஆ. சுருக்கமாக விடையளி.

1. ராஜ்ய சபை உறுப்பினராக தேவையான தகுதிகள் யாவை ?
2. பிரதம மந்திரி எவ்வாறு தேர்ந்தெடுக்கப்படுகிறார் ?
3. ஈரவை பேரவை என்றால் என்ன ?
4. லோக் சபை என்பது என்ன ?

5. தேர்தல் குழு என்பது யாது ?

6. குடியரசு தலைவரால் நியமிக்கப்படுபவர்கள் யாவர் ?

7. அவசரநிலை பிரகடனம் எப்போது அறிவிக்கப்படுகிறது ?

8. குடியரசு துணைத் தலைவர் எவ்வாறு தேர்ந்தெடுக்கப்படுகிறார் ?

9. உச்ச நீதிமன்ற நீதிபதியின் தகுதிகள் யாவை ?

10. முதல் விசாரணை அதிகாரங்கள் என்பது என்ன ?

11. நீதிமன்ற மறு ஆய்வுப் பற்றி விளக்குக ?

12. உயர்நீதிமன்ற நீதிபதியின் பணிகள் யாவை ?

13. மேல் முறையீடு விசாரணை அதிகாரங்கள் பற்றி விளக்குக .

## இ. பத்தியளவில் விடையளி.

1. பாராளுமன்றத்தின் அதிகாரங்கள் மற்றும் பணிகள் விவரி

2. அமைச்சரவைப் பற்றி விவரி.

3. குடியரசுத் தலைவரின் அதிகாரங்களை விவரி.

4. குடியரசுத் துணை தலைவரின் பணிகள் யாவை ?

5. உச்ச நீதிமன்றத்தின் பணிகள் மற்றும் அதிகாரங்கள் விவரி.

6. உயர் நீதிமன்ற நீதிபதியின் அதிகாரங்களை விவரி.

# 2. மாநில அரசு

இந்தியா 28 மாநிலங்கள் மற்றும் 7 யூனியன் பிரதேசங்களைக் கொண்டுள்ளது. டெல்லி தேசிய தலைநகர் ஆகும். மாநில அரசின் கட்டுப்பாட்டில் மாநிலம் செயல்படுகிறது. யூனியன் பிரதேசங்கள் துணை ஆளுநர் மூலம், (லெப்ட்டினண்ட் கவர்னர்) குடியரசுத் தலைவரால் நிர்வகிக்கப்படுகிறது.

1991–ம் ஆண்டு அரசியலமைப்பு 69வது சட்டத் திருத்தத்தின்படி, டெல்லி தேசிய தலைநகர் நிலையைப் பெற்றது.

மாநில அரசின் அதிகாரங்களையும், பணிகளையும் இந்திய அரசியலமைப்புச் சட்டம் தெளிவாக விளக்குகிறது. மாநிலப் பட்டியலில் இடம் பெற்றுள்ள துறைகளை நிருவகிக்கும் பொறுப்பு மாநிலங்களைச் சாரும். மைய அரசு போன்று மாநில அரசுகளும் சட்டத்துறை, நிருவாகத்துறை மற்றும் நீதித்துறை ஆகியவற்றைக் கொண்டுள்ளது.

**செயல்பாடு**

நமது அரசியலமைப்பில் மாநில பட்டியல் தவிர மற்ற இரண்டு பட்டியல்கள் பற்றி உமக்குத் தெரியுமா ?




இந்திய அரசியலமைப்புச் சட்டம் 152 முதல் 237 வரை உள்ள சட்டப்பிரிவுகள் மாநில அரசின் நிருவாகப் பணிகளைப் பற்றி தெளிவாகக் குறிப்பிடுகிறது. அரசியலமைப்பின் 153 முதல் 160வரையிலான பிரிவுகள் ஆளுநர்களின் நியமனம், தகுதி, அதிகாரம் மற்றும் பணிகள் பற்றி விளக்குகின்றன.

**செயல்பாடு**

அதிகாரங்கள் பிரிக்கப்பட வேண்டுமா ? அல்லது ஏதாவது ஒரு துறை அனைத்து விவகாரங்களையும் கண்காணிக்க வேண்டுமா ? என்பது பற்றி நீ கருதுவது யாது ?

### நிருவாகத்துறை

மாநில நிருவாகம் ஆளுநர், முதலமைச்சர், மற்றும் அமைச்சரவையைக் கொண்டுள்ளது.

மாநில நிருவாகம்

ஆளுநர்

முதலமைச்சர்

அமைச்சரவை

**செயல்பாடு**

நிருவாகத்துறையின் கீழ் உள்ளவை யாவை ?

### ஆளுநர்

மாநில நிருவாகத்துறை ஆளுநரின் கட்டுப்பாட்டில் உள்ளது. அரசியலமைப்புச் சட்டத்தின்படி மாநில அரசின் தலைவர் இவரே. ஆனால் முதலமைச்சர் தலைமையிலான அமைச்சரவையே உண்மையான நிருவாக அமைப்பாகும். இந்த அமைச்சரவை மாநிலசட்டப் பேரவைக்கு பொறுப்பானதாகும்.



ராஜ்பவன், சென்னை

### ஆளுநர் நியமனம்

இந்தியக் குடியரசுத் தலைவர், மாநில ஆளுநரை நியமனம் செய்கிறார். இவரை ஒரு மாநிலத்திலிருந்து வேறு மாநிலத்திற்கும் குடியரசுத் தலைவர் மாற்றம் செய்யலாம். உயர் நீதிமன்றத்தின் தலைமை நீதிபதியின் முன்பு ஆளுநர் பதவிப்பிரமாணம் எடுத்துக் கொள்கிறார்.

### தகுதிகள்

இந்தியக் குடிமகனாக இருத்தல் வேண்டும்.

35 வயது நிரம்பியவராக இருத்தல் வேண்டும்.

நாடாளுமன்றத்திலோ, சட்ட மன்றத்திலோ உறுப்பினராக இருத்தல் கூடாது. அவ்வாறு இருப்பாரேயானால் அப்பதவியை துறக்கவேண்டும்

மத்திய மற்றும் மாநில அரசில் எந்தப் பதவியிலும் ஊதியம் பெறுபவராக இருக்கக் கூடாது.

ஆளுநராக நியமிக்கப்படுபவர், நியமிக்கப்படும் மாநிலத்தைச் சார்ந்தவராக இருக்கக்கூடாது.

### பதவிக்காலம்

பொதுவாக ஆளுநரின் பதவிக் காலம் 5 ஆண்டுகள். ஆனால் குடியரசுத் தலைவர் விரும்பும் வரையில் அவர் பதவியில் நீடிக்கலாம். குடியரசுத் தலைவர், பதவிக்காலம் முடியும் முன்பே, ஆளுநரைப் பதவியிலிருந்து நீக்கலாம் அல்லது பதவி நீட்டிப்பு செய்யலாம். ஆளுநரே தனது பதவியிலிருந்தும் விலகலாம். இவருக்கு எதிராக குற்றத் தாக்கல் பற்றிய விவரம் அரசியலமைப்பில் குறிப்பிடப் படவில்லை.

**செயல்பாடு**

தமிழ்நாட்டில் பதவி வகித்த பெண் ஆளுநர் பெயரை குறிப்பிடு ?

### ஆளுநரின் அதிகாரங்கள் மற்றும் பணிகள்

அரசியலமைப்புச் சட்டம் 164–வது பிரிவின்படி, மாநில சட்டமன்றத்தில் பெரும்பான்மை கொண்ட கட்சியின் தலைவரை முதலமைச்சராகவும், அவரின் ஆலோசனையின் பேரில் மற்ற அமைச்சர்களையும், ஆளுநர் நியமனம் செய்கிறார். மேலும் மாநில அரசின் தலைமை வழக்கறிஞரையும், அரசுப் பணியாளர் தேர்வு ஆணையத்தின் தலைவரையும், மற்ற உறுப்பினர்களையும், பல்கலைக் கழகங்களின் துணை வேந்தர்களையும் நியமனம் செய்கிறார்.

மாநில அரசின் செயல்பாடு குறித்து குடியரசுத் தலைவருக்கு அறிக்கைகள் அனுப்புகிறார். மாநிலத்தில் குடியரசுத் தலைவர் ஆட்சி நடைபெறும்போது, மாநில நிர்வாகத்தை நேரடியாக மேற்கொள்கிறார்.

மாநில சட்ட மன்றத்தில் ஒரு அங்கமாக ஆளுநர் திகழ்கிறார். மாநில சட்டமேலவை (இரண்டாவது அவை) உறுப்பினர்களில் 1/6 பகுதியினரையும், சட்டப்பேரவையில் ஒரு ஆங்கிலோ–இந்திய உறுப்பினரையும் நியமனம் செய்கிறார். மாநில சட்டமன்றம் நிறைவேற்றும் எந்தவொரு மசோதாவும் ஆளுநரின் ஒப்புதல் பெற்றப் பின்னரே சட்டமாகும். சட்டப் பேரவை நடைபெறாத சமயங்களில், அவசரச் சட்டத்தைப் பிறப்பிக்கும் அதிகாரம் உண்டு. மாநிலத்தில் சட்டம் ஒழுங்கு சீர்குலைந்து, மாநில அரசு செயல்படமுடியாத நிலையில், அரசியலமைப்பு சட்டப் பிரிவு, 356–ஐ பயன்படுத்தி மாநில அரசை கலைத்து, குடியரசு தலவர் ஆட்சியை பிரகடனம் செய்யலாம். இச்சூழ்நிலையில் ஆளுநர் மாநிலத்தில் உண்மையான அதிகாரம் பெற்றுத் திகழ்கிறார். இது குடியரசுத்தலைவர் ஆட்சி என்றழைக்கப்படுகிறது.

**செயல்பாடு**

**அவசரச் சட்டங்கள் என்றால் என்ன ?**

சட்டமன்றங்கள் நடைபெறாத சமயங்களில், ஆளுநரால் பிறப்பிக்கப்படும், சட்டங்கள் அவசரச் சட்டங்கள் என்றழைக்கப்படுகின்றன. இச்சட்டங்கள் சட்டமன்றங்களால் பிறப்பிக்கப்படும் சட்டங்களைப் போன்றவை. ஆனால் இச்சட்டங்களுக்கு 6 வாரத்திற்குள் மாநில சட்டமன்றங்களின் ஏற்பை பெறவேண்டும்.

ஆளுநர் அனுமதியின்றி, நிதி மசோதாக்களை சட்டமன்றத்தில் அறிமுகப்படுத்த முடியாது. துறைகளுக்கான மானியக் கோரிக்கைகள் ஆளுநரின் பரிந்துரையின் பேரில்தான் சட்ட மன்றத்தில் கொண்டு வர முடியும். மாநில அரசின் ஆண்டு வரவு–செலவு திட்டம் ஆளுநரின் அனுமதி பெற்ற பின்னரே சட்டமன்றத்தில் சமர்ப்பிக்கப்படும். எதிர்பாராச் செலவுகளை மேற்கொள்ள சில்லரை செலவு நிதியிலிருந்து நிதி வழங்கிட அரசியலமைப்புச் சட்டம் ஆளுநருக்கு அதிகாரம் வழங்கியுள்ளது.

**செயல்பாடு**

**வரவு–செலவு திட்டம் என்பது யாது ?**

வரவு செலவு திட்டம் என்பது அரசின் ஆண்டு நிதியறிக்கையாகும். இது நடப்பு ஆண்டுக்கான அரசின் வருவாய் மற்றும் செலவினங்கள் குறித்த அறிக்கையாகும்.

முதலமைச்சர் மற்றும் அமைச்சரவை ஆலோசனை பேரில், குற்றவியல் நடைமுறை சட்டத்தின்படி, மாநில உயர்நீதி மன்றத்தால் தண்டனை பெற்ற குற்றவாளிகளை மன்னிக்கவும், தண்டனையைக் குறைக்கவும் அல்லது நீக்கவும் ஆளுநர் அதிகாரம் பெற்றுள்ளார். எனினும் தண்டனையை அதிகப் படுத்த அதிகாரங்கள் பெற்றிருக்கவில்லை. மாநில அரசுப் பணி ஆணையத்திடமிருந்து ஆண்டு அறிக்கைகளை பெற்று, சட்டமன்றத்தின் பரிசீலனைக்கும், ஒப்புதலுக்கும் சமர்ப்பிக்கின்றார்.

## முதலமைச்சர் மற்றும் அமைச்சரவை முதலமைச்சர்

மாநிலத்தில் உண்மையான நிருவாக அதிகாரங்களை செயல்படுத்துவது முதலமைச்சர் மற்றும் அவரது தலைமையிலான அமைச்சரவையாகும். ஆளுநரின் பெயரால் மாநில நிருவாகத்தை முதலமைச்சர் மேற்கொள்கிறார். மைய அரசில் பிரதமரின் நிலை போன்றே மாநில நிருவாகத்தில் முதலமைச்சர் நிலை காணப்படுகிறது.

## முதலமைச்சர் நியமனம்

மாநில முதலமைச்சர் ஆளுநரால் நியமிக்கப்படுகிறார். சட்டப் பேரவையில் எந்தக் கட்சி அல்லது எந்த அணி பெரும்பான்மை பெற்றுள்ளதோ, அந்தக் கட்சியின் தலைவர் அல்லது அணியின்

தலைவரை ஆளுநர் முதலமைச்சராக நியமிக்கிறார். எந்தவொரு கட்சியும் அல்லது அணியும் சட்டப் பேரவையில் அறுதிப் பெரும்பான்மையை பெறவில்லையெனில், சட்டசபையில் தனிப்பெரும் கட்சியின் தலைவருக்கு அமைச்சரவை அமைக்குமாறு ஆளுநர் அழைப்பு விடுவிக்கலாம். ஆனால் ஆளுநர் குறிப்பிடும் கால அவகாசத்திற்குள், சட்டப் பேரவையில் தனக்குப் பெரும்பான்மை ஆதரவு உள்ளது என்பதை நிரூபிக்க வேண்டும். முதலமைச்சரின் பதவிக்காலம் நிர்ணயிக்கப்பட்ட தனது சட்டப் பேரவையில் பெரும்பான்மையினர் தனக்கு ஆதரவு கொடுக்கும் வரையில் ஒருவர் பதவியில் இருக்கலாம். முதலமைச்சரின் பதவி விலகல் ஒட்டுமொத்த அமைச்சரவையின் விலகலாகும். பொதுவாக முதலமைச்சருக்கும் சட்டமன்ற உறுப்பினர்களுக்கும் பதவிக்காலம் 5 ஆண்டுகள் ஆகும்.

## முதலமைச்சரின் பணிகளும், அதிகாரங்களும்

மாநில நிருவாகத்தின் உண்மையான தலைவராக முதலமைச்சர் திகழ்கிறார். அவரின் பணிகளாவன :

1) அமைச்சரவையை அமைத்தல்.

2) அமைச்சர்களுக்கு துறைகளை ஒதுக்கீடு செய்வது.

3) கடமை தவறும் போது அமைச்சர்களை பதவி விலகக் கோருதல்.

4) ஆளுநர் அறிவிக்கையின்படி, துறைகளை அமைச்சர்களுக்கு மாற்றம் செய்வது.

5)அமைச்சரவையின் தலைவராய் இருந்து, அமைச்சரவைக் கூட்டங்களுக்குத் தலைமைத் தாங்குவது.

6) ஆளுநர்மற்றும் அமைச்சர்களுக்கு இடையே தொடர்பாளராக செயல்படுதல்.

7) பதவிக்காலம் முடியும் முன்பே சட்டப் பேரவையைக் கலைக்க ஆளுநருக்கு அறிவுறுத்துவது.

## அமைச்சரவைக் குழு

மைய அமைச்சரவைப் போன்றே மாநில அமைச்சரவையும் உண்மையான அதிகாரம் பெற்றுள்ளது. மாநில அமைச்சரவை மாநில சட்டமன்றத்திற்கு பொறுப்புடையதாகும். அனைத்து அமைச்சர்களும் மாநில சட்ட மன்றத்தின் உறுப்பினர்களாய் இருத்தல் வேண்டும். அமைச்சராக நியமிக்கப்படும்போது சட்டமன்ற உறுப்பினராய் இல்லாதவர்கள், 6 மாத காலத்திற்குள் சட்ட மன்ற உறுப்பினர் பதவிக்கு தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். அனைத்து அமைச்சர்களும், முதலமைச்சரின் தலைமையின் கீழ் ஒரே அணியாகச் செயல்படுகின்றனர். முதலமைச்சர் பதவியில் நீடிக்கும் வரை அமைச்சரவை பதவியில் நீடிக்கும். சட்டப் பேரவை அமைச்சரவையின் மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் நிறைவேற்றினால், முதலமைச்சர் தலைமையில் செயல்படும் மாநில அமைச்சரவை பதவி விலக வேண்டும். இது ஒட்டுமொத்த பொறுப்பு என்றழைக்கப்படுகிது.

## சட்டப் பேரவை

இந்திய அரசியலமைப்புச் சட்டப்படி, ஒவ்வொரு மாநிலத்திலும் ஒரு சட்டப்பேரவை ஏற்படுத்தப்பட்டுள்ளது. பெரும்பான்மையான மாநிலங்களில் ஓர் அவைக் கொண்டசட்டப்பேரவைகளும், சில மாநிலங்களில் ஈரவைக் கொண்ட சட்ட மன்றங்களும் ஏற்படுத்தப்பட்டுள்ளன. (உ.ம்) பீகார், கர்நாடகம், மகாராஷ்டிரம், உத்திரபிரதேசம், மற்றும் ஜம்மு காஷ்மீர்.



தமிழ்நாடு சட்டப்பேரவை

இரு சபைகள் கொண்ட மாநிலங்களில் சட்டமன்றமும் சட்ட மேலவையும் செயல்படுகின்றன. சட்டமன்ற உறுப்பினர்கள் பொதுமக்களால் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். சட்டமன்ற மேலவை உறுப்பினர்கள் ஆசிரியர்கள், பட்டதாரிகள் மற்றும் உள்ளாட்சி அமைப்புகளின் உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர்.

1988–ம் ஆண்டு அரசியலமைப்புச் சட்டம் 61–வது திருத்தத்தின்படி வாக்குரிமை வயது 21–லிருந்து 18–ஆக குறைக்கப்பட்டது.




### சட்டப் பேரவை (கீழ் அவை)

மாநிலங்களில் சட்டப் பேரவை உண்மையான அதிகார மையமாக திகழ்கிறது. இது குடிமக்களால் நேரடியாக தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களைக் கொண்டுள்ளது. மக்கள் தொகை அடிப்படையில் சட்டப் பேரவை உறுப்பினர்கள் எண்ணிக்கை அமைந்திருக்கும். அதிக பட்ச உறுப்பினர்கள் எண்ணிக்கை 500 ஆகும். குறைந்த பட்ச உறுப்பினர்கள் எண்ணிக்கை 60 ஆகும். சட்டப் பேரவையில் , தாழ்த்தப் பட்டவர்கள் (ஆதி திராவிடர்), பழங்குடியினருக்கு சில இடங்கள் ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளது. இவை தனித்தொகுதி என அழைக்கப்படுகின்றன. 25 வயது நிறைவடைந்தவர்கள் தேர்தலில் பங்கேற்கலாம்.சட்டப்பேரவையின் பதவிக்காலம் 5 ஆண்டுகள். இருப்பினும், பதவிக்காலம் முடியும் முன்பே கூட இப்பேரவையைக் கலைக்கலாம்.

**செயல்பாடு**

தமிழ்நாட்டின் சட்ட பேரவையின் உறுப்பினர்களின் எண்ணிக்கையை அறிக.

### சபாநாயகர்

சட்டப் பேரவைக்கு தலைமை வகிப்பவர் அவைத் தலைவர் அல்லது சபாநாயகர். சபாநாயகர் மற்றும் துணை சபாநாயகர் சட்டப்பேரவை உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். சபாநாயகர் இல்லாத நாட்களில் துணை சபாநாயகர் சட்டப் பேரவை நிகழ்ச்சிகளை நடத்துகிறார். சட்டப் பேரவையை முறைப்படி நடத்தும் பொறுப்பு (சபா நாயகர்) சட்ட பேரவைத் தலைவருடையதாகும்.

**தெரிந்துகொள்**

தமிழ்நாட்டின் தற்போதைய சட்டப்பேரவை தலைவர் யார் ?

### சட்ட மேலவை

மத்திய சட்டமேலவையான மாநிலங்களவை போன்றே, மாநிலங்களில் சட்டமேலவை நிரந்தரமானதாகும். ஆனால் மாநில சட்ட மன்றங்களின் பரிந்துரைபேரில் பாராளுமன்றத்தால் இது கலைக்கப்படலாம். சட்டமேலவை உறுப்பினர்களில் மூன்றில் ஒரு பகுதியினர் இரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை ஓய்வுப் பெறுகின்றனர். இந்த இடங்களுக்கு தேர்தல் மூலமாகவோ அல்லது ஆளுநரின் நியமனம் மூலமாகவோ அடுத்த 6 ஆண்டு காலத்திற்கு உறுப்பினர்கள் நிரப்பப்படுகின்றனர்.

சட்டமேலவை அங்கத்தினர்கள் மக்களால் நேரடியாக தேர்ந்தெடுக்கப் படுவதில்லை.இவர்களின் பதவிக்காலம் 6 ஆண்டுகள். உறுப்பினர்கள் மறு தேர்தலுக்கும், மறு நியமனத்திற்கும் தகுதி உள்ளவர்கள். சட்ட மேலவை உறுப்பினர்கள் எண்ணிக்கை மொத்த மாநில சட்டமன்ற உறுப்பினர்களின்

எண்ணிக்கையில் மூன்றில் ஒரு பகுதிக்கு மேல் இருக்கக்கூடாது. ஆனால் மொத்த உறுப்பினர்கள் 40–க்கு குறையாமல் இருக்க வேண்டும்.

**தெரிந்துக் கொள்**

30 வயது நிரம்பிய இந்திய குடிமக்கள் சட்டமேலவை உறுப்பினராக தகுதி படைத்தவர் ஆவார்.

### தேர்ந்தெடுக்கும் முறை

⇨ 1/3 உறுப்பினர்கள் உள்ளாட்சி அமைப்புகளின் பிரதிநிதிகளால் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர்.

⇨ 1/12 உறுப்பினர்கள் மாநில பல்கலைக் கழக பட்டதாரிகளால் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர்.

⇨ 1/12 உறுப்பினர்கள் ஆசிரியர்களால் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர்.

⇨ 1/3 உறுப்பினர்கள் சட்ட பேரவையினால் தேர்வு செய்யப்படுகின்றனர்.

⇨ 1/6 இலக்கியம், கலை, அறிவியல், சமூகச் சேவை போன்ற துறைகளில் சிறப்பு அறிவும், நடைமுறை அனுபவம் உள்ளவர்களை ஆளுநர் நியமனம் செய்கிறார்.

1986, நவம்பர் 1ஆம் தேதி சட்டமேலவை தமிழ்நாட்டில் ஒழிக்கப்பட்டது. விரைவில் தமிழ்நாட்டில் சட்டமேலவை பாராளுமன்ற மற்றும் இந்திய குடியரசுத் தலைவரின் ஒப்புதலுடன் உருவாக்கப்பட இருக்கிறது.

### சட்ட மேலவைத் தலைவர்

சட்ட மேலவையை நடத்துபவர் மேலவைத்தலைவர் (chair person) ஆவார். மேலவைத்தலைவர், மேலவை துணைத் தலைவர் ஆகியோர் மேலவை உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். மேலவைத்தலைவர் இல்லாத காலங்களில் மேலவைத் துணை தலைவர் மேலவை நிகழ்ச்சிகளை நடத்துவார்.

**செயல்பாடு**

சட்டமேலவை, சட்டப்பேரவை ஆகிய இரண்டில் எது அதிக அதிகாரம் கொண்டது ? ஏன் ?

### சட்டமன்றத்தின் பணிகள்

மாநில சட்ட மன்றம், மாநிலப் பட்டியல் மற்றும் பொதுப் பட்டியலில் உள்ள துறைகளுக்கு தேவையான சட்டங்களை இயற்றுகிறது. பாராளுமன்றத்தில் ஒரு மசோதா சட்டமாவதற்கு மேற்கொள்ளப்படும் முறையே, மாநில சட்ட மன்றங்களிலும் கையாளப்படுகிறது. மாநிலத்தின் நிதிச் சார்ந்த செயல்களை சட்டப்பேரவை கட்டுப்படுத்துகிறது. சட்டமன்றத்தின் அனுமதியின்றி புதிய வரிகளை விதிக்க முடியாது. சட்டப் சபைக்கு அமைச்சரவை பொறுப்பு உடையது, கட்டுப்படுவதாகும். சட்ட மேலவையை விட சட்ட பேரவை அதிகாரமிக்கது. நிதி ஒதுக்கீட்டுச் சட்ட வரைவு சட்டமன்றத்தில் (கீழவை) மட்டுமே அறிமுகப்படுத்தப்படுகிறது.

நிதிமசோதா கொண்டுவரும்போது மைய அரசில் பின்பற்றும் முறையே பின்பற்றப்படுகிறது. ஐந்து நிலைகளாக மூன்று முறை படிக்கப்பட்டபின், ஆளுநரின் அனுமதியுடன் இது சட்டமாகும். சட்ட மன்ற அவையின் நடவடிக்கைகளுக்கு அமைச்சர்கள் பொறுப்பாவார்கள். பொறுப்பில் உள்ள அமைச்சர்கள் சட்டமன்ற உறுப்பினர்களால் கேட்கப்படும் கேள்விகளுக்கு பதில் அளிக்கவேண்டும். நம்பிக்கையில்லா தீர்மானம் சட்டப் பேரவையில் நிறைவேற்றப்பட்டால், அமைச்சரவை கலைக்கப்படும். நிருவாகம் சட்ட மன்ற நிகழ்வுக்குக் கடமைப்பட்டுள்ளது.

**செயல்பாடு**

சட்ட மன்றத்தில் கேள்வி நேரம் என்பது என்ன ? இது தேவையா ?

மாநில நிருவாகம், உயர் அதிகாரிகளைக் கொண்ட குழுவால் நிருவகிக்கப்படுகிறது. இக்குழுவில் இந்திய ஆட்சிப்பணி அலுவலர்கள், இந்தியக் காவல் பணி அலுவலர்கள் மற்றும் மாநில அரசுப் பணியாளர்கள் குழுவால் தேர்ந்தெடுக்கப்பட்ட சார்நிலைப் பணியாளர்கள் ஆகியோர் அடங்குவர்.

## பயிற்சி

### அ. சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக.

1. இந்தியா __________ உள்ளடக்கியது.

   அ) 26 மாநிலங்கள் மற்றும் 6 யூனியன் பிரதேசங்கள்

   ஆ) 24 மாநிலங்கள் மற்றும் 7 யூனியன் பிரதேசங்கள்

   இ) 27 மாநிலங்கள் மற்றும் 5 யூனியன் பிரதேசங்கள்

   ஈ) 28 மாநிலங்கள் மற்றும் 7 யூனியன் பிரதேசங்கள்

2. மாநில நிருவாகத்தின் தலைவர்.

   அ) முதல் அமைச்சர் ஆ) குடியரசுத் தலைவர்

   இ) பிரதம மந்திரி ஈ) ஆளுநர்

3. ஆளுநரை நியமிப்பவர்

   அ) அமைச்சரவை ஆ) அமைச்சர்கள்

   இ) முதல்அமைச்சர் ஈ) குடியரசுத் தலைவர்

4. முதலமைச்சரையும் மற்றும் மற்ற அமைச்சர்களையும் நியமிப்பவர்.

   அ) குடியரசுத் தலைவர் ஆ) பிரதம அமைச்சர் இ) ஆளுநர் ஈ) நீதிபதி

5. அவசர சட்டங்களை வெளியிடுபவர்.

   அ) மாநில சட்டமன்றம் ஆ) முதலமைச்சர் இ) பிரதம மந்திரி ஈ) ஆளுநர்

### ஆ. குறுகிய அளவில் விடையளி.

1. இந்தியாவுள்ள மாநிலங்கள், மற்றும் யூனியன் பிரதேசங்கள் எண்ணிக்கைகள் யாவை ?
2. இந்தியாவின் தலைநகர் யாது ?
3. அமைச்சரவை எவ்வாறு அமைக்கப்படுகிறது ?
4. "கூட்டு பொறுப்புணர்வு" என்றால் என்ன ?
5. மாநில சட்டமன்றத்தின் கடமைகள் யாவை ?
6. சபாநாயகரின் பங்கு என்ன ?

### இ. பத்தியளவில் விடையளி.

1. ஆளுநரின் அதிகாரங்கள் மற்றும் பணிகள் யாவை ?
2. முதலமைச்சரின் முதன்மைப் பணிகள் யாவை ?
3. அமைச்சரவை பற்றி விளக்கு ?
4. சட்ட மேலவையின் உறுப்பினர்கள் எவ்வாறு தேர்ந்தெடுக்கப்படுகின்றனர் ?

# 3. குடிமக்களின் உரிமைகளும் கடமைகளும்

இந்திய அரசியலமைப்பை வகுத்துக் கொடுத்தவர்கள், மக்களின் அடிப்படை உரிமைகளுக்கு அங்கீகாரம் தேவையென்பதை உணர்ந்து, அவற்றை அரசியல் மற்றும் சட்டரீதியான நடவடிக்கையிலிருந்து பாதுகாக்க வேண்டும் என்று கருதி உருவாக்கியதே குடிமக்களின் உரிமைகளும் கடமைகளும் ஆகும். இத்தகைய உரிமைகளுக்கு அரசியலமைப்பு மூலம் உத்திரவாதம் அளிக்கப்பட்டு, ஜனநாயக முறை காக்கப்படவேண்டும் எனக் கருதி அரசியலமைப்பை உருவாக்கிய சிற்பிகள், இந்திய அரசியலமைப்பின் மூன்றாம் பகுதியில் தனித் தலைப்பில் இதனை வரையறுத்துள்ளனர்.

உரிமைகளின்றி பொறுப்பற்றத் தன்மையில் செயல்படும் போது, ஒழுங்கின்மைக்கும், கட்டுப்பாடற்ற தன்மைக்கும் நாட்டை இட்டுச் செல்லும். எனவே, 1976ஆம் ஆண்டு 42–வது அரசியலமைப்புத் திருத்தம் நான்காம் பகுதியில் தனித்தலைப்பில் குடிமக்களின் அடிப்படைக்கடமைகள் சேர்க்கப்பட்டுள்ளன. அரசியலமைப்பை வடிவமைத்துக் கொடுத்தவர்கள், அரசியலமைப்பு அடிப்படையில், சமூக நலத்தை பேணிக் காப்பதற்காக, ஆட்சியாளர்கள் மக்களுக்கு ஆற்ற வேண்டிய கடமைகளை வரையறுத்துள்ளனர். இவை அரசு நெறிமுறைக் கோட்பாடுகள் பகுதி IVஇல் கொடுக்கப்பட்டுள்ளது. பகுதி III, IV, மற்றும் IVA ஆகிய மூன்று பகுதிகளும் இந்திய குடிமக்களின் நலனை பேணுவதை அடிப்படை நோக்கமாகக் கொண்டுள்ளது. இது நலம் நாடும் அரசு செயல்பட அடிப்படையாக உள்ளது.

## அடிப்படை உரிமைகள்

இந்திய அரசியலமைப்பு மூன்றாவது பகுதியில், அரசியலமைப்புச் சட்ட பிரிவு 12 முதல் 35 வரை உள்ள பிரிவுகள் சில உரிமைகளை அடிப்படை உரிமைகளாக அங்கீகரிக்கிறது. அவை

1. சமத்துவ உரிமை – பிரிவு 14 – 18 வரை
2. சுதந்திர உரிமை – பிரிவு 19 – 22 வரை
3. சுரண்டலுக்கெதிரான உரிமை – பிரிவு 23 – 24 வரை




4. சமய சுதந்திர உரிமை – பிரிவு 25 – 28 வரை
5. பண்பாடு மற்றும் கல்வி உரிமை – பிரிவு 29 – 30 வரை
6. அரசியலமைப்பிற்கு தீர்வுக் காணும் உரிமை – பிரிவு 32

## சமத்துவ உரிமை

சட்டத்தின் முன் அனைவரும் சமம். எனவே சட்ட ரீதியாக, அனைவரும் சமமாக பாதுகாக்கப்பட வேண்டும். நமது அரசியலமைப்பு அனைத்து குடிமக்களின் சமத்துவ உரிமைக்கு உத்திரவாதம் அளிக்கிறது. கீழ்க்கண்ட உரிமைகள் சமத்துவ உரிமைகளாக குறிப்பிடப்பட்டுள்ளது.

1. சமயம், சாதி, பால், இனம் மற்றும் நிறம் அடிப்படையில் எவரையும் வேறுபடுத்தக்கூடாது–(சரத்து 15).

2. பொதுப்பணி மற்றும் வேலைவாய்ப்பு நியமனங்களின் சமவாய்ப்பு அளித்தல்–(சரத்து 16).

3. தீண்டாமை ஒழிப்பு – சமுதாயத்தில் பின் தங்கிய பிரிவினர்களின் நலனைப் பாதுகாத்தல் – (சரத்து 17).

4. அரசு அனுமதியின்றி பெறும் இராணுவம் மற்றும் கல்வி தவிர பட்டங்களைத் தடைச் செய்தல்– (சரத்து 18).

### சுதந்திர உரிமை

இந்திய அரசியலமைப்புச் சட்டப் பிரிவு 19–ல் சுதந்திர உரிமைக்கு உத்திரவாதம், அதன் குடிமக்களுக்கு அளிக்கப்பட வேண்டும் என்று அறிவிக்கிறது. அதன்படி,

1. பேச்சு மற்றும் கருத்துக்களை வெளியிடும் உரிமை.

2. ஆயுதமின்றிக் கூட்டங்களை அமைதியாக நடத்தும் உரிமை.

3. சங்கங்கள் மற்றும் கழகங்கள் ஏற்படுத்தும் உரிமை.

4. இந்தியாவின் எந்த பகுதிக்கும் செல்லும் உரிமை.

5. இந்தியாவின் எந்தப் பகுதியிலும் வாழும் உரிமை.

6. ஒருவர் எந்தத் தொழிலையும் அல்லது பணியையும் மேற்கொள்ளும் உரிமை

இந்திய அரசியலமைப்பு சட்டம் பிரிவு 20–ன்படி ஒருவரைத் தகுந்த காரணமின்றி கைது செய்வதற்கு தடை விதிக்கிறது. மேலும் ஒரே குற்றத்திற்காக ஒருமுறைக்கு மேல் தண்டிக்கக்கூடாது என்றும் அறிவுறுத்துகிறது. யாரையும் சுய விருப்பின்றி சாட்சியாக்க கட்டாயப்படுத்தக்கூடாது.

இந்திய அரசியலமைப்பு சட்டம், பிரிவு–21 தனி மனித வாழ்வு மற்றும் தனி மனித சுதந்திரத்தை உறுதி செய்கிறது. தனது சுதந்திரத்தினை, மற்றவர்களின் சுதந்திரம் பாதிக்கப்படாத வகையில் அனுபவிக்கவேண்டும்.

இந்தியஅரசியலமைப்பு சட்டப்பிரிவு 22–ன்படி எவரையும் விசாரணையின்றி கைது செய்யக்கூடாது. மேலும் மக்களை விசாரணையின்றி கைது செய்யப்படும் போது, பாதுகாப்பு அளிப்பதோடல்லாமல் கைது செய்வதற்கான காரணத்தைத் தெரிவிக்கும்படி கேட்கவும் உரிமையை அளிக்கிறது. சட்ட வல்லுநர்களை கலந்தாலோசிக்கவும், கைது செய்யப்பட்ட 24 மணி நேரத்திற்குள் கிரிமினல் வழக்குகளில் நீதிபதி முன் ஆஜர்படுத்தவும் பாதுகாப்பு அளிக்கிறது.

### ஏய்த்தலுக்கு எதிரான உரிமை

ஒருவரை கட்டாயமாகவோ அல்லது ஊதியமின்றியோ வேலை செய்ய வைத்தல் கூடாது என்று இந்திய அரசியலமைப்பு 23வது பிரிவு கூறுகிறது. அடிமைமுறை, பெண்களையோ குழந்தைகளையோ மனித வியாபாரத்திற்கு தவறான முறையில் பயன்படுத்தக் கூடாது. மாற்றுத்திறன் உடையவர்களையும் (ஊனமுற்றோர்) பயன்படுத்தக்கூடாது. 14 வயதிற்குகீழ் உள்ள குழந்தைகளை, குழந்தைத் தொழிலாளர்களாக தொழிற்சாலை மற்றும் சுரங்கத் தொழிலில் அல்லது பாதுகாப்பற்ற பணிகளில் ஈடுபடுத்துவதைத் தடைச் செய்ய பிரிவு 24, வழி செய்கிறது.



## சமய சுதந்திர உரிமை

நமது அரசியலமைப்பு இந்திய குடிமக்கள் அனைவருக்கும் சமய சுதந்திரத்தினை அளிக்கிறது. எல்லா சமயங்களும் ஒரே மாதிரியாகக் கருத



வேண்டும். இந்தியா சமய சார்பற்ற நாடு என்பதால் அரசு என்பது மனிதனுக்கும் மனிதனுக்கும் உள்ள உறவே தவிர மனிதனுக்கும் கடவுளுக்கும் அல்ல என்பதை வலியுறுத்துகிறது. அனைத்து சமய அமைப்புகளும் தங்களது விவகாரங்களை நிருவகித்துக் கொள்ள சுதந்திரம் வழங்கப்பட்டுள்ளது. பிரிவு 25இல் மதத்தைப் பின்பற்றி, பரப்புவதற்கான சுதந்திரம் உண்டு என்று உத்தரவாதம் அளிக்கிறது.

மேலும் மதச்சார்பான நிறுவனங்களை நிறுவவும், நடத்தவும், தருமப்பணிகளை மேற்கொள்ளவும் உறுதியளிக்கிறது. குறிப்பிட்ட சமயத்தின் பராமரிப்பிற்கும், வரி செலுத்துவதற்கும் பிரிவு 27 உரிமையை வழங்குகிறது.

அரசியலமைப்பு பிரிவு 28 கல்வி நிறுவனங்களில் எந்தவிதமான சமயப் போதனைகளையோ, அல்லது வழிபாட்டையோ மத நிறுவனங்களைத் தவிர அரசு நிதிபெறும் கல்வி நிறுவனங்கள் பின்பற்றக் கூடாது.

## பண்பாட்டு, கல்வி உரிமைகள்

இந்தியா பல மொழிகள், எழுத்துக்கள் மற்றும் பண்பாடுகளைக் கொண்ட நாடு. அரசியலமைப்பு பிரிவு 29–ன்படி சிறுபான்மையினர் மொழி, எழுத்துப் பண்பாட்டைப் பாதுகாக்கிறது. பிரிவு–30 சிறுபான்மையினர் கல்வி நிறுவனங்களை நிறுவவும் மற்றும் நிருவகிக்கவும் உரிமை அளிக்கிறது.

## அரசியலமைப்பிற்கு தீர்வுக் காணும் உரிமை

நமது அரசியலமைப்பு பிரிவு 32 குடிமக்களின் அடிப்படை உரிமைகள் மீறப்படும்போது, நேரிடையாக மக்கள் உச்ச நீதிமன்றத்தில் வழக்குகள் தொடர்ந்து பாதுகாப்பினைப் பெற உதவுகிறது. உச்ச நீதிமன்றம் மற்றும் உயர்நீதி மன்றம் நீதி ஆணைகள், ஆட்கொணர் நீதிப் பேராணை, கீழ்மன்றத்திற்கு வரும் கட்டளை நீதிப் பேராணை, வழக்கு விசாரணைத் தடை ஆணை, உரிமை வினா நீதிப் பேராணை, பத்திரத்தைக் கொண்டு வந்து முன்னிலைப்படுத்தக் கீழ்மன்றங்களுக்கு இடப்படும் கட்டளை போன்ற நீதிமன்ற உத்தரவுகளை பிறப்பிக்கலாம்.

## கல்வி உரிமை

பிரிவு 21–A, 2009–ல் இலவச கட்டாயக் கல்வி ஆறு வயதிலிருந்து 14 வயதிற்குட்பட்டவர்களுக்கு அளிக்க சட்டம் வெளியிட்டுள்ளது.

## அடிப்படைக் கடமைகள்

1976ஆம் ஆண்டு கொண்டவரப்பட்ட 42–வது அரசியலமைப்பு சட்ட திருத்தத்தின்படி, இந்திய அரசியல் சட்டம் பகுதி IV-A பிரிவு 51–A இல் இந்திய குடிமக்களின் கடமைகளை வலியுறுத்துகிறது.

1. அரசியல் சட்டம் , தேசிய சின்னம், தேசியக் கொடி மற்றும் தேசிய கீதத்திற்கு மதிப்பு அளித்தல்.



2. சுதந்திரப் போராட்ட வீரர்களின் உன்னத உணர்வை நினைத்துப் பேணுதல்.

3. நாட்டின் இறைமை ஒற்றுமை மற்றும் ஒருமைப்பாட்டை பாதுகாத்தல்.

4. நாட்டின் பாதுகாப்பிற்காகச் செயலாற்றுதல்.

5. மதம், மொழி, இனம், வகுப்பு வேற்றுமைகளைத் துறந்து, சகோதர உணர்வுடன் தேசிய ஒற்றுமை ஓங்கச் செய்தல்.

6. நம்முடைய பண்பாடு பன்முகப் பாரம்பரியக் கலாச்சாரத்தின் மேன்மையை மதித்தல்.

7. இயற்கை வளங்களையும், சுற்றுச் சூழலையும் பாதுகாத்து மேம்படுத்துதல்.

8. அறிவியல் மனப்பான்மை மற்றும் மனித நேயம் வளர்த்தல்.

9. பொதுச் சொத்துக்களைப் பாதுகாத்தல்.

10. தன்னுடைய முயற்சியினால் அனைத்துத் துறைகளிலும் தனிமனித மற்றும் கூட்டு நடவடிக்கைகளை மேம்படுத்துதல்.

11. பெற்றோர்கள் அல்லது பாதுகாவலர்கள் தங்கள் குழந்தைகளுக்கு கல்வி பெறுவதற்கு வாய்ப்பினை ஏற்படுத்திக் கொடுத்தல்.

### அரசு நெறிமுறைக் கோட்பாடுகள் அல்லது வழிகாட்டும் கோட்பாடுகள்

அடிப்படை உரிமைகள் மற்றும் கடமைகள் மட்டுமல்லாமல், இந்திய அரசியலமைப்பு நாட்டை வழிநடத்த அரசு நெறிமுறைக் கோட்பாடுகளை வழங்கியுள்ளது. நாட்டை நடத்துவதற்கும் மக்களின் சமூக நலனைப் பாதுகாப்பதையும் நோக்கமாகக் கொண்டுள்ளது. பகுதி IV, 36 முதல் 51 வரை உள்ள பகுதியில் நெறிமுறைக் கோட்பாடுகள் என்ற அரசு நெறிமுறைக் கோட்பாடுகள் இடம் பெற்றுள்ளன.

அரசு நெறிமுறைக் கோட்பாடுகள் அனைத்து குடிமக்களுக்கும் போதுமான சமூக பொருளாதார குறிக்கோள் மூலம் சமூக நலனை உருவாக்குகிறது. பெரும்பான்மையான நெறிமுறை கோட்பாடுகள் இந்திய அரசியலமைப்பு முகவுரையில் குறிப்பிட்டுள்ள சமய, பொருளாதார நெறிகளை நிலைநாட்டுவதற்கு வழிகாட்டவல்ல கொள்கையாகத் திகழ்கிறது. மேலும் இக்கோட்பாடுகள் சமூக, பொருளாதார,

அரசியல், நீதி, கல்வி, நிருவாகம், பண்பாடு மற்றும் சர்வதேச சமாதானம் மற்றும் பாதுகாப்பு ஆகியவற்றை உள்ளடக்கியுள்ளது. அரசு நெறிமுறை கோட்பாடுகள் மூன்று தலைப்புகளில் வகைப்படுத்தப்படுத்தப்பட்டுள்ளன.

1. அரசின் குறிக்கோள்கள்

2. அரசின் திட்டங்களை வடிவமைப்பது

3 அனைத்து குடிமக்களுக்கும் பாரபட்சமின்றி நேர்மையாக செயல்படுவது.

**மக்கள் நலனை அடைய அரசு பின்பற்றபடவேண்டிய நெறிமுறைகள்**

1. சமூக, பொருளாதார அரசியல் நீதி பெறுவது.

2. அனைத்து அமைப்புகளிலும் மக்கள் நலனைக் காக்க, வருவாய் ஏற்றத் தாழ்வை நீக்க வேண்டும்.

3. அனைவருக்கும் சம வேலைக்குச் சம உரிமை, சம ஊதியம், உடல் நலத்திற்கு தீங்கு விளைவிக்காத வேலைவாய்ப்பு, ஆண், பெண் இருவருக்கும் அளித்தல்.

4. சமுதாய பொருள் வளங்களை, இயற்கை வளங்களை பொது நலனுக்காக நியாயமான முறையில் பங்கிடுதல்.

5. சர்வ தேச சமாதானம் மற்றும் பாதுகாப்பு சமூக உறவு உருவாக்குதல்.

**அரசு திட்டங்களை செயல்படுத்த நெறிமுறைகள்**

1. பொருளாதார உரிமைகளை பெறுதல்.

2. சமநீதியும், இலவச சட்ட உதவியும் அளித்தல்.

3. இலவச மற்றும் கட்டாய ஆரம்பக் கல்வி அளித்தல்.

4. போதைப் பொருட்கள், மது தடை செய்தல்.

5. குடிசைத் தொழில்களை ஊக்குவித்தல்.

6. நவீன முறையில் கால்நடைத்துறை, வேளாண்மையினை அமைத்தல்.

7. கால்நடைகளை கொல்லுவதைத் தடைச்செய்தல்.

8. கிராம பஞ்சாயத்துக்களை உருவாக்கி அவை தன்னாட்சி அமைப்புகளாகச் செயல்படச்செய்தல்.

9. நலிவுற்ற பிரிவினரின் கல்வி மற்றும் வாழ்க்கைத்தரம் உயர்த்துதல்.

10. சுற்றுச் சூழலைப் பாதுகாத்தல்.

11. தேசிய நினைவு சின்னங்கள், இடங்கள், பொருட்கள் பாதுகாத்தல்.

12. நிர்வாகத் துறையிலிருந்து நீதித்துறையை தனிமைப்படுத்துதல்.

**அரசு நெறிமுறைக் கோட்பாட்டின் தாக்கம்**

1. அடிப்படை வசதிகள் பெறுதல்.

2. ஆண், பெண் என்ற வேறுபாடின்றி சமவேலைக்கு சமஊதியம் பெறும் உரிமை.

3. பொருளாதார சுரண்டலுக்கெதிரான உரிமை.

4. குழந்தைகளையும், இளைஞர்களையும் சுரண்டலிலிருந்தும் ஒழுக்கக் கேடுகளிலிருந்தும் பாதுகாத்தல்.

5. சமநீதியும் இலவச சட்ட உதவியும் பெறச் செய்தல்.

6. பணிபுரிவதற்கான உரிமை.

7. வேலையற்றோர், முதியோர், பிணியாளர் ஆகியோருக்கு அரசு உதவி அளித்தல்.

8. மனிதாபிமானம் அமைந்த பணிச் சூழல்களை அமைத்து மகளிருக்கு மகப்பேறு உதவி அளித்தல்.

9. சீரான வாழ்க்கைத் தரத்தை பணியாளர்களுக்கு அமைத்தல்.

10. தொழில்களின் நிர்வாகத்தில் தொழிலாளர் பங்கேற்புக்கு வழி வகுத்தல்.

11. அனைத்து குழந்தைகளும் இலவச மற்றும் கட்டாயக் கல்வி பெறும் உரிமை.

மேற்கண்ட அரசு நெறிமுறைக் கோட்பாடுகளை அரசு செயல்படுத்த வேண்டும். இவை சட்டத்தின் மூலமாக கட்டாயப்படுத்தக் கூடாது. இந்திய அரசியலமைப்பின் முகவுரையில் குறிப்பிட்டுள்ளபடி செயல்படுத்த வேண்டும்.

## பயிற்சி

### அ. சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுது.

1. குடிமக்களின் அடிப்படை கடமைகள் பற்றி விளக்கும் அரசியலமைப்புத்திருத்தம்

   அ) 42 ஆ) 45 இ) 48 ஈ) 52

2. அடிப்படை உரிமைகள்________ தலைப்புகளில் பிரிக்கப்பட்டுள்ளது.

   அ) 8 ஆ) 5 இ)6 ஈ) 7

3. இந்தியா ஒரு ________ நாடு.

   அ) சமயசார்புள்ள ஆ) சமயசார்பற்ற இ) இந்து ஈ) கிறிஸ்தவ

4. சிறுபான்மையினர் கல்வி நிறுவனங்களை அனுமதிக்கும் அரசியலமைப்புத் திருத்தம்.

   அ) 40 ஆ) 30 இ) 50 ஈ) 60

5. அரசியலமைப்பு 19 திருத்தம் குடிமக்களுக்கு ________ உரிமைகளை வழங்குகிறது.

   அ) 7 ஆ) 9 இ) 6 ஈ) 5

### ஆ. குறுகிய அளவில் விடையளி.

1. அடிப்படை உரிமைகளைபற்றி சுருக்கமாக வரைக.
2. மதச்சார்பான உரிமை என்றால் என்ன ?
3. நெறிமுறைக் கோட்பாடுகள் என்றால் என்ன ?
4. ஆணைகள் பற்றிச் சிறுகுறிப்பு வரைக.

### இ. பத்தியளவில் விடையளி.

1. அடிப்படைஉரிமைகள் பற்றி விவரி.
2. அரசு நெறிமுறைக்கோட்பாடுகளைப்பற்றி விளக்கு.

## 4. தமிழகத்தின் தற்கால சமூகச்சிக்கல்கள்

### சமூக ஏற்றத்தாழ்வுகள்

அனைத்து நாடுகளிலும் சமூகப் பிரிவுகள் காணப்படுகின்றன. ஆனால் இந்தியாவின் சாதிமுறை விசித்திரமான ஒன்று. இங்கு சமூக அந்தஸ்து, பொறுப்புகள், சமூக மதஉரிமைகள் மற்றும் வேலை வாய்ப்புகள் போன்றவை பிறப்பை ஒட்டியே தீர்மானிக்கப்படுகின்றன. இத்தகைய பிறப்பு சார்ந்த சமூக பிரிவுகளே, சமூக ஏற்றத்தாழ்வுகளுக்கும் மற்றும் சமூக அநீதிக்கும் வழிவகுக்கின்றன. சமூகத்தில் பெரும்பான்மையோர் கைவினைஞர்கள் போன்று உடலுழைப்பை மேற்கொண்டனர். இவர்கள் சூத்திரர்கள் மற்றும் பஞ்சமர்கள் என்று அழைக்கப்பட்டனர். கல்வி, அரசுவேலை வாய்ப்புகள், கோயில் உரிமைகள், சொத்து மற்றும் வழித்தடங்கள், குளங்கள் போன்றவை இம்மக்களுக்கு விலக்கப்பட்டிருந்தன. இத்தகைய நிலை சமூகத்தின் பெரும்பான்மையோரை, உயர்சாதி மக்கள் சுரண்டும் நிலைக்கு தள்ளியது.

தமிழகத்தில் சங்க காலத்தில் சதுர்வர்னா அடிப்படையிலான ஜாதிமுறை நடைமுறையில் இல்லை. களப்பிரர்கள் ஆட்சிக்குப்பின் குறிப்பாக, பல்லவர்கள், சோழர்கள் மற்றும் பாண்டியர்கள் காலத்தில் பிராமணர்கள் சமூகத்தில் உயர்நிலை அடைந்தனர். அவர்கள் தங்களின் வேத யாகங்கள் மற்றும் சுமிருதிகள் மூலமாக, மன்னர்களை கவர்ந்தனர். படிப்படியாக அரச குடும்பத்தை வர்ண முறையை ஏற்றுக்கொள்ளச் செய்தனர். பக்தி இயக்கத்தின் மூலமாக கோயில் முறை மிக முக்கிய சமூக, அரசியல் பொருளாதாரக் காரணியாக மாறியது. பிராமணர்கள் தங்களது "ஆகமங்களின்" மூலமாக செல்வம் கொழிக்கும் கோயில்களுக்கு பூசகர்களாகத் தங்களை ஆக்கிக் கொண்டனர். ஏற்கனவே வேதங்கள் மற்றும் சுமிருதிகளில் தேர்ந்தவர்கள் என்ற முறையில், நிரந்தர வருவாய் தரும் செழிப்பான கிராமங்களை மானியங்களாகப் பெற்றனர். கோயில் முறை சார்ந்த கல்வி, உயர்ந்த பதவிகள், சொத்துரிமைகள் போன்றவை உழைக்கும் உழவர்கட்கும், கைவினைஞர்கட்கும் மறுக்கப்பட்டன. இவர்கள் சூத்திரர்கள் என்றும், நிலமற்ற கூலிகள் பஞ்சமர்கள் என்றும் சிறுமைப்படுத்தப்பட்டனர். இவ்வாறு தமிழ்நாட்டில், பெரும்பான்மையோர் உரிமைகள், சொத்துகள், கல்வி, பதவி மற்றும் சமூக அந்தஸ்து போன்றவற்றிலிருந்து விலக்கப்பட்டு பல்லாயிரக்கணக்கான வருடங்கள் தொடர்ந்ததால், இன்றைய காலத்தில் அவர்களது வெறுக்கத்தக்க பின்தங்கிய நிலைமை உருவானது.

சாதியின் ஒரு தீட்சியே தீண்டாமை ஆகும். சூத்திரர்களும் தீண்டாமையின் கொடுமைக்கு ஆளாக்கப்பட்டனர். இப்போதும் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் (தலித்) அடிப்படை உரிமைகள் மறுக்கப்படுபவர்களாய் தொடர்கிறார்கள். இதன் விளைவாக அவர்களுக்கு அடிப்படை உரிமைகள் மறுக்கப்படுவதோடு, கொடிய இழிவுகளுக்கும் ஆளாக்கப்படுகின்றனர்.



டி.எம். நாயர்

பிராமணர்களின் ஏகபோக ஆதிக்கம், உயர்கல்வி, அரசு வேலை வாய்ப்புகள் பொது நிறுவனங்கள் மற்றும் அத்தியாவசிய சேவைகளில் காணப்பட்டதால், பிராமணரல்லாதவர்கள் ஒரு பிராமணரல்லாதோர் இயக்கத்தை ஆரம்பிக்க காரணமாக அமைந்தது. 1912ஆம் ஆண்டு, சி.நடேசமுதலியார் ஒரு திராவிட விடுதியை பிராமணரல்லாத மாணவர்களுக்காக சென்னையில் நடத்தினார். பி.தியாகராய செட்டி மற்றும் டாக்டர்.டி.எம்.நாயர் போன்றோர் ஒரு சமூக அரசியல் இயக்கத்தை (தென்னிந்திய நல உரிமைச் சங்கம்) நீதிக்கட்சி என்று மக்களால் அழைக்கப்பட்ட இயக்கத்தை உருவாக்கினர். இந்த இயக்கம் பிராமணர் அல்லாதவர்களுக்கு அரசியல் சட்ட ரீதியிலான பாதுகாப்பிற்காக செயல்பட்டது. இக்கட்சி இரட்டை ஆட்சிமுறையின்படி சென்னை மாகாணத்தில் ஆட்சியைக் கைப்பற்றி, 16 ஆண்டுகள் ஆட்சி நடத்தியது. (1921–37)

நீதிக்கட்சியின் ஆட்சிக் காலகட்டத்தில் "வகுப்பு உரிமை ஆணை" மூலம் அரசு வேலை வாய்ப்பில் அந்தந்த வகுப்புகளின் மக்கள் தொகைக்கேற்ப இட ஒதுக்கீடு செய்யப்பட்டது. "சமஸ்கிருதம் கட்டாயம்" என்ற பிரிவை நீக்குவது மூலம், பிராமணரல்லாதவர் மருத்துவ கல்லூரிகளில் சேருவதற்கு வாய்ப்பு ஏற்படுத்தப்பட்டது

செல்வ வளம்மிக்க கோயில்களின் மீது இருந்த பிராமணரின் ஏகபோக ஆதிக்கம் இந்து சமய அறநிலைய மசோதா மூலம் கட்டுப்படுத்தப்பட்டது. தமிழகத்தின் முதல் பெண் மருத்துவரான டாக்டர் முத்துலட்சுமி ரெட்டி அவர்களது அயராத உழைப்பால் தேவதாசி முறை நீக்கப்பட்டது. இங்கிலாந்து பாராளுமன்றத்தில் நிறைவேற்றப்பட்ட பஞ்சமி நில சட்டத்தைப் பயன்படுத்தி, தாழ்த்தப்பட்ட சாதிகளுக்கு நிலங்கள் ஒதுக்கீடு செய்யப்பட்டன. நிலமற்ற வேலையாட்களின் நிலையை உயர்த்த மிராசுதாரர் முறை ஒழிக்கப்பட்டது.



முத்துலட்சுமி ரெட்டி

முதன்முறையாக இந்தியாவில் சென்னை மாகாணத்தில் பெண்களுக்கு வாக்குரிமை வழங்கப்பட்டது. நீதிக்கட்சியின் ஆட்சிக்காலத்தில், சென்னை சிந்தாதிரிப்பேட்டை பள்ளியில் ஏழைக் குழந்தைகள் தொடர்ந்து கல்வி பெறுவதை ஊக்குவிப்பதற்காக மதிய உணவு திட்டம் அறிமுகப்படுத்தப்பட்டது. சென்னை மாநிலத்தில் தொழிற்சாலைகளை ஊக்குவிக்கவும் முறைப்படுத்தவும் தொழிற்பேட்டைகளை அறிமுகப்படுத்திய பெருமை நீதிக் கட்சியினரையேச் சாரும்.

### சாதி முறை

சாதி சீர்திருத்தங்கள் மற்றும் சாதியற்ற சமூக அமைப்பு, முற்போக்கான எந்த ஒரு சமூகமும் சாதி முறை மற்றும் அதன் பிறவடிவங்களையும் புறக்கணிப்பதாய் இருக்க வேண்டும். சாதி முறையை சீர்படுத்த சில இயக்கங்கள் முன்வந்தன. மகாத்மா காந்தி உள்ளிட்ட சனாதன ஆதரவாளர்கள் தீண்டாமையை மட்டும் ஒழிக்க முற்பட்டனர். ஆனால் அவர்கள் வர்ண முறையை நியாயப்படுத்தினர். தயானந்த சரஸ்வதி (ஆரிய சமாஜ்) சாதியை வெறுக்கின்ற அதே வேளையில், வர்ணத்தை நியாயப்படுத்தினார். தமிழ்நாட்டில் சித்தர், இராமலிங்க வள்ளலார் மற்றும்

வைகுந்தசாமி ஆகியோர் சாதி முறையை முற்றிலும் எதிர்த்தனர். மகாராஷ்டிராவில் மகாத்மா பூலே மற்றும் சாகு மகாராஜ், கேரளாவில் நாராயண குரு, தமிழ்நாட்டில் அயோத்தி தாச பண்டிதர் ஆகியோர் வர்ணத்தையும் சாதியையும் மறுத்தனர்.



காந்தியடிகள்



இராமலிங்க அடிகளார்

சென்னை மாகாணத்தில் இரட்டையாட்சி சட்ட மன்றத்தில் பிராமணர் அல்லாதோருக்கு சில இடங்களை ஒதுக்கீடு செய்தது, முதல் நடவடிக்கையாகும். அரசுப் பணிகளில் விகிதாச்சார அடிப்படையில் அனைத்து சமூகப் பிரிவுகளுக்கும் இட ஒதுக்கீடு செய்வதை உறுதி செய்யும் வகுப்புவாரி அரசாணை என்பது மற்றொரு முக்கியமான நடவடிக்கையாகும். கோயில் நுழைவு சட்டங்களுடன் சீர்த்திருத்தவாதிகள் மனநிறைவு அடையும் போது, சாதி முறையை எதிர்த்தவர்களோ, ஒடுக்கப்பட்ட மற்றும் பிற்படுத்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்தவர்கள் அனைத்துத் துறைகளிலும் சமவாய்ப்புப் பெற உழைத்தனர்.

சுதந்திரத்திற்கு பின், தமிழ்நாட்டில் கல்வி நிலையங்களில் பிற்படுத்தப்பட்ட மற்றும் ஒடுக்கப்பட்ட சமுதாயத்திற்கு இட ஒதுக்கீடு செய்வதற்கு எதிராக பெறப்பட்ட நீதிமன்ற உத்தரவுகள், சமூக நீதிக்கு பெரிய சவாலாக அமைந்தன. பெரியார் ஈ.வே.ராமசாமி இந்த உத்திரவிற்கு எதிராக ஒரு மிகப்பெரிய போராட்டத்தை துவக்கினார். காங்கிரஸிசில் காமராஜ், தி.மு.க.வில் சி.என்.அண்ணாதுரை ஆகியோர்பெரியாரின் கோரிக்கைகளுக்கு ஆதரவாக இருந்தனர்.



கே. காமராஜர்

இறுதியில் மாநில அரசுகள் இடஒதுக்கீட்டு கொள்கையைப் பின்பற்றுவதற்கு வாய்ப்பளிக்கும் வகையில் அரசியல் அமைப்பின் அடிப்படை உரிமைகள் பிரிவில் திருத்தம் செய்யும் முதலாவது அரசியல் சட்டதிருத்த மசோதாவை பண்டித ஜவஹர்லால் நேரு கொண்டு வந்தார். தற்போது தமிழ்நாட்டில் நடைமுறையில் உள்ள இடஒதுக்கீடு

மிகவும் மேம்பட்டதாகவும், விரிவானதாகவும் உள்ளது. இதன்படி ஆதிதிராவிடருக்கு 18 சதவீதமும், பழங்குடியினர்க்கு 1 சதவீதமும், மிகவும் பிற்படுத்தப்பட்டவருக்கு 20 சதவீதமும் மற்றும் பிற்படுத்தப்பட்டவருக்கு 30 சதவீதமும் ஒதுக்கீடு செய்யப்பட்டதுடன் அருந்ததியருக்கும், பிற்படுத்தப்பட்ட முஸ்லீம்களுக்கும் உள் ஒதுக்கீடு மற்றும் மகளிருக்கு உள்ளாட்சி அமைப்புகளில் போதிய ஒதுக்கீடு, சில குறிப்பிட்ட வேலை வாய்ப்புகளில் மகளிருக்கு முழு ஒதுக்கீடும் ஏற்படுத்தப்பட்டுள்ளது.



சி.என். அண்ணாதுரை

## தந்தை பெரியார்

ஈ.வே.ராமசாமி (ஈ.வே.ரா) சாதிமுறைக்கு எதிரான ஒரு தீவிரமான போராளி. 1924–ல் கேரளாவில் வைக்கம் என்னுமிடத்தில் சூத்திரர்கள், பஞ்சமர்கள் என்ற தாழ்த்தப்பட்ட மக்கள் பொது தெருவின் வழியாகச் செல்ல சமமான உரிமைப்பெற போராட்டம் நடத்தியபோது பெரியார் அதன் தலைமைப் பொறுப்பை ஏற்றிருந்தார். அவர் வ.வே.சு.அய்யரால் நடத்தப்பட்டுவந்த சேரன்மாதேவி குருகுலத்தில் வர்ணாசிரமம் பாகுபாடு, பின்பற்றப்படுவதை எதிர்த்தார். தமிழ்நாடு காங்கிரஸ் கட்சியின் தலைவர் என்ற முறையில் அரசியல் மற்றும் ஆட்சித் துறைகளில் வகுப்புவாரிப் பிரதிநித்துவம் கிடைத்திடப் போராடினார். அவரது சுயமரியாதை இயக்கம், சூத்திரர்கள் மற்றும் பஞ்சமர்களை சமூக பண்பாடு மற்றும் மத அடிமைத்தனத்தில் இருந்து விடுவித்ததையும், பெண்கள் சரிநிகர் சமானநிலையை அடைவதையும் நோக்கமாகக் கொண்டதாகும். திராவிடர்களை பிராமணீய ஆதிக்கத்தில் இருந்து விடுவித்து, இந்து வாழ்க்கையின் அனைத்துத் துறைகளிலும் இவர்களை கொடுமையாகவும், ஏமாற்று வழிகளிலும் கட்டுப்படுத்தி வைத்திருப்பதை உணர வைப்பது என்ற நோக்கத்தையும் சுயமரியாதை இயக்கம் கொண்டிருந்தது. அவர் சாதிமுறையை ஏற்க மறுத்ததுடன் சாதி மறுப்புத் திருமணங்களையும் ஊக்குவித்தார்.



ஈ.வே. இராமசாமி

புரோகிதம் தவிர்த்த சுயமரியாதைத் திருமணமுறைகளையும் அறிமுகப்படுத்தினார். அவரே பல திருமணங்களையும் சடங்குகளின்றி நடத்திவைத்தார். சமூக மாற்றத்தின் அடிப்படையாக பகுத்தறிவையும், மனிதாபிமானத்தையும் வலியுறுத்தினார். அவர் குடியரசு, புரட்சி, விடுதலை என்ற தமிழ் இதழ்களையும், 'ரிவோல்ட்' என்ற ஆங்கில இதழையும் வெளியிட்டு தன்னுடைய கொள்கைகளை பரப்பினார். 'சாதி' கொடுமையின் ஆணிவேர்

என்பதற்காக மனுவின் சட்டங்களை சாடினார். கல்வி நிறுவனங்களில் ஒடுக்கப்பட்ட சாதியை சேர்ந்தவகள் இட ஒதுக்கீடு பெறவும், அனைத்து சாதியினரும் அர்ச்சகராகும் உரிமை கோரியும் அவர் நடத்திய போராட்டங்கள் புரட்சிகரமானவை. பெண்கள் உரிமைகளுக்காக அவர் நடத்திய போராட்டங்கள் அவருக்கு 'பெரியார்' என்ற பட்டத்தை பெற்று தந்தன.

டாக்டர். பி.ஆர். அம்பேத்கர்

ஆழமான மக்களாட்சிக் கோட்பாடுகளைக் கொண்ட இந்திய அரசியலமைப்புச் சட்டம், சாதி முறையை அங்கீகரிக்கவில்லை. குறிப்பாக தீண்டத்தகாதவர்களுக்கு எதிரான பாகுபாடுகளை அது தடை செய்கிறது. இந்தியாவின் மாபெரும் சிந்தனையாளர்கள் தலைவர்களான புத்தர், மஹாவீரர் முதல் மகாத்மா ஜோதிபா பூலே, இராமலிங்க வள்ளலார், பெரியார் மற்றும் டாக்டர் அம்பேத்கார் வரை அனைவரும் சாதியை கடிந்து சாதியற்ற சமூகத்தை உருவாக்க வேண்டும் என்று வற்புறுத்தினர். இன்றைய முக்கியமான தேவை சமூகப் பிரிவுகளுக்கு இடையே உள்ள பிளவுகளை நீக்குவதற்காக சாதி மறுப்பு மணம், சாதித்தடைகளை அகற்றுதல், மத–சமூக–பண்பாட்டு–பொருளாதாரப் பிற்பட்ட நிலைகளை மாற்றுவதற்கான நடவடிக்கைகள் உள்ளிட்ட சிறப்பு நடவடிக்கைகள் ஆகும். இவையெல்லாவற்றிக்கும் தேவைபடுவது மக்களின் மனநிலை, சிந்தனை போக்கு மாற வேண்டும். சகோதர உணர்வுகள் சாதி உணர்வுகளை அகற்றிட வேண்டும்.

கல்வி, முறையான வாய்ப்பில்லாதவர்களை உயர்த்த முக்கியமான பங்கை வகிப்பது மட்டுமல்லாமல், பல்வேறு சமூக பிரிவுகளிடம் சமத்துவத்தை ஏற்படுத்தவும் உதவுகிறது. 19ம் நூற்றாண்டில் பிரிட்டிஷ் அரசாங்கத்தினால் அறிமுகப்படுத்தப்பட்ட அரசு நிதியுதவித் திட்டம் கிராமங்களில் அதிகமான பள்ளிகளை ஏற்படுத்தியது. காமராஜர் அரசால் அறிமுகப்படுத்தப்பட்ட மதிய உணவுத் திட்டம் எம்.ஜி.ஆர். ஆட்சியில் சத்துணவுத் திட்டமாக மேம்படு அடைந்தது. கல்விக் கட்டணம் பட்டப்படிப்பு வரை ரத்து செய்யப்படுதல், முதல் தலைமுறை மாணவர்களுக்கு சிறப்பு சலுகைகளுடன் பல்வேறுத் திட்டங்களை நடைமுறைப்படுத்துதல், சமூகத்தில் பிற்படுத்தப்பட்ட நிலையில் உள்ள பிரிவினரை மற்றவர்களுக்குச் சமமாக உயர்த்தும் சமநீதித்திட்டங்களில் 'சமச்சீர் கல்வி' முறையும் சிறப்பான இடத்தைப் பெறுகிறது.

### தீண்டாமை

இந்தியாவில் தீண்டாமை என்பது, அடிமைத்தனம் மற்றும் 'இனவெறி'யை விட மோசமானது. இந்தியாவில், பிரிட்ஷார் வரும் வரை தீண்டத்தகாதவர்கள் இந்து சமூகத்தினரால் விலக்கி வைக்கப்பட்டவர்களாக இருந்தனர். அவர்கள் தீண்டத்தகாதவர்கள் மட்டுமல்ல, அவர்கள் பார்க்க தகாதவர்கள் மற்றும் அண்டக் கூடாதவர்கள் என்றும் ஒதுக்கி வைக்கப்பட்டனர். அவர்களுக்கு படிக்கும் உரிமையில்லை. பொது கிராமங்கள் மற்றும் நகரங்களில் வசிக்கும் உரிமையில்லை. பொது வழிகள் மற்றும் குளம், குட்டைகளை உபயோகப்படுத்த உரிமையில்லை. கோயில்களுக்குச் செல்ல

அனுமதியில்லை, இடத்தை வாங்க அனுமதியில்லை, அலுவலக பணிகளை செய்ய உரிமையில்லை அல்லது நீதிமன்றங்களில் நீதியை தேடிப்பெற வழியில்லை. பெண்களுக்கு மேலாடையை உடுத்த அனுமதியில்லை. அவர்கள் காலணி அணியக் கூடாது. அவர்கள் குடை பிடிக்கக்கூடாது மற்றும் அவர்கள் நாகரிகமான பெயர்களை வைத்துக் கொள்ளக்கூடாது என்று பல கொடுமைகளுக்கு ஆளாக்கப்பட்டு இருந்தனர். 20ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பஞ்சமர்கள் மற்றும் சூத்திரர்கள் பொதுப் போக்குவரத்து வாகனம் மற்றும் பொது சிற்றுண்டி சாலைகளை பயன்படுத்த அனுமதிக்கப்படவில்லை. சுருங்கக்கூறின், அவர்களை மனிதர்களாகக் கூட நடத்தவில்லை. காலனி ஆதிக்கத்தின் போது, குறிப்பாக 19–ம் நூற்றாண்டின் இறுதிப்பகுதி மற்றும் 20–ம் நூற்றாண்டின் முற்பகுதியில், இந்த மனிதத்தன்மையற்ற முறைக்கு எதிராக குரல்கள் எழுந்தன. கல்வி, வேலை, மத உரிமைகள், சமூக அந்தஸ்து மற்றும் பொருளாதார வாய்ப்புகள் வேண்டி இந்தியாவின் பல்வேறு பகுதிகளில் குரல்கள் எழுந்தன. 19–ம் நூற்றாண்டில் தென் மாவட்டங்களில் நடைபெற்ற சாணார் கிளர்ச்சிக்கு பிறகு, பிரிட்டிஷ் அரசாங்கத்தின் தலையீட்டால், தீண்டத்தகாதோர் உள்ளிட்ட கீழ்சாதி பெண்கள், 'மேலாடை' அணியும் உரிமை பெற்றனர். நாடார்களின் கோயில் நுழையும் முயற்சிகள் மிகவும் கடுமையாக அடக்கப்பட்டன. பிரிட்டிஷ் அரசாங்கமும், கிறித்துவ பாதிரிமார்களும் தீண்டத்தகாதவர்களின் நிலைமை பற்றி மிகவும் கவலை அடைந்தனர். அவர்களில் பலர் கிறித்துவ மதத்தை தழுவினர். இத்தகைய பெரிய மத மாற்றம், இந்து தலைவர்களான தயானந்த சரஸ்வதி, ஜி.சுப்பிரமணிய ஐயர் மற்றும் மகாத்மா காந்தி போன்றோரின் கண்களை திறந்தது. அவர்கள் தீண்டாமையை ஒழிப்பதில் அக்கறை காட்டினர். காந்தி அவர்களை இந்துக்களாக அங்கீகரித்து அவர்களுக்கு 'ஹரிஜன்கள்' (கடவுளின் குழந்தைகள்) என்று பெயரிட்டார். காந்தி 'ஹரிஜன்' என்ற இதழை நடத்தி, அவர்களை உயர்த்தும் திட்டங்களை காங்கிரஸ் கட்சிக்குள் கொண்டு வந்தார். கோயில் நுழையும் நிகழ்ச்சிகளிலும் அவர் ஆர்வத்துடன் இருந்தார்.

தமிழ்நாட்டில் அயோத்திதாச பண்டிதர் புத்தமதத்தை தழுவுவதற்கு ஆதரவாக தன் கருத்துகளை தெரிவித்தார். எனினும் தமிழ்நாட்டில் பெரியாரும், இந்திய அளவில் பி.ஆர்.அம்பேத்காரும் ஆக்கபூர்வமாகச் செயல்பட்டு, பிற்படுத்தப்பட்ட பிரிவினர் மற்ற பிரிவினருடன் சரி நிகர் சமானமாய் வாழ்வதற்காக பல மாற்றங்களைக் கொண்டு வந்தனர். அம்பேத்கார் அவர்களின் முனைப்பால் தீண்டாமை, பொது இடங்களில் அனுமதி மறுக்கப்படுதல் மற்றும் கீழ்த்தரமாக நடத்துபடுதல் போன்றவை அனைத்தையும் குடியரசு அரசியலமைப்பு சட்டத்தில் குற்றங்களாக அறிவிக்கப்பட்டன.

1938–ம் ஆண்டு, இராஜாஜி தலைமையில் அமைந்த காங்கிரஸ் அமைச்சரவை 'ஹரிஜன்கள்' இந்து கோயில்களுக்குள் நுழைய, கோயில் நுழைவுச் சட்டங்களை கொண்டு வந்தது. மதுரை மீனாட்சி அம்மன் கோயிலில் தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சார்ந்தவர்கள் கோயிலுக்குள் நுழையும் உரிமைக்காக மதுரை வைத்தியநாத அய்யர் மற்றும் முத்துராமலிங்க தேவர் போன்றோர் தீவிரமாக செயல்பட்டனர். 2006ஆம் ஆண்டு கொண்டுவரப்பட்ட தமிழ்நாடு அர்ச்சகர் சட்டம், பிராமணரல்லாதவர் குறிப்பாக சூத்திரர்கள் மற்றும் பஞ்சமர்கள் கோயில்களில் அர்ச்சகராக வழிவகை செய்கிறது. சாதி முறை மற்றும் தீண்டாமையை இப்போதுள்ள அரசியலமைப்புசட்டம் ஏற்றுக்கொள்ளவில்லை. ஆனால் எந்த வித பாதுகாப்பும் இல்லை. கல்வி நிலையங்கள் மற்றும் அரசியல் நிருவாக அமைப்புகளில் உள்ள ஒதுக்கீட்டிற்கு அரசியலமைப்பு பாதுகாப்பு உண்டு.

இம்மக்களை ஆரோக்கியமற்ற மற்றும் மனிதநேயமற்ற பிற்போக்கு சிந்தனைகள் மற்றும் செயல்களிலிருந்து விடுபடுமளவிற்கு மனநிலையை மாற்றும் பணியைத்தான் முனைப்பாகச் செய்ய வேண்டியுள்ளது. குக்கிராமங்களில் உள்ள மக்களின் மனதிலும், அன்றாட செயல்பாடுகளில் உள்ள சாதிப்பாகுபாடுகள் இன்னும் அழிக்கப்படாமல் உள்ளன. பிற்போக்குச் சிந்தனைகளை எதிர்கொண்டு அவர்களுக்கு நல்லறிவை ஊட்டுவதில் முறை சார்ந்த மற்றும் முறை சாராக் கல்வி பெருமளவு உதவி செய்கிறது. அதனால் நல்ல ஆரோக்கியமான சகோதர மனப்பான்மை வலுப்பெறுவதுடன், சமூக ஒருமைப்பாடும் சமூக அமைதியும் ஏற்படும்.

### குழந்தைத் தொழிலாளர்

குழந்தை தொழிலாளர் பற்றிய குழுவின் அறிக்கை (1978–1979)–ன்படி, "குழந்தை தொழிலாளி, பொதுவாக குழந்தைகளில் ஒரு பிரிவினர் ஊதியம் பெற்றோ அல்லது ஊதியம் பெறாமலோ உழைப்பில் பங்கெடுத்தல்" என்ற முறையே குழந்தைத் தொழிலாளர் என வரையறுக்கப்பட்டுள்ளது.



குழந்தை தொழிலாளர்

குழந்தை தொழிலாளர் என்பவர், ஆறு வயதிலிருந்து பதினைந்து வயது வரை, பகல் வேளையில் பள்ளிக்குச் செல்லாமல் உழைக்கும் குழந்தை மற்றும் ஒரு வேலையளிப்பவரிடம் வேலை செய்வது அல்லது ஒரு தொழிற்பயிற்சியை "பயிலுபவராக" கற்றுக்கொள்வதை குறிக்கும். குழந்தை தொழிலாளி என்பது பொதுவாக பல வழிகளில் தெளிவுபடுத்தப்பட்டாலும்; முதலாவதாக, அது ஒரு பொருளாதார பயிற்சி, இரண்டாவதாக, அது ஒரு சமூக கொடுமை. உலகிலேயே இந்தியாவில் தான் அதிகமான குழந்தை தொழிலாளிகள் இருப்பதாக பொதுவான கருத்து நிலவுகிறது.

### குழந்தை தொழிலுக்கான களங்கள்

ஒரு குழந்தை வருவாய் பெறுவதற்காக, பல்வேறு வகையான செயல்களில் ஈடுபடுத்தப்படலாம். தானாகவோ அல்லது கட்டாயப்படுத்தப்பட்டோ குழந்தைகள் வேலைகளில் அமர்த்தப்படலாம். அமைப்பு சார்ந்த தொழிலிலோ, அமைப்பு சாராத தொழிலிலோ ஈடுபடுத்தப்படலாம். கம்பளம் நெய்தல், தீப்பெட்டித் தொழிற்சாலை, பட்டாசுத் தொழிற்சாலை, பீடி சுற்றுதல், உணவு விடுதிகள், மோட்டார் பழுதுபார்த்தல், கல்லுடைத்தல், காகிதம் பொறுக்குதல், வீட்டு வேலை செய்தல், பிச்சையெடுத்தல் போன்ற குறிப்பிடத்தக்கவை குழந்தை தொழிலுக்கான களங்கள் ஆகும்.

### குழந்தைத் தொழிலுக்கான காரணங்கள்

குழந்தைத் தொழிலுக்கான காரணங்கள் பல. ஏழ்மை இதற்கான முக்கிய காரணமாகும். குழந்தை வேலைவாய்ப்பு, பெற்றோர்களுடைய பொருளாதார தேவைக்கான அனுமதிக்கப்பட்ட ஒரு சுரண்டுதல் என்ற நிலை இப்போது இல்லை. பல நிகழ்வுகளில், பெற்றோர்களின் அக்கறையின்மை அல்லது அக்கறை குறைவு, குழந்தைகளை அவர்களது பிஞ்சு வயதிலேயே வேலையைத் தேட கட்டாயப்படுத்துகிறது. பெற்றோரின் குறைந்த வருமானம், குழந்தைகளின் குறைந்தபட்ச தேவைகளுக்குக் கூட போதாமல் குழந்தைகள் கல்வியை துறந்து வேலைகளில் சேருகின்ற நிலையை உருவாக்குகிறது.

பெரும்பாலும் ஏழ்மையுடன் மற்ற சமூக பண்பாட்டு காரணிகளும் குழந்தைகளை கைத்தொழில்களுக்குத் தூண்டுகின்றன. பெற்றோர்களிடம் எழுத்தறிவின்மை மற்றும் அறியாமை பெருமளவில் இருப்பதால், குழந்தைகளுக்கு தங்கள் எதிர்காலத்தைப் பற்றி வழிகாட்டுதல் கிடைப்பதில்லை, பொருளாதாரத் தேவைகளினால் குழந்தைகள் பணிகளுக்குத் தள்ளப்படுகின்றனர்.

### குழந்தைத் தொழிலாளியின் தாக்கம்

பொதுவாகக் கூறினால், உடலுழைப்பு, குழந்தைகளின் வளர்ச்சியில் ஒரு மோசமான பாதிப்பை உருவாக்குகிறது. சமூக உளவியல் ஆய்வுகள் இந்த பிரச்சனையின் தீவிரத்தைக் குறித்து படம் பிடித்துக் காட்டுகின்றன. உழைப்பின் தாக்கம், பொதுவான நிலை மற்றும் நற்பண்பு மீது அதிக பாதிப்பை ஏற்படுத்துகிறது. உடலுழைப்பு மற்றும் அதன் தொடர்புடைய மற்ற பணிகளின் அழுத்தம், குழந்தைகளை சிலசமயம் பலவீனம் அடையச் செய்கிறது. ஓர் உழைப்புச் சக்தியின் ஊற்றாக குழந்தையைப் பயன்படுத்துவது, பலருக்கு சமுதாயம் மற்றும் பொருளாதார பிரச்சனைகள் பற்றிய பல கேள்விகளை எழுப்புகின்றது. மக்கள் எண்ணிக்கையைப் பொறுத்தவரையில் குழந்தைகளின் பொருளாதார பங்களிப்பு ஒரு முக்கிய காரணியாயிருந்து, குறைந்த சம்பளத்தில் மேன்மேலும் குழந்தைத் தொழிலாளர் தேவை என்ற நிலையை உருவாக்குகிறது. மேலும் அது மக்கள் தொகை பெருக்கத்திற்கு வழி வகுக்குகிறது. குழந்தை தொழிலாளி, மற்ற பாதிப்புகளுடன் பெரியவர்களுக்கு வேலையில்லா நிலைமையை உண்டாக்குவதோடு குறைந்த உற்பத்தி, மனித சக்தியினை முழுமையாக பயன்படுத்த முடியாமல், பொருளாதார நஷ்டத்தை சமுதாயத்திற்கு ஏற்படுத்துகிறது.

### குழந்தை தொழிலுக்கு எதிராக அரசின் நடவடிக்கைகள்

சட்டங்கள் மூலம் ஆபத்தான குழந்தை தொழிலாளர்கள் உருவாவதை தடுப்பது அரசு முக்கிய பங்காற்றுகிறது. இந்திய அரசியலமைப்புச் சட்டம் 24வது பிரிவின்படி, பதினான்கு வயதிற்கு கீழ் உள்ள எந்த குழந்தையும் தொழிற்சாலை மற்றும் சுரங்கம் அல்லது பிற ஆபத்தான வேலைகளில் அமர்த்தக் கூடாது என்பதை தெளிவாக கூறுகிறது. இந்த அரசியலமைப்புச் சட்டம் தவிர்த்து, குறைந்தது 13 முக்கியச் சட்டங்கள் குழந்தைகளுக்காக ஏற்படுத்தப்பட்டுள்ளன. 1948ஆம் ஆண்டு தொழிற்சாலைச் சட்டம் , 1951ஆம் ஆண்டு பண்ணை தொழில் சட்டம், 1952ஆம் ஆண்டு சுரங்கச் சட்டம், 1950 ஆம் ஆண்டு வணிக கப்பல் சட்டம், 1961ஆம் ஆண்டு மோட்டார் (சீருந்து) போக்குவரத்து தொழிலாளர் சட்டம், 1938ஆம் ஆண்டு குழந்தை தொழிலாளர் சட்டம் போன்றவை பல மாநிலங்களில் கொண்டு வரப்பட்டன. இலவச மற்றும் கட்டாய ஆரம்பக் கல்வி, மதிய சத்துணவுத் திட்டம் மற்றும் பிற ஊக்குவிப்புகள் குழந்தைகள் தொழிலாளர்களாக மாறுவதை குறைப்பதற்கு வழியாக அமைந்துள்ளது.




குழந்தை தொழிலார்கள் மாநாடு

### அரசு சாரா அமைப்புகளின் பங்கு

சட்டத்திட்டங்களால் மட்டுமே குழந்தை தொழிலாளியாக மாறுவதை நீக்க முடியாது. அரசின் பல்வேறு திட்டங்களால், குழந்தை தொழிலாளர்களின் பிரச்சனைகளை நீக்குவதற்கு அல்லாமல்

குறைப்பதற்கு, எதிர்பார்த்தபடி விளைவுகள் ஏற்படாததற்கு மக்களின் பங்களிப்பின்மையும் ஒரு காரணம். மக்களிடம் விழிப்புணர்வை ஏற்படுத்துவது மற்றும் கட்டாய ஆரம்பக் கல்வியை பரப்பும் நிகழ்ச்சிகள், எளிய குடும்பங்களை உயர்த்தும் சமூக பாதுகாப்பு திட்டங்கள் மற்றும் சமூக கண்காணிப்பினால் குழந்தை தொழிலாளியை கண்டுபிடித்து தடுப்பது போன்ற பலவற்றை மேற்கொள்ள வேண்டும். இதில் அரசு–சாரா அமைப்புகள் முக்கிய பங்கை ஆற்ற முடியும்.

### அமைப்புச் சாரா தொழிலாளர்கள்

தற்காலத்தில் அமைப்புச் சாரா தொழிலாளர்களின் அவலநிலைகளை குறித்து ஒரு விழிப்புணர்வு வளர்ந்து வருகிறது. இந்த அமைப்பு சாரா தொழிலாளர்களை பொறுத்த வரையில் பணி தருபவர் – பணிபுரிபவர் பந்தமின்றி சமூக பாதுகாப்பு முறைகள் ஏதுமின்றி உள்ளது.



அமைப்பு சாரா தொழிலாளர்கள்

அமைப்புச்சாரா தொழிலாளர்களில் வேளாண்மை தொழிலாளர்கள், சிறு மற்றும் நடுத்தர விவசாயிகள், சாலைத் தொழிலாளர், சூளைத் தொழிலாளர்கள் காடுகளில் பணிபுரிவோர்கள், மீனவர்கள், பீடிசுருட்டுபவர்கள், துணி நெய்பவர்கள், கட்டிட வேலையாட்கள், குப்பை பொறுக்குபவர்கள் அடங்குவர். இந்த தொழிலாளர்கள் பல்வேறு வேலைகளில் மற்றும் பொறுப்புகளில் ஈடுபட்டுள்ளனர். தங்களுக்கென்று ஒரு குறிப்பிட்ட பணிதருபவர் இல்லாமல், தங்களுக்கு எந்த வேலை உத்திரவாதமும் (பணி பாதுகாப்பு) இல்லாமல் தங்களுக்கு உள்ள சொற்ப சொத்து மற்றும் கைத்திறனில் ஒரு வாழ்க்கைத் தேடி அலைகின்றனர்.

அமைப்புச் சாரா பெண் தொழிலாளர்கள் மற்றொரு சமூக பிரச்சனை. பெண்கள், அமைப்புச் சாரா தொழிலாளர்களில் அதிக எண்ணிக்கையில் உள்ளனர். தற்பொழுது அவர்களின் பணி நிலைமைகள் உயர்த்தப்பட முயற்சி மேற்கொள்ளப்பட்டு வருகிறது. அது வீட்டு வேலைகள் செய்வோரது குழந்தைகளைப் பராமரிக்க பால்வாடிகள், அங்கன்வாடிகள் உருவாக்கப்பட்டுள்ளன. அவைகள் அமைப்பு சாரா பெண் தொழிலாளிகளின் குழந்தைகளை பொறுப்பெடுத்துக் கொள்கிறது. இந்தியாவில் அமைப்பு சாரா பணியாளர்களில் 39.7. சதவீதம் பேர் வறுமை கோட்டிற்குக் கீழே உள்ளனர்.

### இடம் பெயர்ந்த தொழிலாளர்கள்

இந்தியா மிகப்பெரிய நாடு. இதில் பெருமளவு மக்கள் எழுத்தறிவற்றவர்களாய், வேலையில்லாதவர்களாய் மற்றும் திறனற்ற வேலையாட்களாய் மிகுந்த ஏழ்மையில் உள்ளனர். பிராந்திய ஏற்றதாழ்வுகள் இந்த பிரச்சனையை மேலும் அதிகரிக்கச் செய்கிறது. பலர் தங்கள் இருப்பிடத்தில் வருவாய் ஈட்டும் வாய்ப்பு கிடைக்காமல், அடிக்கடி ஏற்படும் வறட்சி, பஞ்சம் மற்றும் ஏனைய சீரழிவுகளால் வேறு இடங்களுக்கு புலம் பெயர்ந்து செல்ல நேரிடுகிறது. இப்பிரிவு மக்கள் எப்போதும் நாடோடிகளாக பல்வேறு இடங்களுக்கு சென்று வேலை வாய்ப்புகளைத் தேடுகிறார்கள். அத்தகைய புலம் பெயர்ந்தோர், சாலை அமைத்தல், கல்குவாரி மற்றும் செங்கல் சூளை, சுரங்கத் தொழில், மரம் வெட்டுதல், மற்றும் பல ஆபத்தான வேலைகளில் தங்களை ஈடுபடுத்திக் கொள்கிறார்கள். அவர்களில் ஒரு சிலர் வீட்டு வேலை, சிலர் சிற்றுண்டி

சாலைகளில் மற்றும் பல நிறுவனங்களில் எடுபிடிகளாய் வேலை செய்கிறார்கள்.

இடம் பெயர்ந்தோர் வேலைவாய்ப்பில், ஏற்ற ஊதியம் கிடைப்பதில்லை. அவர்களுக்கு உயிருக்கு எந்த பாதுகாப்பும் (உத்திராவதம்) கிடையாது. அவர்கள் சுகாதாரமற்ற, தற்காலிக குடியிருப்புகளில், சுத்தமில்லாத தண்ணீர், சத்து இல்லாத ஆகாரம் இவற்றோடு வாழவேண்டிய கட்டாயத்தில் உள்ளனர். அவர்களது சுகாதாரத்திற்கும், அவர்கள் பிள்ளைகளின் கல்வி மற்றும் பாதுகாப்பிற்கும் எந்தவித வாய்ப்பும் கிடையாது.



இடம் பெயர்ந்த தொழிலாளர்கள்

இவர்கள் எப்போதும் ஒப்பந்தக்காரர்களால் தொடர்ந்து சுரண்டப்படுகிறார்கள். அவர்கள் மொழி தெரியாத இடங்களில் வேலை செய்வதால், அவர்கள் கண்டிப்பாக எதையும் கேட்கமுடியாமல் மற்றும் வேண்டிய தீர்வுகளையும் பெற முடியாமல் போகிறது. ரேஷன் கார்டுகள் (குடும்ப அட்டை ) மற்றும் பொது விநியோக முறையில் வழங்கப்படும் பயன்கள் அவர்களுக்கு எட்டாத ஒன்று என்பது ஒரு உண்மையாகும். உண்மையில் இடம்பெயர்ந்த வேலையாட்கள் பெரும்பாலும் கொத்தடிமைகளாக நடத்தப்படுகிறார்கள்.

உலகமயமான பொருளாதாரச் சூழலில், தமிழ்நாடு கட்டுமான வளர்ச்சியில் ஒரு மிகப்பெரிய முன்னேற்றத்தை அடைந்து கொண்டிருக்கிறது. பரந்த நெடுஞ்சாலைகள், தொழிற்சாலைகள், வர்த்தகமையங்கள் மற்றும் நிறுவனங்களுக்கான மிகப்பெரிய கட்டிடங்கள் விரைவாக தோன்றுகின்றன. ஆனால் விரிவடையும் பொருளாதார சூழ்நிலையில், வேலையாட்களின் நிலைமைகள் கண்டுகொள்ளாமல் இருப்பது அல்ல. வளர்ச்சித் திட்டங்களில் ஈடுபட்டுள்ளவர்களில் பாதிக்கு மேற்பட்டவர்கள் இடம் பெயர்ந்த தொழிலாளர்கள். அரசு மற்றும் அரசு சாரா நிறுவனங்கள் இப்போது, இடம் பெயர்ந்த தொழிலாளர்களின் சீர்கேடான நிலைமைகளைக் கண்டு விழிப்படைந்துள்ளன. பணிச்சூழல், ஏற்ற ஊதியம், வாழும் நிலைமை மற்றும் குழந்தைகளின் கல்வி போன்ற சமூக பாதுகாப்புத் திட்டங்களுக்கு முயற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன. ஆனால் இன்னும் அதிகம் செய்ய வேண்டியுள்ளது.

## திரு நங்கையர் (Transgender)

1970ஆண்டுகளில் டிரான்ஸ்ஜென்டர் என்ற குறியீட்டுச் சொல் பரவலாக வழக்கில் கையாளப்படலாயிற்று. இந்தச் சொல் ஆண் – பெண் ஆகிய இருபாலராகவும் இல்லாதவர்கள், அப்படியே தொடர விரும்புவர்களைச் குறிப்பதாக அமைந்துள்ளது. 1980–ல் பிறவியிலேயே ஆண் – பெண் பாலினங்களில் வராத அனைத்து மனிதர்களின் குறியீட்டுப் பெயராக டிரான்ஸ்ஜென்டர் என்ற சொல் அதிகாரபூர்வமாக நடைமுறைக்கு வந்தது. இதே பிரிவினரை திருநங்கையர் என்று தமிழில் அழைக்கிறோம்.

## திருநங்கையருக்கான அரசின் கொள்கைகள்

திருநங்கையரை தனியான மூன்றாவது பால் பிரிவினராக ஏற்றுக் கொண்டு அவர்களுக்கு குடும்ப அட்டைகளை வழங்கி, முதல் மாநிலமாகத் தமிழ்நாடு சிறப்புப் பெற்றுள்ளது. இப்போது கடவுச் சீட்டு (Passport) பெற விண்ணப்பிக்கும்போது ஆண்–பெண்–திருநங்கையர் என்று மூன்று

பாலினங்களில் ஏதேனும் ஒன்றைக் குறிப்பிடும் வசதியும் செய்யப்பட்டுள்ளது.

### திருநங்கையருக்கான திருமணத் தகவல் மின்வலை

உலகிலேயே முதன்தலாக திருநங்கையருக்கு என திருமணத்தகவல் மின்வலை (Website) சென்னையில் துவங்கப்பட்டுள்ளது. திருநங்கை நெட் (Thirunangai.net) என்பது தமிழ் மொழி பேசும் திருநங்கைக்கான திருமணத் தகவல் இணையதளமாகும். இவர்களில் திருநங்கையர் (Transwomen) எனப்படுவோர் உடலால் முழுமையான பெண்களாக இல்லாவிட்டாலும், மனதாலும், உணர்வாலும் தங்களை பெண்களாகவே கருதிக் கொள்பவராவர். இதற்கு முழுமை தேடும் வாழ்க்கைப் பயணத்தில் அவர்கள் பெரும் போராட்டங்களைச் சந்திக்க வேண்டியுள்ளது. உறுதியுடன் தொடர்பவர்கள் வெற்றிபெறுகிறார்கள்.

### தமிழ்நாட்டில் திருநங்கையருக்கான முன்மாதிரிக் கிராமங்கள்

இந்தியாவிலேயே முதன்முறையாக தமிழகத்தில் கடலூர் மாவட்ட நிர்வாகம் திருநங்கையர்களுக்கு மறுவாழ்வு அளிக்கும்பொருட்டு, முன்மாதிரிக் குடியிருப்புகளை அமைக்க முன்வந்துள்ளது. திருநங்கையருக்கு, அதிகார பூர்வமாக மூன்றாவது பாலின அந்தஸ்தை அளித்த ஒரே மாநிலம் தமிழகம் ஆகும்.

கடலூர், பண்ருட்டி, சிதம்பரம் போன்ற இடங்களில் திட்டமிடப்பட்டுள்ள முன் மாதிரி திருநங்கையர் கிராமங்கள் திருநங்கையரைக் குடியமர்த்தி, திருநங்கையருக்கான அரசினால் புதியதாக உருவாக்கப்பட்டுள்ள திருநங்கையர் நலவாரியத்தில் பல்வேறு நல திட்டங்களை தங்குதடையின்றி நிறைவேற்ற உதவியாக அமையும். கடலூரில் இரண்டு ஏக்கர் நிலம், வருவாய்த்துறை அதிகாரியால் ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளது. இங்கு திருநங்கையர் ஒவ்வொருவருக்கும் 3 சென்ட் வீட்டுமனையும், அதில் 308 சதுர அடியில் வீடுகள் கட்டிக்கொள்ள கடனுதவியும் தரப்படவுள்ளன. எதிர்பார்க்கப்படும் பயனாளிகள் இந்தக் கிராமங்களில் குடியேறிய பின், குடும்பஅட்டை, வாக்காளர் அட்டை, மருத்துவப் பாதுகாப்பு போன்ற அனைத்து வசதிகளும் செய்து தரப்பட உள்ளன.



### கல்வி

அரசுக் கல்லூரிகளில் திருநங்கையருக்கு அனுமதியளிக்கும் அரசாணை தமிழக அரசால் கொண்டு வரப்பட்டுள்ளது. நாட்டிலேயே முதல் முறையாகத் திருநங்கையருக்கு கல்லூரிகளில் இடமளிக்கும் அரசாணையை மாநில உயர்கல்வித்துறை வெளியிட்டுள்ளது. திருநங்கையருக்கு வேலை வாய்ப்பை அதிகரிப்பதற்காக அவர்களுக்கு கணினிப் பயிற்சியை அளிக்கவும் தமிழக அரசு முன்வந்துள்ளது.

### முடிவுரை

நமது அரசியலமைப்பின் முகப்பும், வழிகாட்டு நெறிகளும், நியாயமான சமூக அமைப்பை நோக்கியும், வளம்–வாய்ப்பு ஆகியவற்றை நியாயமான பங்கீடு செய்வதை நோக்கியும் தெளிவாகக் குறித்துள்ளன. ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகத் தொடரும் பாரபட்சமான

நிலைமை, அன்னியர் ஆட்சி, அறியாமை, மூடநம்பிக்கைகளால் தோற்றுவிக்கப்பட்டுள்ள பகுத்தறிவுக்குப் பொருந்தாத, சமத்துவமற்ற நிலைகளும், இந்திய மற்றும் தமிழக சமூகத்தில் தோற்றுவிக்கப்பட்டுள்ளன. அரசியல் சுதந்திரம், சமூகப் பொருளாதாரச் சுதந்திரத்திற்கு வழி வகுக்கிறது. இங்கு சுதந்திரம் என்பது சமத்துவமற்ற நிலையிலிருந்தும், சுரண்டப்படும் நிலையிலிருந்தும் விடுதலை பெறுவது ஆகும். சமூக நீதிக்காகவும், பொருளாதார நீதிக்காகவும், இந்திய அரசும், தமிழக அரசும் பல திட்டங்களைக் கொண்டு வந்துள்ளன. தன்னார்வத் தொண்டு நிறுவனங்களும், மாணவர் உள்ளிட்ட பொதுமக்களும், இத்தகைய திட்டங்கள் வெற்றிபெற ஆதரவளித்து உதவிடவேண்டும்.

## பயிற்சி

### அ. சரியான விடையை தேர்ந்தெடுத்து எழுது.

1. பிராமணர் அல்லாதவர்களுக்கு விடுதியை நடத்தியவர்.

   அ) பிட்டி தியாகராஜச் செட்டி ஆ) டாக்டர்.டி.எம் நாயர்

   இ) சி. நடேச முதலியார் ஈ) டாக்டர்.அம்பேத்கார்

2. டாக்டர். முத்துலக்ஷ்மி அவர்களால் முடிவுக்கு வந்தது.

   அ) சாதி முறை ஆ) மிராசுதாரி முறை

   இ) தேவதாசி முறை ஈ) பிராமணர் அல்லாதோர் இயக்கம்

3. சுயமரியாதை இயக்கத்தை நடத்தியவர்.

   அ) காமராசர் ஆ) சி.என். அண்ணாதுரை

   இ) பெரியார் ஈ) டாக்டர்.டி.எம்.நாயர்

4. மாநில சமூக இடஒதுக்கீடு கொள்கையில், அடிப்படை உரிமையில் முதல் சட்டதிருத்தத்தை கொண்டு வந்தவர்.

   அ) வி.வி. சுப்பிரமணிய ஐயர் ஆ) மகாத்மா காந்தி

   இ) டாக்டர்.முத்துலட்சுமி ஈ) பண்டித ஜவஹர்லால் நேரு

5. பஞ்சமர் நில சட்டத்தின்படி நிலங்கள் வழங்கப்பட்டது

   அ) பிராமணர் ஆ) அர்ச்சகர்

   இ) கோயில் ஈ) ஆதிதிராவிடர்

### ஆ. சுருக்கமாக விடையளி.

1. தமிழ் நாட்டில் சமுதாயத்தில் காணப்படும் சமத்துவமின்மைகள் யாவை ?
2. பக்தி இயக்கத்தின் விளைவுகள் யாவை ?
3. நீதிக்கட்சி பற்றி சிறு குறிப்பு வரைக.

4. வர்ணா முறை மற்றும் சாதி முறையை கண்டித்தவர்கள் யாவர் ?

5. சுயமரியாதை திருமணங்கள் என்றால் என்ன ?

6. குழந்தை தொழிலாளர்–வரையறு ?

## இ. பத்தியளவில் விடையளி.

1. தமிழ் நாட்டில் காணப்படும் சில சமூகப் பிரச்சனைகளைக் குறிப்பிடு.
2. தீண்டாமையை பற்றி கூர்ந்து ஆய்வு செய்க.
3. குழந்தைத் தொழிலாளர்கள் தடுப்பில் அரசின் பங்கு யாது ?
4. தமிழ்நாட்டில் திருநங்கையர்கள் பற்றி குறிப்பு எழுதுக.
5. முறை சார தொழில் முறை பற்றி விளக்கு.

# பொருளியல்

## 1. தேவையும் அளிப்பும்

ஒவ்வொரு மனிதனின் வாழ்க்கையிலும் பொருளியல் முக்கியப் பாங்காற்றுகிறது. நமது அன்றாட நடவடிக்கைகளில் நாம் தேவை என்ற கருத்தை அடிக்கடி பேசக்கேட்கிறோம். இந்தத் தேவை என்பது எதைக் குறிக்கிறது? தேவை என்பது ஒரு விருப்பமே. ஆனால் பொருளியலில் வெறும் விருப்பம் மட்டும் தேவையாகாது. வாங்கும் சக்தியுடன் கூடிய விருப்பமே பொருளியலில் தேவை எனப்படும். வேறு வகையில் கூறுவோமேயானால் விருப்பத்தை நிறைவேற்றக் கூடிய சக்தி (பணம்) இருந்தால் மட்டுமே அவ்விருப்பம் தேவை ஆகும்.

தேவையை தேவைப்பட்டிலின் துணையோடு விளக்கலாம்.

1. என்ன தேவைப்படுகிறது ?
2. எப்போது தேவைப்படுகிறது ?
3. எங்கே தேவைப்படுகிறது ?
4. என்ன விலையில் தேவைப்படுகிறது ?

மேற்காணும் வினாக்களுக்கு விடை கொடுக்கும் பட்டியல் தேவை எனப்படும்.

எடுத்துக்காட்டாக சென்ற வாரம் ராம் என்பவர் திருச்சியில் ஒரு டஜன் ரூ.50/– வீதம் 2 டஜன் கைத்துடைப்பான்களை வாங்கினார்

கொடுக்கப்பட்ட பட்டியலில் இருந்து மேற்காணும் வினாக்களுக்கு விடை காண்க

**செயல்பாடு**

உங்களுக்கு பிடித்தமான பொருட்களுக்கு தேவைப்பட்டியல் தயாரிக்கவும்

எனவே தேவை என்பது பொருளை வாங்கும் மக்களிடமிருந்து எழுவதாகும். அவர்கள் நுகர்வோர் எனப்படுவர். மக்களுக்கு மீன் போன்ற விரைவில் அழுகக்கூடிய பண்டங்களும் நாற்காலி போன்ற அழுகாப் பண்டங்களும் தேவைப்படுகின்றன. எல்லாப் பண்டங்களுக்கான தேவையும் விலையைப் பொருத்தே அமையும். எனவே விலைதான் தேவையைத் தீர்மானிக்கும் முக்கியக் காரணியாகும். விலை தவிர தேவையைத் தீர்மானிக்கும் வேறு சில காரணிகளாவன.

1. நுகர்வோரின் சுவைகளும் மற்றும் விருப்பங்களும்
2. பதிலிட்டுப் பண்டத்தின் விலை
3. நுகர்வோரின் எண்ணிக்கை
4. வருங்கால விலைப்பற்றிய எதிர்பார்ப்பு
5. வருமான பகிர்வு
6. பருவகால மாற்றங்கள்

**செயல்பாடு**

டீ, காபிக்கு பதிலியாகும் ஏதேனும் 10 பொருட்களையும் அதன் பதிலிகளையும் எழுதுக

### அளிப்பு

அளிப்பு உற்பத்தியாளர்களிடமிருந்து எழுகிறது. ஒரு குறிப்பிட்ட விலையில் விற்பனைக்கு அளிக்கப்படும் பண்டத்தின் அளவே அளிப்பு எனப்படும்.

ஒரு விற்பனையாளர் ஒரு குறிப்பிட்ட விலையில் எந்த அளவு பண்டங்களை விற்பனைக்கு அளிக்க விரும்புகிறாரோ அதுவே அளிப்பு எனப்படும்.

### அளிப்புப் பட்டியல்

1. என்ன அளிக்கப்படுகிறது ?
2. எங்கே அளிக்கப்படுகிறது ?
3. எப்போது அளிக்கப்படுகிறது ?
4. என்னவிலையில் அளிக்கப்படுகிறது ?

மேற்காணும் வினாக்களுக்கு கீழ்காணும் அளிப்புப்பட்டியலிலிருந்து விடை பெறலாம்.

எடுத்துக்காட்டாக ராஜ்என்பவர் ஒரு கிலோ ரூ.50/– வீதம் 2 கிலோ மாம்பழங்களை நேற்றிரவு சென்னை தியாகராய நகரில் விற்றார்.

**செயல்பாடு**

மேலும் சில அளிப்புப்பட்டியல்கள் தயாரித்து அளிப்பை பற்றி தெளிவாகப்புரிந்து கொள்ளவும்.

தேவையைப்போலவே அளிப்பும் விலையைச் சார்ந்தே உள்ளது. விலை தவிர வேறு சில காரணிகளும் அளிப்பைப் பாதிக்கக் கூடியன. அவையாவன.

1. உற்பத்தித் தொழில் நுட்பம்
2. காரணிகளின் விலை
3. பிறப்பண்டங்களின் விலைகள்
4. நிறுவனங்களின் எண்ணிக்கை
5. வருங்கால விலைப்பற்றிய எதிர்பார்ப்புகள்
6. வரிகள் மற்றும் சலுகைகள்
7. பொருளாதாரம் சாராத காரணிகள்

பொருளின் விலை மாறாத போதும் மேற்கூறியுள்ள காரணிகள் அளிப்பை மாற்றக் கூடியன.

**செயல்பாடு**

மத்திய, மாநில அரசின் சில வரிகளைக் கூறவும்.

1)

2)

3)

## தேவை விதியும் அளிப்பு விதியும்

விலை, தேவையைத் தீர்மானிக்கும் முக்கிய காரணி என்பதை பார்த்தோம். விலை எவ்வாறு தேவையைப் பாதிக்கும்? விலைக்கும் தேவைக்கும் இடையே நிலவும் உறவு முறை யாது? இந்த உறவு முறை அல்லது தொடர்பே தேவை விதியில் விளக்கப்படுகிறது.

## தேவை விதி

விலை உயர்ந்தால் தேவை குறையும், விலை குறைந்தால் தேவை உயரும். விலைக்கும் தேவைக்கும் இடையே உள்ள தலைகீழ் தொடர்பை தேவை விதி விளக்குகிறது.

## மார்ஷலின் தேவை விதி

ஆல்பிரடு மார்ஷலின் கூற்றுப்படி, நிறையப் பண்டங்களை விற்க வேண்டுமாயின் விலை குறைவாக இருக்கவேண்டும். அவ்வாறு விலை குறைவாக இருந்தால்தான் அப்பண்டத்தைப் பலரும் வாங்குவர். வேறு விதமாகக் கூறினால் விலை குறைவதால் தேவைப்படும் பண்டத்தின் அளவு கூடுகிறது. விலை கூடுவதால் தேவை குறைகிறது.

கீழ்காணும் தேவை அட்டவணை விலைக்கும் தேவைக்கும் உள்ள தலைகீழ் தொடர்பை விளக்குகிறது.

| விலை (ரூபாயில்) | தேவை (கி.கிராமில்) |
|---|---|
| 25 | 1 |
| 20 | 2 |
| 15 | 3 |
| 10 | 4 |
| 5 | 5 |

ஒரு நுகர்வோர் பல்வேறு விலைகளில் வாங்க விரும்பும் பல்வேறு அளவுகளை அட்டவணை விளக்குகிறது.

ஒரு கிலோ மாம்பழத்தின் விலை ரூ.25/– எனில் நுகர்வோர் ஒரு கிலோ வாங்குவர் , விலை ரூ.25/–லிருந்து ரூ..20/–, ரூ.15/–, ரூ.10/–, ரூ.5/– என்று குறைந்துகொண்டே போகும்போது நுகர்வோரின் தேவை 2 கி , 3 கி, 4 கி , 5 கி என்று அதிகரித்துக்கொண்டே போகிறது. விலைக்கும், தேவைக்கும் உள்ள தலைகீழ் உறவை இது தெளிவாக்குகிறது.

**செயல்பாடு**

உன் நண்பரிடமிருந்து அவர் உபயோகிக்கும் சில பொருட்களுக்காக தேவை அட்டவணையைத் தயாரிக்கவும்.

**விதிவிலக்கு**

அரிசி போன்ற அடிப்படைப் பண்டங்களுக்கும், வைர ஆபரணங்கள் போன்ற ஆடம்பரப் பண்டங்களுக்கும் இவ்விதி பொருந்தாது. இப்பண்டங்களுக்கான விலை உயரும்போது தேவை உயரும். விலை குறைய தேவையும் குறையும்.

**செயல்பாடு**

ஒரு மாதிரி கணக்கெடுப்பு மூலம் அடிப்படை, வசதி மற்றும் ஆடம்பரப் பண்டங்களுக்கான விலை, தேவை உறவைக் காண்க.

அளிப்பு விதி விலை அளிப்பைத் தீர்மானிக்கும் முக்கியக் காரணியாய் உள்ளதால் விலை அளிப்பைப் பாதிக்கிறது. இதை அளிப்பு விதியின் மூலம் விளக்கலாம். அளிப்பு விதி விலைக்கும், அளிப்புக்கும் உள்ள தொடர்பை விளக்குகிறது.

**அளிப்பு விதி**

மற்றவை மாறாத நிலையில் ஒரு பண்டத்தின் விலை உயர்ந்ததால் அளிப்பும் அதிகரிக்கும். அதே சமயம் விலை குறைந்ததால் அளிப்பும் குறையும்.

வேறுவகையில் கூறுவோமேயானால் விலைக்கும் அளிக்கப்படும் பண்டத்தின் அளவுக்கும் இடையே நேரடித் தொடர்பு நிலவுகிறது. விற்பனைக்கு அளிக்கப்படும் பண்டத்தின் அளவு அதன் விலையுடன் நேரடித் தொடர்பு கொண்டது. அதாவது விலை உயர்ந்தால் விற்பனைக்கு அளிக்கப்படும் பண்டத்தின் அளவும் உயரும். விலை குறைந்தால் விற்பனைக்கு அளிக்கப்படும் பண்டத்தின் அளவும் குறையும்.

| விலை (ரூபாயில்) | அளிப்பு (கி.கிராமில்) |
|---|---|
| 10 | 1 |
| 20 | 2 |
| 30 | 3 |
| 40 | 4 |
| 50 | 5 |
| 60 | 6 |

இந்த அட்டவணையில் கோதுமையின் விலை கிலோ ஒன்றுக்கு ரூ.10/–ஆக உள்ளபோது அளிப்பு 1 கிலோவாக உள்ளது. விலை கிலோ ஒன்றுக்கு ரூ.20, ரூ.30, ரூ.40, ரூ.50, மற்றும் ரூ.60 என உயரும்போது கோதுமையின் அளிப்பும் 1 கிலோவிலிருந்து 2 கி, 3 கி, 4 கி, 5 கி, மற்றும் 6 கி என உயர்கிறது. விலை உயர அளிப்பும் உயர்வதை இது தெளிவாக்குகிறது.

**செயல்பாடு**

நீ விரும்பும் சில பொருட்களுக்கு அளிப்பு அட்டவணை தயாரிக்கவும்.

## பயிற்சி

### அ. சரியான விடையைத் தேர்ந்தெடு.

1. இவற்றிற்கிடையே தலைகிழான உறவுக் காணப்படுகிறது.

அ) விலை மற்றும் தேவை ஆ) விலை மற்றும் அளிப்பு

இ) விலை மற்றும் வருமானம் ஈ) விலை மற்றும் வரி

2. தேவை விதி இதற்கு மட்டும் பொருந்தும்

அ) அத்தியாவசியப் பண்டங்கள் ஆ) வசதிப் பண்டங்கள்

இ) ஆடம்பரப் பண்டங்கள் ஈ) மிகவும் விலை குறைவான பண்டங்கள்

3. தேவையை தீர்மானிக்கும் காரணிகளில் ஒன்று

அ) சுவை மற்றும் விருப்பம் ஆ) உற்பத்தி தொழில்நுட்பம்

இ) உற்பத்தியளர்களின் எண்ணிக்கை ஈ) உற்பத்திக் காரணிகளின் விலை

## ஆ. சிறு குறிப்பு வரைக.

1. தேவை விதி குறித்த ஆல்பிரட் மார்ஷலின் இலக்கணத்தை எழுது.
2. அளிப்பு விதி இலக்கணம் தருக.
3. அளிப்பைத் தீர்மானிக்கும் காரணிகள் யாவை ?

## இ. ஒரு பத்தியில் விடையளி.

1. தேவை விதியை தேவை அட்டவணைக் கொண்டு விளக்கு.

## 2. சமநிலை விலை

விலைக்கும், தேவைக்கும் இடையேயுள்ள தொடர்பும் விலைக்கும் அளிப்புக்கும் இடையே உள்ள தொடர்பும் முந்தைய பாடத்தில் விளக்கப்பட்டது. தேவை விதியும், அளிப்பு விதியும் இந்த தொடர்பை விளக்கின.

பல்வேறு விலைகளில் தேவைப்படும் பண்டத்தின் அளவை தேவைப்பட்டியலும் அளிக்கப்படும் பண்டத்தின் அளவை அளிப்புப் பட்டியலும் விளக்குகின்றன. ஒரு குறிப்பிட்ட விலையில் தேவைப்படும் பண்டத்தின் அளவும் அளிக்கப்படும் பண்டத்தின் அளவும் சமமாகும். இந்த விலையில் வாங்கப்படும் அளவும் (தேவை) விற்கப்படும் அளவும் (அளிப்பு) சமமாகும் . இவ்வவிலையே சமநிலை விலை எனப்படும். பின்வரும் அட்டவணை மூலம் இதனை விளக்கலாம்.

| விலை (ரூபாயில்) | தேவை (கி.கிராமில்) | அளிப்பு கி.கிராமில் |
|---|---|---|
| 20 | 5 | 1 |
| 40 | 4 | 2 |
| 60 | 3 | 3 |
| 80 | 2 | 4 |
| 100 | 1 | 5 |

ஒரு கிலோ மாம்பழத்தின் விலை ரூ.20 ஆக உள்ளபோது தேவை 5 கிலோ ஆகவும் அளிப்பு 1 கிலோவாகவும் உள்ளது. விலை ரூ.40, ரூ.60, ரூ.80 , மற்றும் ரூ.100 என அதிகரிக்கும்போது மாம்பழத்தின் தேவை 4 கி, 3 கி , 2 கி , மற்றும் 1 கி என்று குறைந்தும், மாம்பழத்தின் அளிப்பு 2 கி , 3 கி , 4 கி , மற்றும் 5 கி என அதிகரித்தும் செல்கிறது. ஒரு குறிப்பிட்ட விலையில் மாம்பழத்தின் தேவையும், அளிப்பும் சமமாகிறது. கிலே ரூ.60 என்ற விலையில் தேவையும் அளிப்பும் சமமாகி 3 கிலோவாக உள்ளது. இந்த விலை சமநிலை விலை (ரூ.60) என்றும் இந்த அளவு (3கி) சமநிலை அளவு என்றும் கூறப்படும்.

விலை சமநிலை விலையைவிட அதிகமானால் அதாவது கிலோ ரூ.80 ஆனால் அளிப்பு தேவையைவிட அதிகமாக இருக்கும். விற்பனையாளர்கள் 4 கிலோ விற்க விரும்புவர். ஆனால் நுகர்வோர் இந்த விலையில் 2 கிலோ மட்டுமே வாங்க விரும்புவர் எனவே அளிப்பு தேவையைவிட 2 கிலோ அதிகமான உள்ளது. இது மிகை அளிப்பு எனப்படும். மிகை அளிப்பை விற்றுத் தீர்க்க விற்பனையாளர்கள் விலையை கிலோ ரூ.60 க்கு குறைப்பர்.

விலை சமநிலை விலையைவிடக் குறைந்தால் அதாவது கிலோ ரூ.40 ஆனால் தேவை அளிப்பைவிட அதிகமாயிருக்கும் இந்த விலையில் வாங்குவோர் 4 கி வாங்க விரும்புவர் ஆனால் விற்போர் 2 கி மட்டுமே விற்க விரும்புவர். இங்கு தேவை மிகையாகிறது. போட்டியின் காரணமாக வாங்குவோர் அதிக விலை கொடுக்க முன்வருவர். எனவே விலை ரூ.60 ஆக உயரும். இவ்வாறு விலை சமநிலை விலையை விடக் கூடினாலும், குறைந்தாலும் தேவையும் அளிப்பும் அதற்கேற்ப மாறி சமநிலை விலையை மறுபடியும் நிலை நிறுத்தும் இது அங்காடி சமநிலை எனப்படும்.

### சமநிலை விலையில் ஏற்படும் மாற்றங்கள்

புகழ்பெற்ற பொருளாதார நிபுணர் ஆன ஆல்பிரட் மார்ஷல் சமநிலை விலையில் காலத்தின் பங்கினை விளக்கியுள்ளார். மார்ஷல் காலத்தை மூன்று வகைப்படுத்தியுள்ளார்.

**1. அங்காடிக்காலம் அல்லது மிகக் குறுகிய காலம்**

இந்த மிக்ககுறுகிய காலம் என்பது தேவை மாற்றத்திற்கேற்ப அளிப்பை மாற்ற முடியாத காலம் ஆகும்

**2. குறுகிய காலம்**

தேவை மாற்றத்திற்கேற்ப அளிப்பை ஓரளவு மாற்றியமைக்க இயலும் காலம்.

### 3. நீண்டகாலம்

தேவை மாற்றத்தை முழுமையாக அளிப்பு மாற்றத்தால் சந்திக்க இயலும் காலம்

### அங்காடிக்காலத்தில் விலை நிர்ணயம்

இக்காலத்தில் அளிப்பு நிலையானது. எனவே தேவை உயர அளிப்பு உயராத காரணத்தால் விலை உயரும். தேவை குறைந்தால் விலை குறையும். எனவே அங்காடிக்காலத்தில் தேவையே விலையினை தீர்மானிக்கும் காரணியாகும்.

### குறுகிய காலத்தில் விலை நிர்ணயம்

இக்காலத்தில் அளிப்பை ஓரளவுக்கு உயர்த்த முடியும். ஆனால் முழு தேவை உயர்வையும் சரிக்கட்டும் அளவிற்கு அளிப்பை உயர்த்த முடியாது. இக்காலத்தில் அளிப்பு சிறிது மட்டுமே மாறுவதால் தேவை உயர்வு ஒரு சிறுவிலை உயர்வையும், (அங்காடிக் காலத்தை விட குறைவான உயர்வு) தேவைக்குறைவு சிறு விலை குறைவையும் (அங்காடிக்காலத்தைவிட குறைவான குறைவு) உண்டாக்குகிறது.

## பயிற்சி

### அ. சரியான விடையைத் தேர்ந்தெடு.

1. சமநிலை விலை கீழ்க் கண்டவற்றுள் எதனை சமன் படுத்துகிறது.

அ) தேவை மற்றும் அளிப்பை　　ஆ) தேவை மற்றும் வருமானத்தை

இ) அளிப்பு மற்றும் உற்பத்தியை　　ஈ) தேவை மற்றும் பயன்பாட்டை

2. அளிப்பு நிலையாக இருக்கும் காலம்.

அ) மிகக் குறு கிய காலம்　　ஆ) குறு கிய காலம்

இ) நீண்ட காலம்　　ஈ) மிக நீண்ட காலம்

### ஆ. சிறு குறிப்பு வரைக.

1. சமநிலை விலை என்றால் என்ன ?
2. குறு கிய காலம் என்றால் என்ன ?

### இ. ஒரு பத்தியில் விடையளி.

1. சமநிலை விலை எவ்வாறு தீர்மானிக்கப்படுகிறது.